# சர்வார்த்த
# சிற்பசிந்தாமணி.

இஃது,

கூடலூர் ம-௱-௱-ஸ்ரீ,

புரோகிதம் இராமைய ஜோதிஷரவர்கள்

வேண்டுகோளின்படி,

சென்னை, இராயபுரம்,

ஜோதிஷகணித மஹாவித்வாம்ஸராகிய

ம-௱-௱-ஸ்ரீ,

சுப்பிரமணிய முதலியாரவர்கள் தலைமயனார்

ம-௱-௱-ஸ்ரீ, சடையப்பமுதலியாரவர்கள் குமாரர்

ஜோதிஷம்

**வீராசாமிமுதலியாரவர்களால்**

ஜோதிஷருக்கும் மற்றனைவருக்கும்மிகவெளிதிற்

உபயோகமாகும்படிவசனரூபமாக இயற்றப்பட்டது,

கோளப்பஞ்சேரி

**செல்லப்பமுதலியாரவர்களாற்**

தமது சென்னை,

ஜீவகாருண்யவிலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.



விலை] 1915 [ரூபா 2-0-0

௮-அணுஸ்டாம்பு,

## எடிடர் பாதித்தியநகல்

1422

1915ம் ஸ்ரீ ஜூன்மீ 1உ தேதி சென்னப்பட்டணம்பெத்துநாய்க்கன்பேட்டை நம்மாழ்வார்தெருவு 55-வது நெம்பர் வீட்டி லிருக்கும் வேளாள ஜாதி விஷ்ணுமதம் ஜீவகாருண்யவிலாசம் பிரஸ் புரொப்ரையிடர் ஜீவனம் கோளப்பஞ்சேரி. முத்தியா முதலியார் குமாரர், கோ. செல்லப்பமுதலியார் அவர்கட்கு ஷெ பட்டணம் இராயபுரம் வடவண்டை மாதாகோவிலைச்சார்ந்த பிள்ளையார்கோவில்சந்து 3-வது நெம்பர்வீட்டிலிருக்கும் குருகுலமுதலி ஜாதி சிவமதம் ஸ்காடிஷ்பிரஸில் ஸ்டோர்கீபர் ஜீவனம் உபாத்தியாயர் சோதிடகணித, மகாவித்வாம்ஸர் சுப்பிரமணிய முதலியார் தமையனார் சடையப்பமுதலியார் குமாரர் சோதிடகணிதம், வீராசாமிமுதலியார் யெழுதிக்கொடுத்த கறர்நாமா, யென்னவென்றால் 1887-ம் வருஷத்தில் யென்பேரால் ரிஜிஸ்டர் காபிரைட், செய்து நான் அனுபவித்துக்கொண்டுவந்த 'சிற்பசிந்தாமணி' யென்னும் பெயரையுடைய புத்தகத்தை அதற்குண்டான சகல சுதந்திரங்களையும் தங்களுக்குநான் சுத்தகிறயமாய் தீர்மானித்த ரூபா 50. யிந்த எழுத்தால்ரூபாய் ஐம்பதும் தங்களிடம் யின்றையதேதியில்நான் பெற்றுக்கொண்டேனாகையால் யினியெனக்கும் யிந்த சிற்பசிந்தாமணி, யென்னும் புத்தக ரிஜிஸ்டர் ரேஷனுக்கும் யாதொருபாத்தியதையும் அக்கும் கிடையாது இன்றையதேதிமுதல் யென்பெயரையும் யென் குறிப்புள்ள போடோவையும் வைத்து தங்களுக்கு வேண்டுமானபதிப்புகள் அச்சிட்டு அனுபவித்துக் கொள்ள வேண்டியது உங்கள் அனுமதியன்றிவேறொருவர் மேற்கண்டபேருடைய புத்தகத்தை அச்சிடுவார்களேயானால் அதானால்தங்களுக்கு நேரிடும் சகல நஷ்டத்தையும் அவர்களைப் பொருந்தினதே யொழிய யெனக்குயாதொரு அக்கும் கிடையாது நான் இன்றையதேதிமுந்தியாகிலும்பிந்தியாகிலும் வேறொருவருக்கும் மேற்கண்ட புஸ்தகத்தை அச்சிடும்படி யெவ்வித அனுமதியும் கொடுக்க யெனக்குரைட்கிடையாது அப்படியொருக்கால் நான்கொடுத்ததாக தங்களுக்கு தெரிந்துசாக்ஷிகள் சகிதமாய்ரூபிப்பீர்களானால் அதனால் நேரிடும் நஷ்டங்களுக்கு நான் உத்தரவாதியாகுறேன். யிந்தப்படிக்கு யென்மனோராஜியில்சம்மதித்துயெழுதிக்கொடுத்த கிறர்நாமா.

சோதிடர் வீராசாமிமுதலியார்

சாக்ஷி:— பா முனுசாமிமுதலியார்
C. Rathinavelu Mudalear.



உ

ஸ்ரீமீனாக்ஷியருள்பெருக.

இக்கிரந்தம்

# இயற்றினவர் கருத்து.

மாக்ஷிமைதங்கிய கனவான்களுக்கும், தனவான்களுக்கும், கற்றோருக்கும், மற்றோருக்கும், பெரும்பாலும் அறிவிப்பது யாதென்றால்;—

இப்பூவுலகின்கண் இதற்குமுந்திவித்வத்திறம்பொருந்திய சிகாமணிகள் அநேக விதமாகிய மனையடி சாஸ்திரம்போல் இன்னும் அநேகசாஸ்திரங்கள் வெளியிட்டிருப்பதை யநேககோடியைப் பார்த்திருப்பீர்கள். அதுகளெல்லாம் வெண்பாவாகவும் விருத்தமாகவும் செய்துவிட்டு மறைந்தனர், இதுகளெல்லாம் கற்றவாக்கேதவிர மற்றவருக்குக்கிஞ்சித்தேனும் இடங்கிடைப்பதரிது. ஆதலாலென்குருவின் அருட்பிரசாதத்தாலும் தெய்வீக அனுகூலத்தாலும் எனது சிற்றறிவினாலும் அநேககோடிமுன்னோர்கள்செய்தஏட்டுப்பிரதிகளை ஆராய்ச்சிசெய்து தகுந்த செந்தமிழ்ச் சொற்களால் வசனரூபமாய் அடியேன் (சர்வார்த்தசிற்பசிந்தாமணி) யெனப்பெயரமைத்து அனைவர்களும் அறியும்படி வெளிப்படுத்தினேன். ஆனால் இதிற்செப்பிய முக்கியகருத்துகள் யாதெனில்!

அமிர்தசித்தயோகம், நட்சத்திரபலன், தெய்வீகப்பூசை செய்யும்விதி, ஆதாயப்பொருத்தம், ஆதாயச்செலவு. இராசிப்பொருத்தம் இலக்கினபலன், இராகுசாரம், ஈசான்யபலன், உத்திராதி நட்சத்திரம், கதவுநிலைநிறுத்தல், கிணற்றின் ஆழக்குறி, கிணற்றின் அநுபவம், கிணறிருக்குந்திசை, மண்பார்க்கும்நிதானம், குருசாரம், குளிகைகாலம்பார்க்க, கூபவிதி, பசுக்களைக்கட்டும்விதி, கெற்பப் பொருத்தம், கெற்பகிரகம், கேட்டைநட்சத்திரம், கோயில் கோபுரம் கூடம் மனை அளவும், சமதிவட்டான ஓர்பள்ளஞ் செய்து அதிற் பூவும்தண்ணீரும்விட்டுக் குறிபார்க்க, சந்துகுத்தல், சந்திர பலன், சப்தகிரகங்களிற்சூரியசாரம், சனிசாரம், சல்லியம் பதினாறுக்கும், சாதிப்பொருத்தம், சிற்பரிலக்கணம், சித்திரைநட்சத்திரம் சுபகாரியங்கள் செய்ய வேண்டியதற்கு மூன்றுவிதமான நட்சத்திரங்கள், சுக்கிலபக்ஷத்திதி, சுக்கிரசாரம், சுவர்பிளப்பு அல்லது புத்துருசிகா

சங்கராந்திநிர்ணயம். சூத்திரபலன், செலவுபொருத்தம், சென்ம நட்சத்திரம் பார்க்கும்நிலை, சென்மகேந்திர கிரகபலன், க்ஷேத்திர ஆரூடம், சோடச மனைப்பொருத்தம் பார்க்குதல், திசையறிந்து வாசற்கால்வைக்க, துல்யசமம் உயரங்கொள்ள, தென்பாக பலாபலன், தெற்குமுகமான கிரகமாகியும் ஒன்றுமிச்சமாகவரின், தேவதைகள் இருப்பிடமறியுமெந்திரம், தேவாலயச்சிற்பம், தோஷநிவர்த்திகுத்தல்கள், நல்லநாள், நவக்கிரகபலன், வாசற்கால்வைக்கும் நிர்ணயம், நான்குவருணத்தார் கிரகதிசை, நால்வகை வருணத்தார் வாசஞ்செய்ய மனைலட்சணம், நிருதிமூலையின்பலன் நிலநீளம் வைக்கும்விதி, நிலைவைக்க, நீர் உண்டென்பது பொதுவிதியாக உணர்த்தி உடனே மடங்காநீர் உண்டென்றும் கீழ்நீருண்டென்றும் பிரித்து உணர்த்தும், நூலணியும்விதி, நேத்திரபலன், பஞ்சகோணின்றதோஷம், பஞ்சகபலன், பக்கநோக்குநாள், புதசாரம், பூமியைச்சோதித்து வீடுகட்டும்நிதானம், பூதபலன், பூமி சல்லியம், பெண்மரம், பேழைவைக்க, பொருத்தங்கள். மனைக்கேகும் போது சகுனம்பார்க்குதல், மனையில் நிற்கும்போது சகுனம் பார்க்குதல், மனை உயர்வுதாழ்வுலக்ஷணம், மண்சுவை, மனைப்பொருத்தம், மனை முகூர்த்தஞ்செய்ய மாதம், மண்வெட்டி சகுனம், மனைதோஷம் மனைக்கோல ஆகாதநாள், மனைமுகூர்த்தம். மனைகளில் இராஜயோகம், மனைமுகூர்த்தகாலத்தில் குழியில் நீர்விடவேண்டியது. மனை முகூர்த்தஞ்செய்யுமிடத்து சூன்னியம், மரம், மரங்கள்வெட்டதிதி மரங்கள்வெட்டும்விதி, மனைப்பொருத்தம்பார்க்க, மனையகலம் வைக்கவேண்டிய அடிகள், மாடுமுதலானது கொள்ளல் அல்லது கொடுத்தல், முகூர்த்தஞ்செய்யுமிடம். மூலைக்குத்தாகாது, மேற்குப் பலாபலன், வயதுபொருத்தம், வயதுபலன், வம்சபலன். வாயுமூலைபலாபலன், வாஸ்துபுருஷன் நித்திரைவிடுதல், வாரபலன், விசாலலக்ஷணம், விக்கிரகஞ்செய்யலக்ஷணம், வீடுகட்டுகிறநிலம், வீட்டின்சுவர் அளவுவிதி, வீடுகட்டமண், வீட்டின்சாலை, வேறுகிரகப்பிரவேசம், யோகினி, யோகினிப்பொருத்தம், யோனிபலன், யோகபலன் இப்படியாக இந்நூலில் முக்கியமாகிய அம்சங்களை அச்சிட்டு வெளியாக்கினேன். நேசரே ? இந்தக் கிரந்தநில் எதாகிலும் பிழைகளிருந்தால் அதை அன்னம் எப்படி ஜலத்தைப் போக்கிப் பாலை யுண்ணுகிறதோ ! அதுபோலாக இதில் இருக்கப்பட்ட நற்குறிகளை யெடுத்துக்கொண்டு எம்மை ஆதரிப்பீரென உங்கள் கனத்தைக் கோருகின்றேன்.

இதன் விலை ரூபா 2 0 0



உ

சிவமயம்.

# விஷய அகராதி,

# விஷய அகராதி.

விஷயம். பக்கம்.

விஷய அகராதி முற்றிற்று.



உ

பரமபதி துணை.

விஸ்வ கர்மாவாகிய

மயனென்பவர்,

திருவாய்மலர்ந்தருளிய

# சர்வார்த்த சிற்பசிந்தாமணி.

## கடவுள் வணக்கம்.

விருத்தம்.

வேதநான்மறைகளாகி விளங்குமும்மூர்த்தியாகிப்
பூதலந்தனைப்படைத்த புண்ணியன்றாளைப்போற்றி
தீதிலாமயனார்சொன்ன சிற்பசாத்திரமாநூலை
நீதியாய்த்தமிழினாலே நிலை படவுரைக்கலுற்றேன்.

## சிவசுப்பிரமணியர்துதி

கட்டளைக்கலித்துறை

பூமா தவிமண வாளனும் வேதனும் பொன்னுலகந்
தாமா னுமிந்திர ரண்டர் குழாங்களுந் தாழ்ந்திறைஞ்சுங்
காமாப் பொருற்றடமு சூழ்தணி காசலக் கந்தபிரான்
ஏமாத் திருவடி யென்றுமிந் நூற்குத் துணைசெயுமே

## பரமசிவ வணக்கம்.

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

பங்கயன் மாலு மீரேழ் புவனமுந் தேடிக் காணாத்
துங்கவெண் குணமு ளானற் றொல்லுல கனைத்தி னுள்ளுந்
தங்கியெள் ளெண்ணெய் போலத் தழைத்து பூரணம தாகி
யங்கிங்கெனாமலெங்கு மாம்பொரு ளகத்தி லேற்பாம்.

## பராசத்திவணக்கம்.

ஷை வேறுசந்தம்.

பெண்மையெனப் பெயர்படைத்துப் பேர்பதிநாலுலகுதனைப் பெற்ற தில்வாழ், நுண்மைமச காதிமுதனூழில்வரைப் பலவுயிரு

நொசித லின்றித் திண்மையுடன் சஞ்சரித்துச் சீரபோக முந்துய்க் கச் செறிந்தே யூட்டும், வண்மைசிதா காசவெளி மருவுபரா சத்தி யையாம் வணங்கு வோமே.

## திருமால் வணக்கம்,

அகிலவுல கங்கட்கு மாதார மாயமிழ்த வளக மாகி
நிகிலவுயிர் களையாவு நியதியாய் காத்தருளு நீலவண்ணன்
றுகிரிதழ்வாய் மலர்மகளைத் தூயவுரங்கொண்டுதகிதுஞ்சுதற் செய
திகிரிகரச் சீடதரன்றன் றிருவடியை யெந்நாளுஞ்சிந்தைசெய்வா ம

## திருமகள் வணக்கம்.

### கலி விருத்தம்.

பொற்பு சீலம்புக் கில்லினும் பொய்யிலா
கற்பு வாய்ந்தநற் காரிகை பாலினுந்
தற்ப ரனருட் சாரும்பு மானிட
நற்கு ணத்தொடு நாடும்பொ னேத்துவாம்

## கலைமகள் வணக்கம்

### எண்சீர்க்கழி நெடில்விருத்தம்

ஆதிமொழி லாரணத்தின் றனையயாகி யறிவுடையோர்க்க ாதாமம் பகருமாகித் தீதகற்பாவலர்களகந் தேர்ச்சியாகித் தெள் யமும் மூன்றுவியா கரணமாகிக், கோதகல்வை கரிமுதன்மூன றாண லாகிக் குலவுகின்ற வேழ்சுரமச் சுவையு மாகிக் காதலுட னே மலரோன் முகம்வா ழெந்தாய்க் கலைமகணற் கஞ்சத்தாட் கரு த்திலேற்பாம்.

## அவையடக்கம்

வாழைப்பழமும் நெய்யும் பாலும் சற்கண்டும் சர்க்கரையும் கல ந்த அசனத்தில் கற்கிடந்தால் அந்தக்கற்களைமாத்திரம்நீக்கி இன்ப மாகக் கொள்ளுதல்போல் புல்லறிவாளனாகியயான் சொல்லுமிந்நூ லிற் பிழையுரினும் மேலோர் அக்குற்றங்களைக் களைந்து சிரேஷ்ட மாகக்கொள்வது பெரியோர்கடமை.

## சிற்பர் இலக்கணம்

யக்ஞோபவீதம்பஞ்சகச்சை உத்தரீயம்கர்ணகுண்டலம்பவித் திரம் கந்தாக்ஷதைஜபமாலிகை உருத்திராக்ஷம் இவைமுதலியவைக

ளோடு தெய்வபூசையும் நித்திய நைமித்தியகருமங்களையும்உடைய வனுகியும் பொறுமையும் அடக்கமும் நல்லமனமும் சற்குணமும். பொருந்தியிருத்தல் வேண்டும் இப்படிப்பட்ட சிற்பாசாரியன்றி வேறுஜாதியர்கள் தேவாலயம் நகரம் கிராமம் கிரகம் தடாகம் கூபம் மாடமாளிகை முதலியவைகளை செய்தால் அரசருக்கும் கர்த்தாவுக்கும் தோஷமுண்டாவதோடு மனசஞ்சலத்தையும் விளைவித்துக் கொண்டே யிருக்கும்

இதுவும் அது

வேதங்களின் சாரமும் நானுவித மந்திரதந்திரங்களும் முத்திரை லட்சணங்களும் நல்லவாக்கும் வர்ணுசிரதர்மம் ஆசாரகிரமங்களும் சுகுணசுகஞான விவேகங்களும்ஜலலக்ஷணங்களும்பொருந்திய லக்ஷணமும் குலசிரேஷ்டனுகியும் மரம் செங்கல் கல் சுதை நவலோகம் மண் செடி சக்கரைதந்த கிரியையும் எந்திரவிதியும் சித்திர விநானமும் தெரிந்துக்கொள்பவன் சிற்பன்.

# நூன்முகம்.



## மனைக்கேகும்போது சகுணம்

மனைக்கோலவேண்டுமென்று யாதாமொருவர்வந்து அழைக்க அவரோடு சிற்பாசாரி காமரூபியாகிய ஸ்திரீகள் நிறைகுடம் வண்ணான் தயிர்பால் அன்னம் மதுக்குடம் அரசன் வேசிகரும்பு இரட்டைப்பிராமணர்கள் யெதிற்படினும் காக்கை நரி கிளி வேங்கை முயல் கோழி கொக்கு மயில் ஒந்தி பசு நாரை செம்போத்து இவைகள் வலமாகிலும் கருடன் வானரம் மூஞ்சூறு பன்றி கீரிப்பிள்ளை எலி கலைமான் கூகை வலியன் ஆந்தை கரடி நாய் உடும்பு இவைகள் இடமாகினும் நன்று விரித்தலையர் மொட்டதலையர் செம்பட்ட மயிர்உடையவர் கொண்டி ஒற்றைக்கண்ணன் குருடன் அமங்கலை தடிசம்புடையவர் கவலையுடையோர் தபசி சன்னியாசி ஒத்தைப்பிராமணன் கன்னியாஸ்திரீ மூக்கில்லாதவன் வெருங்குடம் எண்ணெய்க்குடம் செக்கான் நாவிதன் குருவியாதிபிடித்தோன் விறகுகட்டு இவைகள் எதிர்ப்படில் மிகுந்த துன்பமுண்டாம்

## மனையில்நிற்கும்போது சகுணம்

சிற்பியும் அம்மனைக்கு எஜமானும் அம்மனையில்சென்றுநிற்குங்காலை கௌளி முன்பு வலமாகச்சொல்லில் அழகியது பின்பு இட

மாகச்சொல்லில் அம்மனைக்குறியவன் அரசர்களுக்குப் பிரியனாய்ப் புத்திரகளத்திரத்துடன் சுகித்து வாழ்வார்

வெள்ளைப்புராவும் வெள்ளைப்பசுவும் வெள்ளைரிஷபமும் தங்கள்மனையில் நின்றபோது காணில் உத்தமம்

மேற்சொல்லிய இருவரும் மனையிற்சென்று நின்றபோது எறும்புகள் ஒழுங்குவிட்டுப் பலவாராய்ச் சிதரினும் செல்லுகள் பாவியிருக்கினும் வண்டுகள் பூமியைத் துளைக்கினும் ஒருவன் யெதிர்ப்படினும் மனைகோலமாகாது

மேற்சொல்லிய யிருவரும் மனையில் நிற்கும்போது பரண்டை வலத்திற்பாடி வலத்திலிருந்து இடத்திற்போந்து வழியுமாகில்மனைக்கு எசமானுக்குத் துன்பங்கள்நீங்கி நன்மையுண்டாகும்

குடியன் வலையன் சுடுகாட்டாண்டி முடவன் செக்கான் மூக்கரேயன் கூனன் குருடன் இவர்களை எதிற்காணில் மனைகோலநசித்துபோகம்

மதுக்குடம் மாமிசம் பால் நெய் தண்ணீர் நல்லபுடவை மங்கிலியஸ்திரீ நிறைகுடம் யானை தேர் ஒற்றையாள் புரவி இவைகள் எதிர்காணில் உத்தமம்

## மனைஉயர்வுதாழ்வு லட்சணம்

சூரியனென்பது கிழக்கு, சந்திரனென்பது வடக்கு இவ்விரண்டுதிக்குத் தாழ்ந்து தெற்கும் மேற்கும் உயர்ந்திருக்கும் பூமிசுகத்தைக்கொடுக்கும்.

## நான்குவருணத்தார் கிரகதிசை

பிராமணருக்கு தெற்கு, அரசர்க்கு மேற்கு வணிகருக்குவடக்கு, சூத்திரருக்கு கிழக்கு, குடியிருப்பாராகில் இலட்சுமீகரம் பொருந்தி வாழ்வார்கள் நடுபிரமஸ்தானமாகக் கொள்க.

### மண்சுவை

இனிப்பாகியமண் பிரமகுலத்தவர்களுக்காகும்
துவர்ப்பாகியமண் க்ஷத்திரியகுலத்தவர்களுக்காகும்
புளிப்பாகியமண் வைசியகுலத்தவர்களுக்காகும்
கசப்பாகியமண் சூத்திரகுலத்தவர்களுக்காகும்

## நால்வகை வருணத்தார் வாசம்செய்ய மனைலட்சணம்.

தென்சார்ப்பாய் வடக்குப்பார்த்தவாசல்மனை மறையோர்க்காம் மேல்சார்பாய் கிழக்குபார்த்தவாசல் மனை அரசர்களுக்காம், வடசார்பாய் கிழக்குபார்த்தவாசல் மனை வைசியர்க்காம் கீழ்சார்பாய் மேற்குபார்த்தவாசல் மனை சூத்திரருக்காம்

## தானும் தன்பிள்ளை முதலானவர்களும் வாசஞ்செய்யு மிலக்கணம்

தன்னிற் பெரியவர்களுக்கும், குருக்களுக்கும் தாய்தந்தைகட்கும் தன்கிளைஞருக்கும், மூத்தவருக்கும் தெற்கு மேற்கு தானிருக்கலாகாது அவர்களை தெற்கு மேற்கு வைக்க நன்றும்.

இருந்தமனைக்கு தெற்கே குப்பைகொட்டவும், தென்மேற்கு மூலையில் வைக்கோல் போர்கட்டவும மேற்கில எருமைத்தொழுமியற்றவும் வடமேற்கில தானியதொம்மை யமைக்கவும் வடக்கில் பசுதொழுகட்டவும் உத்தமம்

வடகிழக்கில் அடுக்கனைவீடுகட்டவும் கிழக்கில் மாட்டுக்கொட்டிலவைக்கவும் தென்கிழக்கில் பொக்கசவீடியற்றவும் உத்தமம்,

கிழக்குதிக்கில் குளிக்குமிடமும் அக்கினிமூலையில் சமையல் பண்ணுமிடமும் தெற்கில் சயனஸ்தலமும் நிருதிமூலையில சகலசாமான்முதலானதும் வைக்குமிடமும மேற்கில் போஜனம் புசிக்கும் வீடும வாயுமூலையில் பசுத்தொழுவமும் வடக்கில் தனதானிய வீடும் ஈசானியமூலையில் பூசைவீடும்கட்ட ராஜயோகமுமுண்டாகும்

ஞாயறு பரணியும் திங்கள் சித்திரையும் செவ்வாய் உத்திராடமும் புதன் அவிட்டமும் வியாழன் கேட்டையும் வெள்ளி பூராடமும் சனி ரேவதையும் கூடினால் ஆகாது இந்த நாட்களில் விவாகஞ்செய்யில் கைம்பெண்ணாம் மனைக்கோலில் பாழாம் வழிபோகில் மரணமாம் ருதுவானல் மலடியாம் பிள்ளைபிறக்கிற் சாவாம்

ஜெனனநாளுக்கு உ-ச-சு-அ-கூ இந்நாள் நன்றும் க-ரு-ஙு-எ இந்தநாள்கள் பொருந்தாது மற்றவை பொருந்துமென்க இப்படி ஒன்பதொன்பதாம் உஎ-நாளையும் பிரித்துக்கொள்வது

சந்திரனையும் சூரியனையும் பரிவேடமிட்டிருந்தநாளும் கொடியவாரமும் மந்தாரம் மறைந்தால் கிரணந்தீண்டல் பொல்லாதநாள்

சந்திரங்கள் குரு சுக்கிரபாடு விஷகடிகை அஷ்டமி உவாஇருத்தை இவையாகா வென்று நீக்கிமற்ற நாட்களில்முகூர்த்தங்கொள்ளவும்

வெள்ளியெதிரும் வலக்கண்ணும் மூடமும்ஆகாது மனோகோ ஸிணும் குடிபுகினும் தீதாம் வெள்ளிபின்னும் இடக்கண்ணுமாகில் மிகவும் உத்தமம்

## யோகினியறிவது

பூர்வபட்சம் பிரதமைமுதல் பிரதமை கிழக்கு துதியை வடக்கு, திருதியை அக்கினி சதுர்த்தி நிருதி பஞ்சமி தெற்கு சஷ்டி மேற்கு, சத்தமி வாயுவு அஷ்டமி ஈசான்னியம் அக்கினிமூலை நவமி, ஆகாசம் தசமி பாதாளம் ஏகாதசி கிழக்கு, துவாதசி வடக்கு, திரையோதசி அக்கினி சதுர்த்தி நிருதி பௌர்ணமி தெற்கு பின்னும் அமரபட்சபிரதமை மேற்கு துவிதியை வாயுவு திருதியை ஈசான்னியம் சதுர்த்தி ஆகாசம் பஞ்சமி பாதாளம் பின்னும் சஷ்டி கிழக்கு, சத்தமி வடக்கு, அஷ்டமி அக்கினி, நவமி நிருதி, தசமி தெற்கு, ஏகாதசி மேற்கு துவாதசி வாயுவு திரையோதசி ஈசானியம் சதுர்த்தி ஆகாசம் அமாவாசை பாதாளம்நிற்கும் இந்தயோகினிமுன்னும் இடமும் யாத்திரைமுதலான எவற்றிக்கும் தீயதுபின்னும்வலமும் நல்லது,

## சுபகாரியங்கள் செய்ய வேண்டியதற்கு

### மூன்றுவிதமான சில நட்சத்திரங்களறிய

1 வது. உரோகணி ஆதிரை பூசம்உத்திரம் ஒணம் அவிட்டம் சதையம் இவை கூ-ம் ஊர்த்துவமுகம் இதில் ஸ்தம்பப்பிரதிஷ்டை பட்டாபிஷேகம உத்தியோகத்திற் பிரவேசித்தல் இராஜதெரிசனம் வியாபாரம் வீடு ஆபரணம் மெத்தைமேல் வாசக்கால் தூண் துவசம் தோப்பு சாலைமரம்முதலியவை வைக்கவும் மற்றுமிவைமுதலாகிய சுபங்கள்செய்யவும் அவிவிருத்தியாய் வருமென்றறிய வேண்டியது

2 வது. அசுவனி மிருகசீரம்புனர்பூசம் அஸ்தம்சித்திரைசுவாதி அனுஷம் கேட்டை ரேவதி இவை கூ-ம் திரிமுகம், இவைகளில் சுவர்வைக்கப் பயிரிட நிலம்வாங்க பசு எருது எருமை குதிரையானை பண்டி முதலானவை வாங்கவும் பொன்னேர் கட்டி யுழவும்

விரைவிதைக்கவும் பசுமுதலானதுக்கு கொட்டாரங்கட்டவும்,யாத்திரைபோகவும் ஏரி வாய்க்கால் வெட்டவும்கிலத்துக்கு வரப்புகட்டவும் இவைமுதலாகிய சுபகாரியங்கள் செய்ய உத்தமம்

வீட்டினுள் யேற்பட்டியிருக்கின்ற அஷ்டபாகங்களின்

உபயோகபலன்கள் அறிய

## ஈசான்யபாகபலாபலன்

வீட்டினுள் ஈசானியபாகமானது பூசைசெய்யவும் நெல் முதலிய தான்னியங்கள் வைப்பதற்கும் வீட்டு எஜமானன் எஜமானி சயனஞ்செய்யவும் உத்தமம்.

கிழக்குபாகமானது மேற்குறித்த செய்கைகள்யாவும் உதவும் ஆனல் பொருள்மாத்திரம் வைக்கக்கூடாதென்பதாம்

## ஆக்கிநேயபாகபலாபலன்

வீட்டின் ஆக்கினேயபாகமானது சமயல் செய்யவும்வீட்டுதேடிவரப்பட்ட சுற்றத்தார் இருப்பதற்கும் உதவுமேயன்றிச்வேறேசெய்கைகளுக்கும் உதவாது அன்றியும் அவ்விடத்தில் ஸ்திரீ புருஷர்கள் கலந்துண்டாகும் சிசுக்கள் திருடுமுதலிய துர்ச்செய்கைகளோடிருப்பதுமன்றி அவ்வில்லாளருக்குப் பொருட்சேதமும் உண்டாக்கிக்கொண்டு வருமெனவறிக

## தென்பாகபலாபலன்

வீட்டின் தெற்குபாகமானது பூசைசெய்வதற்கும் போஜனம் செய்வதற்கும் உதவுமேயன்றி வேறுச்செய்கைகளுக்கும் உதவாது அன்றியும் அவ்விடத்தில் ஸ்திரீபுருடாள் கலர்து கருதரித்து உற்பவிக்கும் சிசுக்கள் முடம் குருடு செவிடுமுதலிய அங்கஹீனங்களோடு பிறந்து வமிசவிருத்திக்கு மாறுமலிருக்கு மென்பதாம்

## நிருதிமூலையின் பலாபலன்

வீட்டின் நிருதிமூலையானது இல்லறத்துக்குரியபாத்திரசாமான்கள் உயுத்தகருவிகள் இவைகள்வைப்பதற்கும்பிள்ளைகள் வித்தையை அப்பியாசிப்பதற்கும் உதவுமேயன்றி வேறெச் செய்கைகளுக்கும் உதவாது அன்றியும் அங்கு சதிபுருஷர்கலப்பினல உற்பவிக்

கும் சிசுக்கள் ஆணாயின் ஜாரனும் பெண்ணாயின் வேசியுமாமென வறிக.

## மேற்குபலாபலன்

வீட்டின் மேற்குபாகமானது சதிபுருடர்கள் சயனிப்பதற்கு உத்தமம், அன்றியும்அவ்விடத்தில் கருத்தரித்து உற்பவிக்கும் சிசுக்கள் ஆணாயின் மெஞ்ஞானியாயிருந்து அவன்பின் இருபத்தோர் தலைமுறைவரையில் உண்டாகின்றவர்களையும் பாவம் அணுகாமல் சத்திக்கு ஆளாக்க ஹேதுவாவான், பெண்ணாயின் மகாபதிவிரதா சிரோன்மணியா யிருப்பாள், ஆனால் அச்சிசுக்களால் விசெஷதனம் சேராவாமெனவறிக.

## வாயுமூலை பலாபலன்

வீட்டின் வாயுவுமூலையானது பூசைசெய்யவும், ஸ்திரீகள்பிரசவிப்பதற்கும். தேவஸ்தாபனம் செய்வதற்கும், நெற்களஞ்சியம் வைப்பதற்கும் உத்தமம், இலாபமுண்டாம் ஆனால்ஸ்திரீ புருடசயனத்திற்கு உதவாது, அங்கு கருதரித்து உற்பவிக்கும் சிசுகள் மிகு தரித்திரத்தை யடையுமென்பதாம்.

## வடக்காகிய குபேரபாக பலாபலன

வீட்டின் வடபாகமாகிய தழைப்போங்கிய குபேரதிசையில் திரவியம் வைப்பாராயின் நாளுக்குநாள் விருத்தியடையும், மேலும் அவ்விடம் சதிபுருடர்கள் சயனத்திற்கு மிகச்சிரேஷ்டம் அங்குகரு தரித்து உற்பவிக்கும் சிசுக்கள் இருபாலிலஎப்பாலராயினும் குபேர சம்பத்துடன் தீர்க்காயுளோடிருக்கும், ஆனால் அஃது ஈங்கலாகமேற்கூறிபசெனைகளுக்கு உத்தமமெனவறிக'

## நல்லநாள் அறிய

அசுபதி மகம் மூலம் இதுகள்முதல் ஒவ்வொன்றினுடையஆரம்பம முதல் நான்குவிஞ்சத்திரம் வரையான பணிரண்டுநட்சத்திரத்தில் காத்திகை, யுத்தம், உத்திராடம் புனர்பூசம், விசாகம், பூரட்டாதி இவ்வாறுந்தள்ளிமற்றயநாள் கிரகாரம்பத்திற்கு விசேஷ நாட்களாகும். மற்றயநாட்களாகில் கிரகங்கட்டவாரம்பிக்கில் முடியாதுகட்டில் எஜமான்முதலிய குடும்பத்தலைவர்கள்மரணமாவார்கள் கட்டிடங்கட்டும்பொழுதே இடிந்துவிழுந்து உயிர்ச்சேதமாகும்.

## மனைப்பொருந்தமறிய

சிற்ப நூலிற்சிறந்த முன்னோர்கள் மனைக்கு வற்படித்தி யிருக்கின்ற பொருத்தங்களாவன.

| | | | |
|---|---|---|---|
| 1-வது | கெர்ப்பம். | 7-வது | அங்கிசம் |
| 2-வது | ஆதாயம். | 8-வது | ஜாதி. |
| 3-வது | சிலவு. | 9-வது | திதி. |
| 4-வது | யோனி. | 10-வது | இராசி |
| 5-வது | நட்சத்திரம் | 11-வது | வயது. |
| 6-வது | வாரம். | | ஆக பொருத்தங்கள். 11. |

## க-வதுகெற்பபொருத்தம்

மனையின் அகலநீளத்தை (இங்கிலீஷ்) 34-அங்குலத்திற்குச் சரியான சிதம்பரபதம் என்கின்ற கோலால் அளந்து குழியாக்கப் படுவதே ஆயம், அல்லது துருவமாம் அப்படியாகின்ற துருவபதமாகிய குழியை எட்டிற்கழிக்க மிகுசேடம் கெர்பப் பொருத்தமெனப்படும் ஒருக்கால் சேடமீறுமற் சரியாய்ப்போனால் வகுக்கும்எட்டையேசேடமாக வைத்துக்கொள்ளவேண்டு மென்பதாம்

| | |
|---|---|
| சேடம்ஒன்றாகில் | கெருடகெற்பம் |
| இரண்டாயின் | புறாக்கெற்பம் |
| மூன்றாயின் | சிம்பகெற்பம் |
| நான்காயின் | நாய்கெற்பம் |
| ஐந்தாயின் | சுபகெற்பம் |
| ஆறாயின் | காக்கைகெற்பம் |
| எழாயின் | யானைகெற்பம் |
| எட்டாயின் | கழுதைகெற்பம். |

## பலன் விபரம்,

| | | |
|---|---|---|
| ஒன்றுவதான் | கெருடகெறபம் | உத்தமம் |
| இரண்டு | புறாகெற்பம் | மத்திமம் |
| மூன்று | சிம்பகெற்பம் | உத்தமம் |
| நான்கு | நாய்கெற்பம் | தீது |
| ஐந்து | சுபகெற்பம் | சுபம். |

| | | |
|---|---|---|
| | காக்கைகெற்பம் | நீச்சம் |
| எழு | யானைகெற்பம் | உத்தமம் |
| எட்டு | கழுதைகெற்பம் | அதமம் |

என்பதாமென மேலோர்கூறினர்.

## ௨-வது ஆதாயப்பொருத்தம

ஆயமொத்தத்தை 8-ல் பெருக்கி 12-ற் கழிக்கமிச்சமிற்பது ஆதாயம்

அச்சேடங்களுள்.

| | |
|---|---|
| 1-2 மிருந்தால் | ஏகபோகமாய்நடக்கும் |
| 3-4 மிருந்தால் | கீர்த்தியுண்டாம் |
| 5-6 மிருந்தால் | தனதானியமுண்டாம். |
| 7-8 மிருந்தால் | மங்களகாமுண்டாம் |
| 9 மிருந்தால் | போகபாக்கியமுண்டாம் |
| 10 மிருந்தால் | காரியசித்தியுண்டாம் |
| 11 மிருந்தால் | ஈஸ்வரகடாட்சமுண்டாம் |
| 12 மிருந்தால் | சகலநன்மையுமுண்டாம் |

என்பதாம்.

## ௩-வது செலவுபொருத்தமறிய

ஆயமொத்தத்தை ஒன்பதிற்பெருக்கி பத்திற்பங்கிட மிகுசேடம் செலவு என்னைப்படும்.

அச்சேடங்களுள்

| | |
|---|---|
| ஒன்றுக்கு | அவவில்லம்க்ஷீணிக்கும் |
| இரண்டுக்கு | அம்மனைதீயினால் சேதப்படும் |
| மூன்றுக்கு | அக்குடும்பம் க்ஷேமமாகயிருக்கும் |
| நாலுக்கு | புத்திரவிருத்தியுண்டாம் |
| ஐந்துக்கு | அதிகவிரையமுண்டாம் |
| ஆறுக்கு | ஆரோக்கியமுண்டாம் |
| எழுக்கு | அதிக தரித்திரமுண்டாம் |
| எட்டுக்கு | இலட்சுமிவாசமாயிருப்பாள் |
| ஒன்பதுக்கு | புத்திரநாசம் |
| பத்துக்கு | உத்தமமாயிருக்குமென்பதாம் |

## ௪-வது யோனிப்பொருத்தமறிய

ஆயமொத்தத்தை மூன்றிற்பெருக்கி எட்டிற்பங்கிட நின்றசேடம் யோனிப்பொருத்தம் என்னப்படும்.

அக்சேடங்களுள்.

| | | |
|---|---|---|
| ஒன்றாயின் | கெருடன் | நிறைந்தசெல்வப் உண்டாகும். |
| இரண்டாயின் | பூனை | கலகமுண்டாகும் |
| மூன்றாயின் | சிங்கம் | ஜயம்பொருந்திநடக்கும் |
| நான்காயின் | நாய் | என்னாளும்பிணியாயிருக்கும் |
| ஐந்தாயின் | சர்ப்பம் | மேன்மையுஞ்செல்வமுமுண்டாம் |
| ஆறாயின் | எலி | தனட்சயமாகும் |
| எழாயின் | யானை | அதிகலாபம் நலம் |
| எட்டாயின் | முயல் | செல்வம்நீங்குமென்பதாம் |

## ரு-வது நட்சத்திரபொருத்தமறிய

முன் ஆயமொத்தத்தை எட்டிற்பெருக்கி இருபத்தேழிற்கழிக்க மிகுசேடம் நட்சத்திரம் என்னப்படும்,

| | | |
|---|---|---|
| ஒன்றாயின் | அசுவனி | உத்தமம் |
| | பரணை | அதமம. |
| மூன்று | கிருத்திகை | அதமம். |
| நான்கு | உரோகணி | உத்தமம் |
| ஐந்து | மிருகசீரிடம் | அதமம். |
| ஆறு | திருவாதிரை | உத்தமம் |
| எழு | புனர்பூசம் | உத்தமம் |
| எட்டு | பூசம் | அதமம். |
| ஒன்பது | ஆயிலியம் | அதமம். |
| பத்து | மகம் | மத்திபம் |
| ப} | பூராம் | மத்திபம். |
| பனிரண்டு | உத்திரம் | உத்தமம், |
| பதின்மூன்று | அஸ்தம் | அதமம். |
| பதிநான்கு | சித்திரை | மத்திபம் |
| பதினைந்து | சுவாதி | உத்தமம் |
| பதினாறு | விசாகம் | அதமம். |
| பதினேழு | அனுடம் | உத்தமம் |

| | | |
|---|---|---|
| பதினெட்டு | கேட்டை | மத்திமம் |
| பத்தொன்பது | மூலம் | மத்திமம் |
| இருபது | பூராடம் | அதமம் |
| இருபத்தொன்று | உத்திராடம் | உத்தமம் |
| இருபத்திரெண்டு | திருவோணம் | மத்திமம் |
| இருபத்திமூன்று | அவிட்டம் | அதமம் |
| இருபத்திநான்கு | சதையம் | உத்தமம் |
| இருபத்தைந்து | பூரட்டாதி | அதமம். |
| இருபத்தாறு | உத்திரட்டாதி | உத்தமம் |
| இருபத்தேழு | இரேவதி | மத்திமம் |

ஆக இவ்விருபத்தேழு நட்சதிரங்களுக்குள் பத்து உத்தமும், எழுமத்திபமும், பத்து அதமுமென்பதாம்.

## சு-வது வாரப்பொருத்தம்

முன் ஆயத்தை ஒன்பதிற்பெருக்கி எழுக்கிய மிகுந்தசேடம் வாரம் என்னப்படும்.

அச்சேடங்களுள்

| | | |
|---|---|---|
| ஒன்றுவரில் | ஆதிவாரம் | உதவாது |
| இரண்டுவரில் | சோமவாரம் | சுகங்கொடுக்கும் |
| மூன்றுவரில் | அங்காரகவாரம் | தீமையுண்டாம். |
| நான்குவரில் | புதவாரம் | அம்மனைலட்சுமி விலாசமாயிருக்கும் |
| ஐந்துவரில் | குருவாரம் | புத்திரவிருத்தியுண்டாம் |
| ஆறுவரில் | சுக்கிரவாரம் | அதிகாலம்உண்டாகும் |
| எழுவரில் | சனிவாரம் | கலகம்உண்டாகும் |

## எ-வது அங்கிசப்பொருத்தம்

ஆயமொத்தத்தை நாலில்பெருக்கி ஒன்பதிற்கழிக்க மிகுசேடம் அங்கிசப்பொருத்தம் என்னப்படும்.

அச்சேடங்களுள்.

| | | |
|---|---|---|
| ஒன்று | தடகர அங்கிசம் | அல்லலுண்டாம் |
| இரண்டு | சோமகரனங்கிசம் | மிக்கபாக்கிய போகங்களுண்டாம். |

| | | |
|---|---|---|
| மூன்று | சந்திஅங்கிசம் | சீலமுண்டாம் |
| நான்கு | புஷ்கரஅங்கிசம் | தானியவிருத்தி |
| ஐந்து | குருஅங்கிசம் | இலாபமுண்டாம் |
| ஆறு | சுக்கிரஅங்கிசம் | இராஜபோகமுண்டாம் |
| ஏழு | சனிஅங்கிசம் | கலகமும்ஜனப்பகையுமுண்டாம். |
| எட்டு | இராகுஅங்கிசம் | மத்திமபலனுமிருக்கும் |
| ஒன்பது | கேதுஅங்கிசம் | சகலநன்மையுமுண்டாம் |

## அ-வது ஜாதிப்பொருத்தம்

ஆயமொத்தத்தை ஒன்பதிற்பெருக்கி நாலிற்கழிக்க மிகுசேடம் ஜாதி என்னப்படும்.

அச்சேடங்களுள்,

| | | |
|---|---|---|
| ஒன்று | பிரமஜாதி | நல்லபலனுண்டாம் |
| இரண்டு | க்ஷத்திரியஜாதி | நல்லபலன் |
| மூன்று | வைசியஜாதி | உத்தமம் |
| நான்காயின் | சூத்திரஜாதி | பலனில்லை துயரமுண்டாம் |

## கூ-வது திதிப்பொருத்தம்

மனையின் ஆயமொத்தத்தை ஒன்பதிற்பெருக்கி முப்பதிற் பங்கிட முப்பதுவரையில் நின்றசேடம் திதி என்னப்படும். அச்சேடங்களுக்குள் ஒன்றுமுதல் முறையே பதினைந்துவரையில் வருவதைச் சுக்கிலபட்சத் திதியெனவும், பதினாறுமுதல் முப்பதுவரையில் வருவதைக் கிருஷ்ணபட்சத் திதிகளுக்குப் பலன்வேறே கூறுதிருந்தாலும் பூர்வபட்சத்துப் பிரதமைமுதல் பூரணைவரையில் முறையே கூறியிருக்கின்ற பலன்களே கிருஷ்ணபட்சம் பிரதமையாகிய கசு-வது, சங்கியை முதலாக வைத்துக்கொண்டு அமாவாசை வரையிலும் அப்பலனே முறையா யுண்டாமென்றுங் கொள்ளவேண்டும்.

| சுக்கிலபட்சத்திதி சங்கியை. | | கிருஷ்ணபட்சத்திதி சங்கியை. | |
|---|---|---|---|
| 1 | பிரதமை | 16 | பிரதமை நலம் |
| 2 | விதியை | 17 | விதியை நலம் |
| 3 | திரிதியை | 18 | திரிதியை ஜயம் |
| 4 | சதுர்த்தி | 19 | சதுர்த்தி அபஜயம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 5 | பஞ்சமி | 20 | பஞ்சமி | புத்திரபாக்கியம் |
| 6 | ஷஷ்டி | 21 | ஷஷ்டி | மேற்கண்டபலன் |
| 7 | சப்தமி | 22 | சப்தமி | நன்மை |
| 8 | அஷ்டமி | 23 | அஷ்டமி | பிணிகளுண்டாம் |
| 9 | நவமி | 24 | நவமி | அம்மனை க்ஷீணித்துபோ |
| 10 | தசமி | 25 | தசமி | மங்களகரமாயிருக்கும் |
| 11 | ஏகாதசி | 26 | ஏகாதசி | தீமையுண்டாம் |
| 12 | துவாதசி | 27 | துவாதசி | அன்னவஸ்திரம் குறைவில்லாதிருக்கும் |
| 13 | திரையோதசி | 28 | திரையோதசி | செல்வம்தழைக்கும் |
| 14 | சதுர்த்தசி | 29 | சதுர்த்தசி | அம்மனைபாழடையும் |
| 15 | பூரணை | 30 | அமாவாசை | பூரணபலனுகும். |

## ௧௦ வது இராசிப்பொருத்தம்.

ஆயமொத்தத்தை நாலிற்பெருக்கி பன்னிரண்டிற் கழிக்க மிகு சேடம் இராசி என்னப்படும்.

இப்பன்னிரண்டு ராசிகளுள் பதினொன்ருவதான கும்பவிராசி ஒன்றுதான்தீமை. மற்ற பதினெருராசியும் உத்தமமென்றெண்ணப் படும் என்பதாம்.

## ௧௧ வது வயதுபொருந்தம்.

ஆயமொத்தத்தை இருபத்தேழிற் பெருக்கி நூறிற்கழிக்க மிகுந்தசேடம் ஆயுளெனப்படும்.

அவைகளுள் நாற்பத்தைந்துக்குக் குறைந்துவருமாயின் நீக்க வேண்டும். நாற்பத்தைந்துக்குமேல் நூறுக்குள் எவ்வளவு உயருகிறதோ அவ்வளவும் விசேஷம்.

## முழக்கோல் இலக்ஷணமறிய

பரமஅணு எட்டுகொண்டது சூரியனுடைய ரதத் துகள், ஷ்டி ரதத்துகள் எட்டுகொண்டது பஞ்சின்துகள், ஷ்டி பஞ்சின்துகள் எட்டுகொண்டது பாலன்மயிர்நுனி, ஷ்டி மயிர்நுனி எட்டுகொண்டது ஒரு ஈர், ஷ்டி ஈர் எட்டுகொண்டது ஒருபேன், ஷ்டி பேன்எட்டுகொண்டது ஒருயவை, ஷ்டி யவை எட்டுகொண்டது ஒருமானுங்குலம் ஷ்டி மானுங்குலம் ஆறுகொண்டது ஒருதாலம், தாலம் இரண்டுகொண்டது ஒருவிதஸ்த்தி, விதஸ்த்தி இரண்டு கொண்டது

ஒருஅஸ்தம், அஸ்தம் நாலுகொண்டது ஒருதண்டம், தண்டம் நாலு கொண்டது ஒருபாகு, பாகுநாலுகொண்டது ஒருகுரோசம்,குரோ சம் நாலுகொண்டது ஒருசத்துவாரி, இவற்றுள் அஸ்தம் என்வ கையாகும். அவையாவன: மானங்குலம் இருபத்துநாலுகொண்டது ஒருகிஷ்க்கு, கிஷ்க்கு இருபத்தைந்துகொண்டது பிராஜாபத்தியம் பிராஜாபத்தியம் இருபத்தாறுகொண்டது ஒருதனுர்முஷ்டி, தனுர் முஷ்டி இருபத்தேழுகொண்டது ஒருதனுக்கிரகம், தனுக்கிரகம் இ ருபத்தெட்டுகொண்டது ஒருபிராப்பியம், பிராப்பியம் இருபத்தொ ன்பதுகொண்டது ஒருவைதேகம், வைதேகம் முப்பதுகொண்டது ஒருவைப்புல்யம், வைப்புல்யம் முப்பத்தொன்றுகொண்டது பிரகீ ர்ணமாம்.

இதுவுமது.

தேவர்களுக்கும், பிராமணர்களுக்கும், பிரகீர்ணமும். அரசர்க ளுக்கு, தனுக்கிரகமும். வைசியர்களுக்கு, வைப்புல்யமும், தனுர் முஷ்டியும். சூத்திரர்களுக்கு, வைதேகமும், பிராஜா பத்தியமும் பிராப்பியமும். கிஷ்க்குவும் அளந்துகொள்வது, அல்லாமலும் ஷை கிஷ்க்கு அஸ்தத்தால் தேவர் முதலிய யாவருக்கும் அளந்துகொள் வது பொதுவாகும்.

## வேறுவித முழக்கோலளவு அறிய.

முழக்கோலானது அணுவு அ-கொண்டது புன்னுனி, புன்னு னி அ-கொண்டது நுண்மணல், நுண்மணல் அ-கொண்டது எள் ளு, எள்ளு அ-கொண்டது நெல்லு, நெல்லு அ-கொண்டது துவ ரை, துவரை அ-கொண்டது விரல், விரலாறுகொண்டது கால்மு ழம், கால்முழம் ச-கொண்டது ஒருமுழம்.

வேறு—இதுவுமது.

கிடகுவென்னும் இருபத்துநாலுவிரல் கொண்டது வேளாளரு க்கு முழமென்று சொல்லப்படும். பிராஜாபத்தியமென்னும் உரு-வி ரல்கொண்டது வைசியருக்கு முழமென்று சொல்லப்படும். தனு முட்டியென்னும் உசா-விரல்கொண்டது பிராமணருக்கு முழமென் றுசொல்லப்படும்.

வேறு—இதுவுமது.

துவரை அ-கொண்டது விரல், விரல் சா-கொண்டது சாண் சாண் உ-கொண்டது முழம் இதுபோற் பகுந்துக்கொள்ளவும்.

## முழக்கோல்செய்யுமரமறிய.

கமுகுமரம், மாமரம், பனைமரம், வேங்கைமரம், மூங்கில்மரம் புளியமரம், கருங்காலிமரம், தென்னைமரம், சந்தனமரம், தேக்குமரம், ஆச்சாமரம்; சண்பகமரம், பலாசுமரம், தாமரைக்கொடி, இரும்பு இவைபதினான்கும் முழக்கோலுக்காகும்.

### இதுவுமது.

தேவர்களுக்கும் பிராமணர்களுக்கும் இரும்பு மூங்கில்மரம், புளியமரம் இவை மூன்றுமாகும். அரசர்களுக்கு ஆச்சாமரமாகும். வைசியர்களுக்கு தேக்குமரமாகும். சூத்திரர்களுக்கு வேங்கைமரம் சிறந்ததாகும். இந்த ஆறும்நீங்க, மற்ற எட்டும் பொதுவாக பலருக்குமாகும். இவைகளல்லாத வேறு முழக்கோலாகாது. யவை அங்குலம் தாலம் விதஸ்தி அஸ்தம் தண்டம் பாகு சூரோசம் சத்துவாரி இவை ஒன்பதனாலும் அளவுகொள்ளலாம். சத்துவாரியினால் தேசங்களையும் தண்டத்தினால் சம்வாகம் கேர்வடம் கிடகும் மடப்பம்கிராமம் நகரம் சிற்றூர் இவைகளையும் அஸ்தமென்னும் முழத்தினால் தேவாலயங்கள் கர்ப்பக்கிரகங்கள் மண்டபங்கள் சபைகள் பரிவாரஆலயங்கள் சாலைகள் பிரகாரங்கள் கோபுரங்கள் இவைகளையும் தேவாலயமுதலிய பிராமணகிரகங்களுக்கு சுவர் புறவாயலளவாகவும் மையத்தளவாகவும் உள்வாயலளவா யாகவுங்கொள்வது.

### இதுவுமது.

அரசர்களுக்கு மையுத்தளவாயாகவும் உள்வாயலளவாயாகவும் கொள்வது வைசியர்களுக்கு உள்வாயலளவாயாகவுங்கொள்வதுசிறப்பாகும். பிராமணாதியாவருக்கும் சுவர் புறவாயலளவாயாகக்கொள்வது பொதுவாகும்.

### இதுவுமது.

இன்னும் மடம் சத்திரம் பசுத்தொழுவம் படிக்கரை தண்ணீர்ப்பந்தல் தடாகம் துறவு கிணறு இவைகளையும், மேற்கூறிய பிரமாணப்படி கொள்வது. இன்னும் தண்டிகை சிங்காசனம் பீடம்வண்டி சப்ரமஞ்சம் இவைகள் மானாங்குலத்தால் கால்புறவாயலளவாலும் மையத்தளவாலும் உள்வாயலளவாலும் உயரத்தளவாலும் சுற்றளவாலும் அளந்துக்கொள்ளவும். இன்னும்பலவித ஆயுதங்களையும் தேகலப்தாங்குலத்தால் அளந்துக்கொள்ளவும்.

### இதுவுமது.

மானுங்குலம் மாத்திராங்குலம் தேகலப்தாங்குலம் இவைகளால் இவலிங்கமாதி தெய்வீகம்பொருந்திய விக்கிரகங்களையும் பாதாதிகேசம்வரையி லளந்துக்கொள்ளவும்.பலிபீடத்தைத்தாங்குலத்தா லளந்துகொள்ளவும். ஆத்மார்த்தபிரகாரச்சனை விம்பங்களை மாத்திராங்குலத்தளவா லளந்துகொள்ளவும். வாகனங்களை பின்காலாதி தலைவரையிலும் சர்ப்பத்தை வால்நுனியாதி தலைவரையிலும் பலபக்ஷிகளை காலாதிதலைவரையிலும் இந்தப்படி யளந்துகொள்ளவும்.கற்பகவிருக்ஷம் தோரணம் கதலி கெர்ப்பபாதம் கிரகபாதம் தனுவாரபாதம் இவைகளை உயரத்தில் மானுங்குலத்தளவா லளந்துகொள்ளவும்.

### இதுவுமது.

கர்த்தா மத்திமவிரலின் நடுத்தளவு மாத்திராங்குலம் விக்கிரக முதலிய உயரம் தேகலப்தாங்குலம் இவற்றுள் யவை யாதிபாகஞ் செய்து குறைந்துவருமளவே மானுங்குலமாகும்.

## வேறு முழக்கோல் மரமறிய.

மூங்கிலிற் செய்தகோல் பிராமணருக்காம், ஆச்சாவின்கோல் அரசர்க்காம், தேக்குவின்கோல் வணிகர்க்காம்,வேங்கையின்கோல் வேளாளருக்காம்.

### இதுவுமது.

மட்டகோலுக்குரியவை புளி, வேங்கை, தேக்கு, ஆச்சாஇவை நான்குமாமரம். இவற்றுள், புளிமாவின்கோல் மறையோர்க்காம், ஆச்சாவின்கோல் அரசர்க்காம், தேக்குவின்கோல் வணிகர்க்காம், வேங்கையின்கோல் வேளாளருக்காம், இரும்பினாற் செய்தகோல் தேவர்க்காம்.

### இதுவுமது.

மூலைமட்டக்கோலளவு சொல்லுமிடத்து ஒருதலை பத்துவிரல் நீளம் ஒருதலை எட்டுவிரல்நீளம் சமமூலைபட்டு வளைந்தசதுரமாக்கி விரலளவுபார்த்து வரைந்துகொள்க.

## சங்குஸ்தாபன மறிய.

மரம், பனைத்தெரம்பு, ஆலமரம், அத்திமரம், சந்தனமரம், தேக்குமரம், புளியமரம், கருங்காலிமரம், வன்னிமரம்,வேங்கை

மரம், இவற்றுள் ஒன்றினால் உத்தமசங்கு இருபத்திநான்கு மானங்குலநீளமும், மத்திமசங்கு பதினெட்டு மானங்குல நீளமும், அ. —க்கு பன்னிரண்டு மானங்குல நீளமுமாகும்.

உத்தமசங்கு அடியில் ஆறங்குல அகலமும், நுனியில் ஓரங்குல அகலமும்வைத்து ஒருமட்டமாகவும் விருத்தமாகவும் கடைந்துகொள்ளவும். அந்தமுறைப்படி மத்திமசங்கும் அதமசங்கும் வைத்துக்கொள்வது ஆகாது ஷை சங்குமரங்களில் கணுக்களுடையவைகளையும் புள்ளிவிழுந்தவைகளையும் பொரைமுதலாகியவைகளையும் நெளிவுமுதலாகியவைகளையும் வெடிப்பு முதலாகியவைகளையும் நீக்கிமேற்சொல்லிய குறிகளில்லாத மரங்களை வைத்துக்கொள்ளவும். இவற்றுள் தேவர்களுக்கும் பிராமணர்களுக்கும் யானைக்கொம்பும் சந்தனமரமும் உத்தமம். அரசர்களுக்கு கருங்காலிமரமும் வன்னிமரமும் உத்தமம். வைசியர்களுக்கு வேங்கைமரமும் தேக்குமரமும் உத்தமம். சூத்திரர்களுக்கு புளியமரமும் அத்திமரமும் உத்தமமாகும். இவையல்லாதமரங்கள் உதவாது. சங்குஸ்தாபனம் பண்ணவேண்டியவிடத்தில் நாலுமுழநீளமும் நாலுமுழஅகலமும் நீர்மட்டத்துக்குச்சரியாய் பூமியைச்சதிரமாக மட்டஞ்செய்து நல்லசுபமுகூர்த்தகாலத்தில் சங்குவை ஜலத்தினாலலம்பி மஞ்சள் குங்குமம் சந்தனம்புட்பம் சுத்திகரித்து ஷை பூமியில்நிறுத்தி பூசைசெய்து சங்குமத்திமுதல் விதிப்படி மண்டலம்போட்டு ஷை வட்டமண்டலத்தில் உயர்த்தியாகப் பார்க்கும்போது ஷை சங்குச்சாயை மேற்புறத்திலேயே விருத்தமண்டலத்தின் புருவத்தில் தொட்டவுடன் கால்முழம் ஒருமுழம் இரண்டுமுழம் ஒவ்வொருபாகத்திலும் இருக்கும்போதுமூன்றுமண்டலம்போடவும். அதில் புள்ளடிபோட்டுநிழல் கிழக்கேசாய்ந்து ஈடுவிருத்தமண்டலத்தின் புருவத்தில் வந்தவுடன் முன்போல புள்ளடிபோட்டு உத்தராயனம் தெக்ஷணாயனம் அறிந்து விலக்குவித்து அதேவிலக்கும் மேல்புறத்து புள்ளடிக்கும் நூல்பிடித்துப் பார்த்துக் கழிக்க மேற்கே நிதானமாகும்.

## வேறு—சங்குஸ்தாபனமறிய.

சங்குநீளம் பனிரண்டுவிரல் பருமனும். இது ஒன்று முக்கால் தலையிற்சுற்றும். இதில் மேலூசியில் நீளம் ஒருவிரல் கொள்வது. தேவருக்கும் மானிடருக்கும் சங்குமரமாவது அரசு, ஆல், அத்தி, யானைக்கொம்பு, கருங்காலி, சந்தனமரம் இவையாம்.

## இதுவுமது.

சங்குவைக்கும்போது நிலத்தை மட்டஞ்செய்து ஒருகோல் முறை அகலம் நீளம் மட்டம் ஒக்கக்கொண்டு பொருள்வைத்து சங்குவைக்கவும். ஆவணி, ஐப்பசி, கார்த்திகை இந்தமூன்றுமாதங்களில் சங்குநடல் மனிதருக்காம். மற்றெல்லாமாதங்களும் தேவர்களுக்காமெனவறிக.

## மேற்சொல்லிய சங்குபிரமாணமறிய.

மாதம்பன்னிரண்டிற்கும்முதல்பத்து நடுப்பத்து கடைப்பத்து அவச்சாயை அங்கங்களை யின்னதென்று அறிந்து சங்குவினுடைய உயரத்தை தொண்ணூற்றாறு பங்குசெய்து அதில் ஒன்றுக்கு ஓரங்குலமாக விலக்கச்சொல்வாமென்பது. மாதம் பன்னிரண்டுக்கும் அங்குலம் முதல்பத்து நடுப்பத்து கடைப்பத்து அவச்சாயைக்கழித்துச் செய்யவும்.

## மாதம் 12-க்கும் அவச்சாயை விவரமறிய.

| | | அங்குலம். முதல் | அங்குலம். நடு | அங்குலம் கடை |
|---|---|---|---|---|
| ௧ | சித்திரை | ௨ | ௧ | ½ |
| ௨ | வைகாசி | ½ | ௧ | ௨ |
| ௩ | ஆனி | ௨ | ௩ | ௨ |
| ௪ | ஆடி | ௨ | 0 | 0 |
| ௫ | ஆவணி | 0 | 0 | 0 |
| ௬ | புரட்டாசி | ½ | ௧ | ௨ |
| ௭ | ஐப்பசி | ௨ | ௩ | ௪ |
| ௮ | கார்த்திகை | ௪ | ௫ | ௬ |
| ௯ | மார்கழி | ௬ | ௭ | ௮ |
| ௧0 | தை | ௮ | ௭ | ௬ |
| ௧௧ | மாசி | ௬ | ௫ | ௪ |
| ௧௨ | பங்குனி | ௫ | ௩ | ௨ |

## இதுவுமது—வேறுவிதச்சங்குமறிய.

மனைக்கு தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு அறியவேண்டிய கருவி மகாமேருமையத்திலிருக்கப்பட்ட துருவத்தைநோக்கி தன்னுடைய நேத்திரத்தினாலே பூமியிலேயிறக்கி மையமாகக்கீறி அதற்குத்தெற்கே தான்நின்றமையத்திற்கும் துருவமையத்திற்கும் நூலை

ப்பிடித்துப்பார்க்கில் தெற்குவடக்காகும் அதைச் சதுரஞ்செய்யில் கிழக்குமேற்காகும். இந்தமனை கிழக்குபார்க்கில் ஈசான்யமூலைதானே யீசானம்பார்க்கவேண்டும் இதுதெற்குபார்க்கில் மேற்குமூலை யீசான்யம் பார்க்கவேண்டியது.

இதுவுமது.

சிற்பனுக்கு சன்மானஞ்செய்து ஜலத்திலழைத்துக் கொண்டு போய் பூமிசாரம்பார்த்துஉபவாசமிருந்து அந்தத்தலத்தில் ராத்திரி வசித்து சுதரிசனங்களைக்கொண்டு முகூர்த்தஞ்செய்து சங்குஸ்தாபனம்பண்ணி திக்குபரிச்சேதங்கண்டு விநாயகபூசை புண்ணியவாஹனம் பதவின்யாசம்பண்ணி வாஸ்த்து சாந்திசெய்து பிரமாணம் நிச்சயிக்கின்ற அங்குலத்தால் விதஸ்தியாஸ்ததெண்ட முதலியவைகளால் அளந்து ஆயாதிகளின் பரிசுத்தமான பொருத்தம் கிரகங்களுக்கும் ஆலயங்களுக்கும் நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் மேற்சொல்லியவிதிப்படி செய்யவேண்டும். அப்படிச்செய்தால் அனேக சுபங்களுண்டாம்.

## வாஸ்துபுருஷ லக்ஷணமறிய.

சித்திரை, வைகாசி இம்மாதங்க ளிரண்டிலும் மேற்கேசிரசும் கிழக்கே காலும், இடக்கை கீழுமாய் வடக்கு முகமாய் படுத்துக் கொண்டு இருப்பர்.

ஆடி, ஆவணி இம்மாதங்க ளிரண்டிலும் வடக்கேசிரகம், மேற்கே காலும், இடக்கைகீழும், கிழக்குமுகமாய் படுத்துக்கொண்டு இருப்பர்,

ஐப்பசி, கார்த்திகை இந்தமாதங்க ளிரண்டிலும் கிழக்கேசிரசாகவும், மேற்கேகாலாகவும், இடதுகைகீழேவைத்து மேற்குமுகமாய் படுத்துக்கொண்டு இருப்பர்.

தை, மாசி இந்தமாதங்க ளிரண்டிலும் தெற்கே சிரசாகவும் வடக்கே காலாகவும், இடதுகைகீழேவைத்து மேற்குமுகமாய்படுத்துக்கொண்டிருப்பர்.

பங்குனி, ஆனி, புரட்டாசி, மார்கழி இந்தநாலு மாதங்களும் மூலமாதமானபடியால் வீடெடுக்கவும் குடிபுகவும் கூடாவாம்.

## வேறு வாஸ்துபுருஷன் கிடக்கையறிய.

வாஸ்துபுருஷன் அந்தந்தமாதத்து ராசியில் காலைநீட்டி அதற்கெதிராகிய ஏழாமிராசியில் தலையைவைத்து இடக்கைகீழும் வலக்கை மேலுமாய்க் கிடப்பான்.

## வேறு வாசல்பலன்.

வாஸ்துபுருஷன் கிடக்கையில் காலில் வாசல்விட்டால் மனையாளுக்குப் பொல்லாங்கு, தலையில் வாசல்விட்டால் கணவனுக்காகாது, முதுகில் வாசல்விட்டால் இராஜபயமுண்டாம், வயற்றில் வாசல்விட்டால் வாழ்வு உண்டாம்,

## வாஸ்துபுருஷன் நித்திரைவிடுதலறிய

சித்திரைமீ ௧0வ நாழிகை-ரு, வைகாசிமீ உ௧வ நாழிகை அ, ஆடிமீ ௧௧வ நாழிகை-உ, ஆவணி ௬வ நாழிகை-உ௧, அற்பிசிமீ ௧௧வ நாழிகை-உ, கார்த்திகைமீ அவ நாழிகை -௧0, தைமீ ௧உவ நாழிகை-அ, மாசிமாதம் உ0வ நாழிகை-அ, இந்தநாழிகைக்குமேல் வாஸ்துபுருஷன் எழுந்திருந்து ௱ஜ-நாழிகை இருப்பன், அதில் ஜ-நாழிகைதந்தசுத்தி ஜ-நாழிகைஸ்நானம் ஜநாழிகை பூஜை ஜ-நாழிகை போஜனம் ஜ-நாழிகை தாம்பூலதாரணம் ஆக செய்கை ரு-று ௱ஜ-நாழிகை, இதற்குமேல் படுத்துக்கொள்வர். ஸ்நாநம் பூஜை தந்தசுத்தி இம்மூன்றுகாலம்நீக்கி மற்ற இரண்டுகாலத்திலும் கிரகாரம்பம்செய்யில் விசேஷசவுக்கிய முண்டாகும். புரட்டாசிமாதம் மார்கழிமாதம் பங்குனிமாதம் ஆனிமாதம் இதுகளில் நித்திரைவிட்டு யெழுவதில்லை வாஸ்துபுருஷன் நிலையறிந்து மனைகோலாவிடிய் பொருள்நஷ்டமும் நோய் உண்டாகுதலும் அன்றி மனைகோலிய கர்த்தாவும் விபத்தையடைவார். செய்தவையும் பாழாகிம்போம்.

## வாஸ்து இராசிவீடு

மீனம்-மேஷம்-ரிஷபம் இம்மூன்றுராசியில் காலைநீட்டி கன்னி துலாம் விருச்சிகம் இந்தமூன்றுராசியில் சிரசைவைத்து இடதுகைகீழும் வலதுகை மேலுமாக உத்திரதிசையைநோக்கி இந்திரன்திசையில் காலைநீட்டி வாஸ்துபுருஷன் கிடப்பான்.

### இதுவுமது.

மிதுனம்-கடகம்-சிங்கம் இம்மூன்றுராசியிற் காலைநீட்டிதனுசுமகரம்-கும்பம் இம்மூன்றுராசியிற் சிரசைவைத்து இடக்கைகீழும் வலக்கைமேலுமாக எமன்மூலையில் காலைநீட்டி வாஸ்துபுருஷன் கிடப்பான்,

இதுவுமது.

கன்னி-துலாம்-விருச்சிகம் இம்மூன்றுராசியிற் காலைநீட்டி, மிதுனம்-கடகம்-சிம்மம் இம்மூன்றுராசியிற் சிரசைவைத்து இடக்கைகீழும் வலக்கைமேலுமாக வைத்து மேற்கேமுகமும் வடக்கேகாலுமாக வாஸ்துபுருஷன் கிடப்பான்.

இதுவுமது.

தனுசு-மகரம்-கும்பம் இம்மூன்றுராசியிற் காலைநீட்டி, மிதுனம்-கடகம்-சிம்மம் இம்மூன்று இராசியிற் சிரசைவைத்து இடக்கைகீழும் வலக்கைமேலும் மேற்கேமுகமும் வடக்கேகாலுமாக வாஸ்துபுருஷன் கிடப்பான்.

## வாஸ்து யெழுந்திருக்கும் நாளறிந் மனைகோல குடிபுக

சித்திரைமாதம் ௧0 ந்தேதி வைகாசிமாதம் ௨௧ ந்தேதி ஆடிமாதம் ஐப்பிசிமாதம் ௧௧ ந்தேதி ஆவணிமாதம் ௬ ந்தேதி கார்த்திகைமாதம் ௮ ந்தேதி தைமாதம் ௧௨ ந்தேதி மாசிமாதம் ௨0 ந்தேதி இந்த தேதிகளில் வாஸ்துபுருஷன் எழுந்திருப்பன். இந்நாளில்மனை கோவில் அவரவர்க்குப் பொருந்தியதிக்கில் வாசல்விடலாம்குடிபுகலாம் நன்று.

## மனைமுகூர்த்தஞ்செய்ய மாதமறிய

சித்திரை-வைகாசி-ஆடி-ஆவணி-ஐப்பிசி-கார்த்திகை-தை-மாசி இந்தமாதங்கள் எட்டிலும் மனைமுகூர்த்தஞ்செய்ய நன்மையாகும். மற்ற ௪-மாதங்களில் மனைமுகூர்த்தஞ்செய்தால், கர்த்தாநாசமும், கர்மநாசமும் உண்டாகும்.

கீழ்சரகுமனை தை-மாசி மாதத்திலும்.
தென்சரகுமனை சித்திரை-வைகாசி மாதத்திலும்.
மேல்சரகுமனை ஆடி-ஆவணி மாதத்திலும்.

வடசரகுமனை ஐப்பிசி-கார்த்திகை மாதத்திலும், வாஸ்துபுருஷன் நிலையறிந்து முகூர்த்தஞ்செய்யில் சகலசம்பத்துகளும் பெருகி விசேஷ சவுக்கியத்தை யடைவார்கள்.

## முகூர்த்தஞ்செய்யும் இடமறிய

மனையின் அகலத்தை ௨௮-பாகம்செய்து,காலில் ௧௭-பாகமும் தலையில் ௧0-பாகமும் தள்ளி நடுவில் நின்றபாகம் ஒன்றில் மனைமுகூர்த்தஞ்செய்ய உத்தமம்,

## முகூர்த்தலக்கினசகுனமறிய

உதயலக்கினத்துக்கு கேந்திரதிரிகோணத்தில் குரு நின்றால் வாயசசகுனம் கெருடச்சகுனம் இந்தாராசிகளில் சந்திரன் கூடிநின்றால் நாரைசகுனம் இவற்றில் சுக்கிரன் கூடிநின்றால் பாரத்துவாச சகுனம் லக்கினத்துக்கு ௩-எ-௬-ல் குஜன் நின்றால் நாரைப்பட்சி சகுனம் உண்டாகும். ௩-௬-௧௧-ல் பாபிகள் இருந்தால் மயில் மாமிசம் காணும். இவற்றில் சுக்கிரன் இருந்தால் தயிரகுடங் காணும். இவற்றில் குருவிருந்தால் பாற்குடங்காணும், சனியிருந்தால் அக்கினிகாணும், கேந்திரங்களில் ராகுகேதுக்கள் இருந்தால் சர்ப்பதேரிசனமுண்டாம்,

## வேறுமுகூர்த்தஞ்செய்ய

ஆலயங்கள் நகரங்கள் பட்டணங்கள் கிரகங்கள் தடாகங்கள் கிணறுகள் இவைகளைச் சிற்பன்கையாற் செய்யாமல் அன்னியவர்னத்தான் கையினால் முகூர்த்தஞ்செய்தால் அரசருக்கும் எசமானுக்கும் ஆகாது.

## ஆகாசபாதாள திதிகளறிய

யுக்தம் விவாகம் நவபோஜனம் விவசாயம் யாத்திரை பிரதிஷ்டை கிரககர்மங்கள் இவைகள்செய்தால் கர்த்தாநாசம் கர்மநாசம் உண்டாகும்.

## வீடுகட்டுகிற நிலம்

பல்லிபோலும் ஒந்திபோலும் பாம்புபோலும் பறவைபோலும் ஒட்டைபோலும் வில்லுபோலும் ஈட்டிபோலும் உடுக்கைபோலும் வேலைப்போலும் சூலம்போலும் சளகுபோலும் முச்சதிரமாகியபூமியும் ஆகாது. மேற்கும் தெற்கும் தாழ்ந்தும் வடக்கும் கிழக்கும்உயர்ந்தும் இருக்கிறபனையுங் கூடாது. ஒருஅகலமனையில் ஒருபக்கந்தாழ்ந்தும் மற்றொருபக்கம் உயர்ந்துமிருக்கக் கூடாது.

## வீடுகட்ட ஆரம்பஞ்செய்யவேண்டியதிதிபலன்.

### வேறு.

சுக்கிலபட்சம் சுபப்பிரதம் கிருஷ்ணபட்சம் அமாவாசிபோன திரிதிகைமுதல் பௌர்ணமிபோன தசமிவரையில் சுக்கிலபட்சமாகும், மற்றநாட்கள் கிருஷ்ணபட்சமாகாது. பிரதமைசஷ்டி ஏகாதசி இவைகள் நந்தை திதி இதன்பலன் அர்த்தஆனி விதியை சத்தமி

துவாதசி இவைகள் பத்திரை திதி இதன்பலன் பர்தனம், திரிதிகை அட்டமி திரயோதசி இதுசயை திதி இதன்பலன மிருத்துவின் பயம் சதுர்த்தி நவமி சதுர்த்தசி இவைகள் இருத்தைதிதி இதன் பலன் சுபப்பிரதம். பஞ்சமி தசமி பௌர்ணமி இவை பூரணை திதி இதன்பலன் ஜெயப்பிரத்தம் அமாவாசியில் அர்த்தஆனி இதன்பல ன்பிராண ஆனி ஆகுமென்பதாம்.

## அக்கினி நட்சத்திரமறிய

பரணிநக்ஷத்திரம் ௩-ம்பாதத்தில் சூரியப்பிரவேசமாகிற நாழி கைதொடங்கி ரோகணிநக்ஷத்திரம் 2-ம் பாதத்தில் சூரியப்பிரவேச மாகிற நாழிகைவரையில் அக்கினிநக்ஷத்திரகாலமாம். அந்தகாலத் தில் மண் மரம் கல் கிரகம் முதலியகருவிகள் செய்தால் கிரியைநஷ் டமும் கர்த்தாநாசமும் உண்டாம்.

## அஷ்டதிக்குலட்சணம்

ஈசான்யபக்கமென்று சொல்லப்படுகின்ற பரமசிவத்தினது பக்கத்தில் பரிமளமபொருந்திய மலரானது வந்துநின்றால் கனகை ஸ்வரியமும் தீர்க்காயுசும் புத்திரசம்பத்தும் வாழ்வும் மென்மேலும் விருத்தியாய்ப்பெருகி நீடூழிகாலம் நிலைநிற்கும் இதன்றி பெரியோர் களுக்கும் தபோதனர்களுக்கும் அன்னபானுதிகொடுக்க வல்லவனு யிருப்பான். இந்திரன் திக்கில் பரிமளம்பொருந்தியமலரானதுவந்து நிற்குமாகில் அதிக சௌபாக்கியம் பொருந்திய லட்சுமிவிலாசமும் தனதானிய சம்பத்தும் சந்தானபாக்கியமும் தீர்க்காயுசும் ஆயுரா ரோக்கியமும் மன்மதக்கிரீடையும் அறுபத்துநான்கு கலைக்கியான மும் பதினெண்புராணங்களும் நான்குவேதமும் ஆறுசாஸ்திரமும் பொருந்துவதுமன்றி பசுக்கள்முதலிய கறவைகளுஞ்சேரும். அக் கினிதிக்கில் வாசம்வீசுகின்ற புட்பமானது வந்துநிற்குமாகில் கற்பு நிலமைபொருந்திய பெண்சாதியானவள் மலடியாவாள், இதன்றி விஷத்தைத் தராநின்ற பாம்பினால்பயமும் அச்சமும் உண்டாகும். அக்கினிச்சுவாலையினாலும் கள்வர்கள்பயத்தினாலும் பொருள் சற்பா த்திரத்துக்குதவாமல் ஜெமான்நாசமாவான். இமன்மூலையென்னும் வடக்கில்வாசம்வீசும் மலரானது வந்துநிற்குமாகில்மனதில்சிந்தனை யும் வியாகூலமும் செருக்கும் பலபேரால் கலகமும் தீங்காகிய காரி யமும் தீமை பிணி அச்சம் முதலியவைகளும் அதிகரித்துண்டாம். கன்னிமூலையில் மலர்வந்துநிற்கில் பொருளும் அன்னமும் தன கனகமும் இலட்சுமிபிரகாசமும் நவதானியலாபமும் பிறவிச்செல் வமும் என்னாளும் நீங்காமல் வற்றாச் சமுத்திரமாய் மென்மே

லும் பெருகியுண்டாம் வருணன்மூலையில் அழகும் வாசம்பொருந்திய பூவானதுவந்து நிற்குமாகில் நிறைசெல்வமாருமலு மிருப்பதுமல்லாமல்வினைத்தகாரியமும் ஆரம்பித்ததொழில்களும்ஜெயமாகும் வாயுமூலையில் விகசிதம்பொருந்திய மலர்வந்துநிற்குமாகில பதினெண்காசமென்னும் க்ஷயரோகத்தினால் மரணமும் சோரர்கள் களவினால் பண்டபாத்திரமுதலிய பொருட்சேதமுமன்றி அம்மனையானது அலகைவாழும் சுடுகாடாகும் அன்றியும் சகலபாக்கியமும் அழிந்துபோம் குபேரன்திக்கில் விரோதம்பொருந்திய மலரானதுவந்துநிற்குமாகில் தனதானிய சம்பத்தும் புத்திரசந்தானமும் ஆயுள் விருத்தியும் சபையோக்கியமும் அதர்மசிந்தைநீங்கி அபயமென்றவரைக்காத்து பொருளுதவிசெய்து புண்ணியவானுமிருப்பான்

## பஞ்சகம்மறிய

சவுளத்திற்கும். உபநயனத்திற்கும் ரோகபஞ்சகமும் விவாகத்திற்கு, மிருத்தியுபஞ்சகமும், இராஜதரிசனத்திற்கு, ராஜபஞ்சகமும், கிரகங்களுக்கு, அக்கினிபஞ்சகமும், சோரபஞ்சகமும் ஆகாவாம். இராத்திரிக்கு சோரபஞ்சகமு, ரோகபஞ்சகமும் தோஷமில்லை பகலில் ராஜபஞ்சகமும் அக்கினிபஞ்சகமும் தோஷமில்லை. அபிஜித்தாகிய சு௫-நாழிகைக்கு மிருத்தியுதோஷமுதலிய சர்வதோஷமும்நசிக்கும் அக்கினிபஞ்சகத்துக்குசந்தனக்குழம்பும் இராஜபஞ்சகத்துக்கு எலுமிச்சம்பழமும், சோரபஞ்சகத்துக்கு தானமும் செய்ய, ஷெ தோஷம் நிவர்த்தி.

## ஸ்தானசுத்தம் பார்க்க

கிரகப்பிரவேசத்துக்கு ௧௨-ம் இடமும் அபிஷேகத்துக் ௧௧-ம் இடமும் சவுளத்திற்கும் பிரசரணபோஜனததுக்கும்௧0-ம்இடமும் போஜனத்திற்கும் ஜீவனத்துக்கும் ௯-ம் இடமும், உபநயனத்திற்கும் கிரகாரம்பத்திற்கும், பயிரிடுகிறதற்கும் அ-ம் இடமும், ருதுசாந்திக்கும், விவாகத்திற்கும் எ-ம் இடமும் கோடியுடுக்க ௬-ம் இடமும், பிரயாணத்திற்கும் ௫-ம் இடமும், வித்தியாரம்பம்செய்வதற்கும், அக்ஷமெடுப்பதற்கும் ௪-ம் இடமும்,தான்யத்திற்கும் சங்கிரகத்திற்கும், வித்தையப்பியாசத்துக்கும் ௩-ம் இடமும, அவிழ்தம்சாப்பிடுவதற்கும், விதைகள் விரைப்பதற்கும் ௨-ம் இடமும், நிஷேகத்திற்கு லக்கினமும்சுத்தமா யிருக்கவேண்டியது.

## பஞ்சகோளநின்ற தோஷமறிய

சூரியன்நின்ற நட்சத்திரத்திற்கு எ-ம் நட்சத்திரம் உற்பாதமென்றும், ௧0-ம நட்சத்திரம் தாகமென்றும் ௧௫-ம் நட்சத்திரம்பிரமகண்டமென்றும ௨௧-ம் நட்சத்திரம்காலனென்றும் பெயராம்.

செவ்வாய்நின்ற நட்சத்திரத்திற்கு எ-ம் நட்சத்திரம் சூலமென்றும், க0-ம் நட்சத்திரம் சக்கரமென்றும், கரு-ம் நட்சத்திரம் கண்டமென்றும், உக-ம் நட்சத்திரம் காலனென்றும் பெயராம்.

புதன்நின்ற நட்சத்திரத்திற்கு அ-ம் நட்சத்திரமும், கஅ-ம் நட்சத்திரமும், உசு-ம் நட்சத்திரமும் கண்டமென்றுபெயராம்.

சுக்கிரன்நின்ற நட்சத்திரத்திற்கு எ-ம் நட்சத்திரமும், கூ-ம்நட்சத்திரமும், வியாழநின்ற நட்சத்திரத்திற்கு எ-ம் நட்சத்திரமும் கூ-ம் நட்சத்திரமும் கொடுமையென்று பெயராம்.

சனிநின்ற நட்சத்திரத்திற்கு ரு-ம் நட்சத்திரமும் கூ-ம் நட்சத்திரமும், க0-ம் நட்சத்திரமும், கக-ம் நட்சத்திரமும் உ0-ம்நட்சத்திரமும் பந்தமென்று பெயராம்.

இராகு-கேதுநின்ற நட்சத்திரங்களுக்கு எ-ம் நட்சத்திரம்பரிகமென்றுபெயராம், இவைசுபகாரியங்களுக்கு ஆகாவாம்

## ஆகாமண்ணின்வாசனையறிய

தயிர்-நெய்-தேன்-எண்ணெய்-உதிரம்-மயிர்-மீன்-பட்சி இவை களின்நாற்றம் துர்க்கந்தமுடையமணலின் மனைகோலில்மனைபாழடைந்து பலவிபத்தை யடைவார்கள்.

## குழிகெல்லி யெடுத்தமண்ணை

## மறுபடியும் குழியிலடைத்து பார்க்கும்விதி

ஒருமுழநீள அகல ஆழம்தோண்டிய மண்ணை மறுபடியும் குழியில் நிரைக்கில் மண்மிகுத்திட உத்தமம். சமமாகில்மத்திபம், குறையில் அதமம் இதற்குசெல்வம் குன்றும்,

## முகூர்த்தகாலகுழிசகுனமறிய

மண்டுகம், அரணை, பல்லி, சிலந்தி, புழுகு, நண்டு, தனம், செங்கல், பசுவின்கொம்பு, தான்யம், வெள்ளி, சிப்பி இவைகள் கண்டால்உத்தமம், ஓடு, சாம்பல், கரி. பல், மரத்தின்வேர், எறும்புகள் தெறிலும், செல்லுகள் பரவியிருக்கினும், வண்டுகள் துளைக்கினும், நூரன், உடும்பு, பாம்பு, தேள், ஆலம், பூரான், எலி, உமி, விறகு காணில் சிறுமையும் துன்பமும் உண்டாம்.

வெள்ளைப்புறு, மாமிசம், யானை, புரவி, முகூர்த்தஞ் செய்யுமிடத்துசதிரமாய் ஒருமுழ அகலநிகள ஆழமாய்கெல்லி நடுவில்மண்

முட்டுவைத்து சுற்றிலும்செல்லி மண்ணைவெளியில் எடுக்துகடுமுட்டில் வாஸ்துபுருஷன் பூசைசெய்த மூன்றுகுடம் ஜலத்தைவலமாக விட்டு உதறி புஷ்பங்களைப்போடவும் அப்புஷ்பங்கள் மூன்றுசுத்து வலமாகவந்து கிழக்கு ஒதுங்கினதற்குபலன் சம்பத்துண்டாம் இடமாகசுற்றில்தீமையுண்டாம். ஷை புஷ்பம்ஈசான்யமூலையில் நின்றால் வாழ்வுண்டாம். கிழக்கில்லட்சுமிலாபமுண்டாம் அக்கினிமூலையில் கலசமும், தீமையுமுண்டாம் தெற்கில்பிணியும் வறுமையுமுண்டாம். கன்னிமூலையில் தனதான்யமுதலிய செல்வமுண்டாம் மேற்கில் நினைத்தகாரியம் கைகூடி இன்பத்துடன்வாழ்வார்கள்வாய்வுமூலையில் பொருள்நஷ்டமும், தெய்வக்குற்றமும் உண்டாம் வடதிசையில்-புத்திரசம்பத்தும் பொருட்சம்பத்தும் உண்டாம்

## மூலைக்கால் நாட்டும்விதி

நல்லமுகூர்த்தத்தில் விநாயகரை பூசைசெய்து, பொன்னும் நவமணியும் பாலுங்குழியில்விட்டு முதல்தென்மேற் மூலைக்காலைநாட்டி தென்கீழ்மூலை வடகீழ்மூலை வடமேற்மூலைக்காலும் அடவுசேரநாட்டவும்.

## மண்வெட்டிசகுணமறிய

மனை முகூர்த்தஞ்செய்யும்போது மண்வெட்டி மூனைமுறிந்திடினும், முளைபிரிந்திடினும் தீதாகும்

## வேறுமண்வெட்டி முழக்கயிற்றின்சகுணம்

மனைக்கோலுவதற்குக் கொண்டுவந்தமண்வெட்டி முனையானது முறியினும், முனையானது பறிந்திடினும், கயிறு அருந்திடினும் ஆகாது. அதேனெனில் எஜமானுக்கு வராதாபத்தும், மனக்கிலேசமும் அனுபவிப்பதுமன்றி, தீர்க்ககாலம் துன்பத்தை யனுபவித்து எமபதிக்குப்பாத்திரனுவான் ஆகையால் அத்தமனை ஆகாது.

## நூலணியும்விதி,

தேவர்க்கு பட்டுநூல் முப்புரியாகவும், பிராமணருக்கு தொப்பை முப்புரியாகவும், க்ஷத்திரியருக்கு ஆலம்விழுது கதம்பைநார்முப்புரியாகவும், வைசியருக்கு பருத்திநூல் இருபுரியாகவும், சூத்திரர்களுக்கு பனைநார்-ஆத்திநார் இருபுரியாகவும் கொள்வது விதியாகும் நான்குவமிசத்தாருக்கும் முப்புரியாகிய பருத்திநூல் கொள்வதும் விதியாகும்,

## வேறு நாற்கயிற்றின் சகுனம்

பட்டுநூல்-தர்ப்பை-ஆலம் விழுது - பனையின்நார் இவைகள் தேவர் முதல் நான்குஜாதிக்கும் தெளிவாகச் சொல்வோம் அதாவது, தேவர்களுக்குப் பட்டுநூலால் முப்புரிக்கயிறு, பிராமணர்களுக்குத் தர்ப்பையினால் முப்புரிக்கயிறு, இராஜர்களுக்கு ஆலம்விழுதால் முப்புரிக்கயிறு, வைசியர்களுக்குப் பருத்திநூலால் இரண்டுபுரியையுடைய கயிறு, சூத்திரர்களுக்குப் பனைநாரினால் இரண்டுபுரி கயிறுமெனவறிக.

## மூலை நீளமறிய.

பதினொருவிரல்முதல் இருபத்தாறுவிரல்வரையில்இசைந்தபடி கொண்டு முதலில் தென்மேற்குமுதல் தெற்குகடாவி இடமாகமற்ற மூலைக்கடாவவும். மூலைகிழியில் அசுபமுண்டாம்

## வேறுமூலை நீளம் மூலைக்கயிறுகால்

மூலைக்குநீளம் கக-விரற்றொடங்கி ஒருவிரல்ஏறிட்டு இருபத்து நான்கு விரலளவுங்கொள்வது மூலைகடாவும்போது வாஸ்துவின்வயிற்றிற்கெல்லி பின்பு தென்மேற் மூலையில் கடாவி தென்கீழ் வடகீழ் வடமேல்மூலைகளிற் கடாவி விடவும்,

## மனைமுகூர்த்தஞ்செய்யும்போது

### மரியாதைசெய்வதறிய.

மனைமுகூர்த்தஞ் செய்யும்போது சொர்னதானம் வஸ்திரதானஞ்செய்து பெரியவாளுக்கெல்லாம் தாம்பூலமுதலிய மரியாதைகள்செய்து மனைகோலவேண்டும்.

## தேங்காய்ச்சகுனமறிய

முகூர்த்தஞ் செய்யுங்காலத்தில் தேங்காயுடைக்கில்முடிபெருத்து அடிசிறுத்து வட்டமாயுடையில் லட்சுமிவிலாசமுண்டு மூன்று பங்குசிரசிலும், ஒருபங்கு அடியிலும் உடைந்தால் சந்தோஷமுண்டாம், ஜெயமுண்டாம். ரு-அல்லது, உ-ஆகில் மாறுதசெல்வமுண்டாம் உடைந்து நரம்புபிடித்தால்வாழ்வுண்டாகும். கடுகளவுபிரமாணம்சிதறி உள்ளேவிழுந்தால் ரத்தினஞ்சேரும். நடுவிற்பிளந்தால் சண்டையுண்டாம். நடுமத்தியில் உடைந்தால் விசேஷநன்மை க - ஆக உடைந்தால் விசேஷதுன்பம் கண்கள்தெரித்தால் மரணமுண்டாம் ஓடுவிட்டால்வறுமையுண்டாம் ஓடுசுங்கிட பிணியுண்டாம் அழுகலானால் குற்றம் அதுமனஸ்தாபத்தை விளைவிக்கும்,

தெற்குமுகம் மேற்குமுகம் கட்டினவீடு விசாலத்துக்கு கமலாகாரமென்னப்படும் இதன்பலன் லட்சுமிகரம் மேற்கு-வடக்கு கட்டினவீடு விசாலத்துக்கு சுவர்னபலமென்னப்படும். இதின்பலன் சோரபயம், பீடையுண்டாம்.வடக்கு.கிழக்கு கட்டினவீடு விசாலத்துக்குபுஷ்தகமுஷ்டிகமென்ப்படும் இதின்பலன் சோரபயமும். விஷபயமுமாகும். தெற்கு-மேற்கு-வடக்கு கட்டினவீட்டுக்கு கிழக்கில் வாசக்கால்வைத்தால் புத்திரமுஷ்டிகமென்னப்படும். இதன்பலன் பயம் வடக்கு-கிழக்கு-தெற்கு கட்டினவீட்டுக்கு மேற்கில் வாசக்கால்வைத்தால் அதிசயமென்னப்படும் இதின்பலன் ஹானி கிழக்கு-மேற்கு தெற்கு-வடக்கு கட்டினவீட்டுக்கு வடகில் வாசக்கால் வைத்தால் நலசுகமுண்டாகும். மேற்கு-கிழக்கு-வடக்கு இந்தமூன்றுபக்கத்திலும் வாசக்காலிருந்தால் கலியாணபதமென்னப்படும் இதில்சம்பத்துண்டாம் கிழக்கு-தெற்கு-மேமற்குவடக்கு இந்தநாலு பக்கத்திலும் வீடுகட்டியிருந்தால் அதுசதுர்ச்சாலை என்னப்படும் இதின்பலன் உத்தமம்.

## மனைதோஷமறிய

ஆலயம், சன்னிதிமையம்,பசாசுவாசமானயிடம்.துர்க்கை தேவதையின் சன்னிதி, தேவதைவலக்கண் நேராயுள்ளயிடம், குளம் வாய்க்கால், ஆறுதாழ்ந்தயிடம், தெருகோடி, மூலேஇவைகள்கூடாவாம் வடக்கு கிழக்கு தாழ்ந்திடில் இன்பமுன்டாம் தெற்குமேற்கு தாழ்ந்திடில் துன்பமுண்டாம்.

## மனைக்கோல ஆதாரங்கள்

விருத்தம்

நன்றுளினு மனைகோலினு நவுறுர்தமிராசி
முன்னுகுதல் வலமாகுதல் முளரித்திரு வுரையும்
பின்னுகுத லிடமாகுதல் பேணிமனை கோலில்
பொன்னுகுதல் பொருளாகுத லுயிராகுதல் பேராமே:

## மனைகோல தூரமறிய

மனைகோலவேண்டுமானல் ஆற்றங்கரைக்கு ஜாதிஅடி௫0-க்கு மேலும், ஊரணிக்குஜாதிஅடி உ௫-க்குமேலும், கிணற்றுக்கு ஜாதி அடி கஉ-க்குமேலும் இதுகளுக்கு அப்பால் மனைபோடசுகம்,மேற் சொல்லியதுகைக்கு குறையில் துன்பமுண்டாம்.

## மனைகோல மாதமறிய

சித்திரை-வைகாசி-ஆடி-ஆவணி -ஐப்பசி-கார்த்திகை-தை-மாசி இந்தமாதமும் மனைகோலநன்றும்.

## கிரகப்பிரவேசமறிய

கிரகப்பிரவேசகாலத்தில்மேற்கு-தெற்கு- அக்கினிமூலை- வாயுமூலை இந்ததிக்குகளில் பிரவேசித்தால் செல்வமிழந்து உயிரிழப்பார்கள். அதற்குத்தானிருக்கப்பட்ட இடத்திலிருந்துதகுதியான இடத்தில் ர-எ-அல்லது,கூ-நாள் குடித்தனமிருந்து அவ்விடத்திலிருந்தபடியே புதிதாய்ப்போகவேண்டிய இடமானது வடக்கு-கிழக்கு-ஈசான்னியம் இந்ததிக்குகளுக்குப் பிரவேசித்தால் விசேஷ நன்மையுண்டாம்.

## இதுவும் கிரகப்பிரவேச விதிகளறிய

நீர்க்குடம், பால்,பழம், செம்பூ,பொன், புஷ்பம்,சந்தனம், புஷ்பமாலை,சோமன், மஞ்சள், குங்குமம் இதுகளும் சுமங்கிலிகள்கூட மங்களவாத்தியமுழக்க கிரகப்பிரவேசம்செய்து, நவக்கிரகஹோமம் செய்து பூரிகொடுத்து,தாம்பூலமளித்து போஜனஞ்செய்யவும், அல்லது, அறுகம்புல் பசுக்களுக்குகொடுத்துத் தங்களால் இயன்றதக்ஷிணையும் கொடுத்து கிரகப்பிரவேசம் பண்ணவேண்டும்.இதுவிதியாகும்.

## வேறு கிரகப்பிரவேசம்

ஆனி-ஆடி-புரட்டாசி-மார்கழி-மாசி-பங்குனிமாதங்களும், ஞாயிறு-செவ்வாய்-வியாழம்-அஸ்வனி-மிருகசீரிடம்- புனர்பூசம் - அஸ்தம்-சித்திரை-சோதி- மூன்றுநட்சத்திரங்கள்- அனுஷம்- திருவோணம் தவிர மற்றநட்சத்திரங்களும் விருச்சிகம்கும்பம் இருத்தையும் ஆகாவாம் அஷ்டமசுத்தமுள்ள லக்கினம் உத்தமம்.

## இருமனை யாகாததற்குவிதி.

ஒருவீட்டுக்கட்டத்துடன் மற்றொருவீட்டையும் சேர்த்துகட்டவேண்டுமானால் இரண்டையும் இடித்து காலிசெய்துமனையைக்கொத்தி நவதானியங்களை அதில்விரைத்து பயிர்செய்து பயிரானவுடன் பசுக்களைவிட்டு மேய்த்து மூன்றுநாள்பசுக்களை அதில்வசிக்கச்செய்து நவக்கிரகவாஸ்து ஹோமம்செய்து மனைகோல்பவர்களுக்கு சகலதோஷமும் நிவர்த்தியாகி சகலசவுக்கியமும் விசேஷநன்

மையும் உண்டாம். இப்படிக்குச் செய்யாவிட்டால்மனக்கிலேசமும் துன்பமும் உண்டாம்.

## மனை முகூர்த்தம்

சித்திரை-வைகாசி-ஆடி-ஆவணி-ஐப்பசி-கார்த்திகை-தைமாசி இம்மாதங்களில் கிழக்குமுதல் கிரமமாக மனைமுகூர்த்தம் செய்யலாம். ஆனி-புரட்டாசி-மார்கழி-பங்குனி இந்தராசிகளில்சூரியனிருக்கும்போது, கிரகப்பிரவேசம், கிரகாரம்பம்செய்யில் கர்த்தாமரணம். ரோகிணி-திருவோணம்-அனுஷம்-பூசம்-உத்திரம்- உத்திராடம்-உத்திரட்டாதி-ரேவதி-மிருகசீரிடம்- புனர்பூசம்- அஸ்தம்- இவைகள் உத்தமம். சித்திரை-அவிட்டம்-மூலம்-சோதி-சதயம் இவைகள் மத்திமம். மேற்கூறிய நட்சத்திரங்கள் நீங்கலாக மற்றவை அதமம்.

## உத்தமவாரங்கள்-

சோமவாரம்-புதவாரம்-குருவாரம்-சுக்கிரவாரம்-உத்தமம்சனிவாரம்-ஆதிவாரம் மத்திமம்.மங்களவாரம் அதமம்.

பூர்வாஷ்டமியும், இருத்தையும் உவாவும் ஆகாது.மற்றபாகங்களிலே அஷ்டமசுத்தியா யிருக்கவேண்டும்.ஸ்திரராசி உபயராசி உத்தமம்.சரராசிகூடாது தீமையுண்டு.

மனைமுகூர்த்தஞ் செய்யுங்காலத்தில் எஜமானுடைய ராசிக்கு கேந்திரங்களாகிய லக்கனம்.நான்காமிடம் ஏழாமிடம் பத்தாமிடம் இந்தஇடங்களில் குரு, சுக்கிரன், புதன்நிற்க, ஆறாமிடத்தில் சூரியன்நிற்க, மூன்றாமிடத்தில் சனி செவ்வாய்நிற்க மனைமுகூர்த்தம் செய்ய க00வருட சுபமாக விளங்கிவரும் அல்லது லக்கனம்-எ-க0ல் சுக்கிரன், குரு, சந்திரன்நிற்க முகூர்த்தஞ்செய்யில் ௬00வருடசகல பாக்கியங்களோடும் வாழ்வார் அல்லது லக்கினம் ௬-க0ல்சந்திரன் புதன், குருநிற்க முகூர்த்தம்செய்ய ௬00வருட நிறைந்த சம்பத்துடன் இருக்கும் அல்லது பத்தில்-நாலில் சந்திரன், குருவும், பதினொன்றில் சனியும், சூரியனும் இருக்கச்செய்யில் அ0வருட விளங்கி இருக்கும் அல்லது லக்கினத்தில் திருவும், பதினொன்றில்சூரியன்புதன் சுக்கிரனும் இருக்கச்செய்யில் க000வருட விளங்கும். அல்லது லக்கினத்திற் ௬-ல் க0-ல்சந்திரன், புதன், குருநிற்கச்செய்யில் க00 வருட விளங்கும் அல்லதுகேந்திரமாகிய லக்கினம் ௬-எ-க0-ல் குரு சுக்கிரன் லக்கனாதிபதி இல்லாதிருக்க மனைகள் செய்யில் புத்திரநாசம் அல்லது லக்கனாதிபதி திரிகோணத்தில் கட்டு உச்சம் அல்லது கே

ந்திரத்தில் இருக்கச்செய்யில் வாழ்வுண்டாகும்சுபக்கிரகம்நோக்கில் க00-வயது விளங்கும். பாபக்கிரகம்நோக்கில் ஆயுசுகுறையும்.

## பேழைவைக்க,

கிரகப்பிரவேசகாலத்தில் கட்டியகிரகத்தில் ஈசான்யபாகத்தில்சுத்தஞ்செய்து நண்டுவளைமண், யானைக்கொம்புமண், ரிஷபத்தின் கொம்பின்மண், புத்துமண், குளத்துமண் இவ்வைந்து மண்ணையும் சமமாகக்கூட்டி சிறியபெட்டிபோல்செய்து ஷை மண்ணால் ஷைபலகைசெய்து அடிப்பேழையில் கூ-பள்ளம்செய்து கூ-விதரத்தினங்களை ஷை பள்ளத்தில்வைத்து மேற்பலகையால்மூடி தங்கத்தகட்டில் வாஸ்துஎந்திரம்போட்டு வாஸ்துபூசையும் நவக்கிரகபூசையுஞ்செய்து ஷை எந்திரத்தில் பழம்பாசியினால் சுத்தி ஷை ஈசான்ய மூலையில்வைத்து அந்த இடத்தில் ஒரு மண்டலம் பூசை செய்துக் கொண்டு வரவேண்டும்.

## தாய்ச்சுவர்நிர்ணயம்

மனைக்குத் தாய்ச்சுவரைச்சேர்த்தே ஆயக்கணக்கிடவேண்டும் ஓர் மனைக்கு இரண்டுசுவர் இருக்குமாயின் அவ்விரண்டையுமேகணக்கிற்சேர்க்கவேண்டும். மற்றும் வீட்டுக்கட்டடத்திற் தெருப்புரத்திலும், பின்புரத்திலும் அமையுர்தாவாரங்களைக் கணக்கிற்சேர்ப்பதற்கு விதியில்லை. ஆயினும் ஒருவாறுசேரப்பதாயின் அஃதுமத்திமபக்ஷமென்பதாம்.

## வீட்டின்வாயில் நிர்ணயம்

கிழக்குமுகமாகிய மனைக்கு அம்மனையின் ஈசானியமுதல் ஆக்னேயவரையிலும் தெற்குமுகமாகிய மனைக்கு அம்மனையின் ஆக்கினேயமுதல் நிருதிமூலைவரையிலும் மேற்குமுகமாகியமனைக்கு அம்மனையின் நிருதிமூலைமுதல் வாயுமூலைவரையிலும் வடக்குமுகமாகியமனைக்கு அம்மனையின் வாயுமூலைமுதல் ஈசான்யம் வரையிலும கணக்கிட வேண்டுமென்பதாம்.

### இதுவுமது

முன்கூறியபடி மனையைச்சூரியன்முதல் கேதுவரையிக்முறையே ஒன்பதுபாகமாக்கவேண்டும் அப்படியேசெய்யும் பாகங்களுள் குருபுதன்பாகமாயின் இலட்சுமிகடாட்சமுண்டாகும். செவ்வாய் பாகமாயின் அவ்வில்லாளருக்கு வியாச்சியங்களுண்டாய்கடன்மிகு

து அம்மனை பராதீனமாய்ப்போய்விடும். சூரியபாகமாயின் அதில் வாழ்கின்றவர்களுக்கு ஆதாயங் குறைந்துபோவதுமன்றித் தாய்க் கும்பிள்ளைகளுக்கும் மனக்கிலேசமும் கலகமும்உண்டாகும், சுக்கிர பாகமாயின் அற்பபலனும் மிகுந்தபொருள்விரையமும் வியாச்சிய முமுண்டாம். சந்திரபாகமாயின் விருத்தியும் க்ஷீணமும் அடுத்தடு த்துண்டாம். சனிபாகமாயின் பொருள்விரையமும் வியாச்சியமும் உண்டாம். இராகு கேதுக்கள்பாகமாயின் அம்மனையார்க்குஞ்சொ ந்தமாகாமலே அடிக்கடி ஓர்கைவிட்டோர்கை மாறிக்கொண்டேயி ருக்கும் ஆகையாலிவ்வொன்பது கிரகங்களுக்குள் புதன்-குரு இப் விரண்டுபாகங்களே உத்தமம். மற்றும் இவ்விரண்டுள் தனித்தனி யாயினும் அல்லது இரண்டுங்கலந்தாயினும் இருக்கலாம். மற்றவேழு பாகங்களையும் மனைக்கு உதவாதவையென்று நீக்கத்தக்கதே விதி யென்பதாம்.

## வாயிலின் அளவுவிதி.

மனைவாசற்படிக்கு வேங்கைஅல்லதுதேக்கு இம்மரங்கள்சிரே ஷ்டம் மற்றமரங்களை நீக்கவேண்டியதே, மற்றும் அவ்வாயிலுக்கு அமைக்கப்படுகின்ற உயர அளவில் ஒன்பதில் ஐந்துகூறு அகலம்அ மைக்கப்படவேண்டும். அவ்விதிப்படி யிருக்கின்ற வாயிலிற்றான் மஹா இலக்குமி நுழைவாளென்பதாம்

## இதுவுமது.

வாயிற்படிகளுக்கு அமைக்கப்பட்ட மேற்சூரியும் பக்கங்களி லிணைக்கப்பட்ட சட்டங்களும் ஓர்ஜாதிமரமாகவே யிருக்வேண்டும் அன்றியும், அவ்வாயிற்படிகளுக்கு அமைக்கப்பட்ட கதவுகளுக்கு ஒற்றைக்கணக்காயப் பலகைகள் சேர்த்துக் கூட்டவேண்டு மென் பதாம்.

## வீட்டில் நுழையும்போது

### தோற்றக்கூடாதவைகளாவன

வீட்டின் செல்லும்பொழுது எதிர்பார்வையில் தூலங்களின் கு த்தாயினும், முத்தத்தின் மூலைக்குத்தாயினும் தோன்றுமாயின் அம் மனையின் கர்த்தாவுக்குத் தோஷமுண்டாகும். அன்றியும்.அம்மனை யில் அடுத்தடுத்து உயிர்ச்சேதங்களுண்டாகும் மேலும்தெருவாயற் படிக்குநேராய் மூடப்பட்டகட்டைச்சுவரிருந்தாலும் அவ்வீட்டில் வசிப்பவர்களுக்கு கடுக்கமுண்டாகு மெனவறியவும்.

## வீட்டிலிருக்கவேண்டிய அங்கணவிதி

வீட்டின் தலைவாயற்படியின் அளவுக்கு உள்வாயிற்படிகள் உயர்ந்திருக்குமாயின் வெற்றி நலமுண்டாம் விதிவிலக்கா யிருக்குமேல் னின்வரும் நற்பலன்நீக்கும்.

### இதுவுமது

அன்றியும் வீட்டின்முன்பார்வை அங்கணங்கள் க - ரு - ஆயின் உத்தமம். ரு-எ-கக-ஆயின்மத்தியம் மற்றதை அதமமெனக்கொள்ளவேண்டுமென்பதாம்.

### இதுவுமது.

வீட்டின் உ-ச-கூ-அ-க0-கஉ-கச-கசு இவ்வித அங்கணங்களாயிருப்பது அதமம். அன்றியும் வீட்டின்மேற்சாயை நாலுபக்கமும் சம உயரமாயும் தாழ்வாரம்நாலும் சமஅகலமாகவும் இருப்பதுநலமென்பதாம்.

## வீட்டுள் அறைகளிருக்கவேண்டிய விதி

வீட்டினுள்ளே அறைகள் தெருநடையுஞ்சேர்த்து ரு-எ-கூ-கக ஏகாதசிக்குகளுககொத்திருக்கின் நலமாம க-உ-ரு-ச-கூ-அ-க0-கஉ கச-கரு-கசு இச்சங்கியையுடைய அறைகள ஆகாவென்பதாம

### இதுவுமது

மனைக்கு நாலங்களாயினும் ஆல்லதுகழிகளாயினும்மேற்கூறை யேத்தித் தாழ்வாரமாத்திரம் தனம்போடுவதாயின் தீமையுண்டாம் மற்றும்வீட்டின் நடுவிலிருக்கின்ற முத்தம்அல்லது வாயலை கிழக்கு மேற்கு வடக்கு தெற்கு இவ்விரண்டும் அளந்து குழியாக்கி அச்சங்கியை எட்டிலேபெருக்கிட சேடம் எட்டுக்குள் க உ-யிருமாயின் சர்வதோஷம்நிவாரணம் மற்றசங்கியைகள் தீமையையுண்டாக்கும் மற்றும் வீட்டின்உட்புறத்தில் எங்காயினும் ஒறறைறதாலங்களிருக்குமாயின் மனக்கலக்கமுண்டாகும். மேலும்வீட்டிலுள்ளெதிருக்கெதிராய் ஒன்றையொன்று பார்க்கும்படியாக இரட்டைக்கூடங்கள் அமைக்கப்படாது அப்படியிருக்குமாயின் அவ்வில்லில் வாழ்பவர்களுக்கு தோஷங்கள் உண்டாக்குமென்பதாம்.

## வீட்டை ஈசான்யந்திருப்புவதும் வாயல்கள் நேராயிருக்க வேண்டியதும்.

வீட்டை யீசான்யந் திருப்பவேண்டுமெனின் ஒரங்குலத்துக்கு மேற்படாமல் திருப்புவது மங்களகரம் மற்றும்வீட்டின் கூடத்து மையமும் வாசலின்மையமும் ஒத்திருக்குமாயின் கிராட்சேபமாயிருக்கும். மேலும் தெருவாயற்படிக்கு நேராகப் புறக்கடைவரையிற் வாயல்கள் தடையில்லாமல் இருக்கின் யாதொரு குற்றமுமில்லை என்பதாம்.

## வீட்டுள் இத்தனைகட்டுகளிருக்க வேண்டுமென்பது

ஓர்வீட்டில் அடுக்கடுக்காய் மூன்றுதொட்டி கட்டுகளமைக்கப்படாது, அப்படி இருக்குமாயின், அம்மனையில்வாழ்கின்ற உயிர்களுக்குச்சேதம் உண்டாம் என்பதுநிச்சயம். ஆனால் முதற்கட்டுக்கடுத்தாப்போல் இரண்டாவதுகட்டு ஒன்றுமாத்திரம் அமைததுக்கொள்வது நன்மை. ஆயினும் அவ்விரண்டாங்கட்டுக்கு ஆயம்வேறேயன்றிம் முதற்கட்டின் ஆயத்திற் சேரமாட்டாதென்பதாம்.

## ஆத்தொழுவம் மேல்மாடம் மேற்படி மாடம் ஏறுகிறபடி ஜலதாரை இவைகள் அமைக்கவேண்டியவிதி,

பசுத்தொழுவம் வீட்டில் அமைக்கவேண்டுமெனின் அவ்வீட்டின் கட்டடத்துச் சம்பந்தப்படாமல் புறம்பாய் அமைக்கவேண்டும் மற்றும்வீடுகளில் மேல்மாளிகை கட்டவேண்டுமெனின் வடபுறத்திலும், கீழ்புறத்திலும் கட்டுவதே நியமமென்றும் அப்படிக்கட்டினால் சுகமுண்டாமென்றும், இதுநீங்கலாக மற்றமேற்கு தெற்காகிய இவ்விரண்டுதிசைகளுள் மேற்புறத்தில்கட்டுவது மத்திபமென்றும், தென்புறத்தில்கட்டினால் தீங்கைத்தருமென்றும். மற்றும் அம்மேன்மாடங்களேறுவதற்குப் படிகள் வடக்குஅல்லதுகிழக்கு இத்திக்குகளைநோக்கி யேறுவது உத்தமமென்றும், மற்றதிசைகள் அதமமென்றும், மற்றும் வீட்டின்ஜலம் போகின்றதாரை வடக்குகிழக்கு ஈசான்யம் இத்திசைகளிற் செல்லவிடுவது உத்தமமென்றும், மேற்கு-தெற்கு-நிருதிமூலை-வாயுமூலைமத்திபமென்றும், ஆக்கினேயமூலை மிகக்கொடியதென்றும், முன்னோர்கள் உரைத்திருக்கின்றன ரென்பதாம்.

## வீட்டின்சுவர் அளவுவிதி

வீடுகளுக்குப் பட்டமரமட்டம் ௯ அடி உயரத்திற்குக் குறை வில்லாமல் வைக்கவேண்டும். மற்றும் தாய்ச்சுவர்முதல் உட்புறம் அமையுஞ் சுவர்கள் யாவும் ஒன்றரை அடி அகலத்துக்குக் குறை வில்லாமல் இருந்து ஆயப்பொருத்தங்கள் யாவும் பொருந்தியவீடுக ளில் அஷ்டலட்சுமிகளும்வந்து பொருந்துவரென்பதாம்,

## வீட்டுள்கூடம் தாழ்வாரங்கள் இவைகளுக்கு, அகலமும் நீட்சியும் அமைக்க வேண்டிய விதி,

வீடுகளுக்குத் தாழ்வாரம் அஞ்சரையடிக்குக் குறையாமல் மே ற்பட்டே அமைக்கவேண்டும். மற்றும் வீட்டின் அடிமட்டத்திற்குப் புறக்கடை தாழ்ந்திருக்கவேண்டும். அன்றியும் தூலம்வைத்து கட் டும்படியான வீடுகளுக்கு உள்ளகலம் அடி எட்டும், அங்குலம் ஒன் றும், அல்லது இரண்டாயினுமிருக்கின் நன்மை, மற்றும் வீடுகளில் அமையும்கூடங்களுக்கு அடி கஉ-கரு-உஉ-உ௬ இக்கணக்குகளுக் கொத்தநீட்சி அமையச்செய்வது உத்தமமாமென்பதாம்.

## வாசல்வாஸ்துநிதானம்,

வீட்டைச்சேர்ந்த வாசல் அல்லது முத்தமானது கிழக்குமேற் களவுக்கு வடக்குத் தெற்களவு குறைந்திருக்கின் சூரியவாஸ்து வெ ன்றும், கிழக்குமேற்களவுக்கு வடக்குத்தெற்கு நீண்டிருக்கின் சந்தி ரவாஸ்துவென்றும். இவ்விரண்டின் சூரியவாஸ்துமுத்தம் நலமும், சந்திரவாஸ்து முத்தம்தீமையுந்தரும் ஆகையால் கிழக்கு, மேற்கு, சற்றுயினும் நீண்டிருக்கச்செய்தால் பாக்கியத்தை யுண்டாக்கு மெ ன்பதாம்.

## கூபவிதியும் மரக்களைக்நட்டும் விதியும்,

வீடுகளுள் வருணபாகத்திற்றுனே கிணறுகள்அமையவேண்டி யது. பொதுவிதியாயினும் வடக்குமுகம் கிழக்குமுகமாயிருக்கின்ற வீட்டில் நிருதிமூலையிலும், தெற்குமுகம் மேற்குமுகமான வீட்டில் ஈசானியத்தில் இருப்பது ஒருபட்சம் மற்றும் வாயுவுமூலையிலும் தெற்கிலும் கிணறுகளிருப்பது மத்திமபட்சம் எந்தமுகமா யிருக்கி ன்ற வீடுகளிலேயும். அக்கினிமூலையிருப்பது அதமம். அதனல் கொடியநீக்குண்டாம் மறறும் காட்டுக்குப்போய் மேயத்தகரு

கின்ற பசு எருது முதலியவைகளைத் தொழுவத்தில் மேற்காயினும் அல்லது வடக்காயினும் பார்க்கக்கட்ட வேண்டுமென்பதாம்.

## மனையின்மேல் தாக்கக்கூடாத சாயைகளும், மற்றும் உண்டாகும் ஆலயநோக்குகளின் பலனும்

வீடுகளின்மீது ஆலயங்களினது சிகரம் அல்லது ஸ்தூபியின் நிழல்தாக்குமாயின், அவ்வில்லம் க்ஷீணகதியையடையும். அன்றியும், விஷ்ணுஆலயத்துப்பின்னும் சிவன் விக்கினேஸ்வரர் இவ்வாலயங்களுக்கு முன்னும் இருக்கின்றவீடுகளும் க்ஷீணகதியை அடையுமென்பதாம்,

## கோயில் கோபுரம் கூடம்மனை அளவு முழக்கோல்.

பூமி-மலை-மனை-சாலை-மாளிகை இவைகளை கிஷ்க்குவின் விரலாலளப்பது. கோபுர-கூடம். இவைகளை அறுவிரல்முழத் தாலளப்பது. இதில்பனிரண்டுவிரலுக்கு விதஸ்த்தியென்று பெயராம். இதிவிரட்டி இருபத்துநால் விரல்கொண்டது கிஷ்க்குவென்பதாம்.

## நட்சத்திர பலன்.

அசுவனி-மிருகசிரம்-உரோகணி - பூசம்-அஸ்தம்-உத்திராடம்-திருவோணம்-அவிட்டம்-சதயம், இந்த, ௯-ம் உத்தமம்.

திருவாதிரை-புனர்பூசம்-உத்திரம்-கேட்டை - உத்திரட்டாதி ரேவதி இந்த, ௬-ம் மத்திமம்.

பரணி-கார்த்திகை-ஆயிலியம்-மகம்-பூரம்-பூரட்டாதி - சுவாதி பூராடம்-விசாகம்-மூலம், இந்த, ௧௦-ம் அதமம்.

## நட்சத்திரத்திற்கும்யோகத்திற்கும் அமிசையறிய.

| | |
|---|---|
| அசுவனிக்கு | அரிஷ்டணம் |
| ரோகணிக்கு | பிரீதி |
| புனர்பூசத்துக்கு | வியதிபாதம் |
| மகத்துக்கு | சோபனம் |
| அஸ்தத்திற்கு | சிவம் |
| விசாகத்துக்கு | திருதி |
| மூலத்திற்கு | சுபம் |
| திருவோணத்திற்கு | விருத்தி |
| பூரட்டாதிக்கு | மாகேந்திரம். |

இந்த, ௯-நட்சத்திர யோகத்துக்கும்தனம்—ச

| | |
|---|---|
| பரணிக்கு | விஷ்கம்பம் |
| மிருகசீரிடத்துக்கு | சித்தி |
| பூசத்துக்கு | சௌபாக்கியம் |
| பூரத்துக்கு | பரீகம் |
| சித்திரைக்கு | சுகர்மம் |
| அனுஷத்துக்கு | சாத்தியம் |
| பூராட்டாதிக்கு | கண்டம் |
| அவிட்டத்துக்கு | சுப்பிரமம் |
| உத்திரட்டாதிக்கு | வியாக்காதம் |

இந்த, ௯-நட்சத்திர யோகத்துக்கும் தனம்—௫.

| | |
|---|---|
| கார்த்திகைக்கு | வச்சிரம் |
| திருவாதிரைக்கு | ஆயுஷ்மான் |
| ஆயிலியத்திற்கு | வரீயான் |
| உத்திரத்திற்கு | அதிகண்டம் |
| சுவாதிக்கு | சித்தம் |
| கேட்டைக்கு | சூலம் |
| உத்திராடத்துக்கு | பிராமியம் |
| சதயத்திற்கு | துருவம் |
| ரேவதிக்கு | வைதிருதி |

இந்த, ௯-நட்சத்திர யோகத்துக்கும் தனம்—௧௨

## நட்சத்திரத்திற்கும் யோகத்திற்கும் தார பலன்.

| | |
|---|---|
| அசுவனிக்கு | பேசிதாரம் |
| ரோகணிக்கு | சரிதாரம் |
| புனர்பூசத்துக்கு | பேசிதாரம் |
| மகத்துக்கு | சரிதாரம் |
| அஸ்தத்துக்கு | பேசிதாரம் |
| விசாகத்துக்கு | சரிதாரம் |
| மூலத்துக்கு | பேசிதாரம் |
| திருவோணத்துக்கு | சரிதாரம் |
| பூரட்டாதிக்கு | பேசிதாரம் |
| பரணிக்கு | சரிதாரம் |
| மிருகசீரிடத்துக்கு | பேசிதாரம் |
| பூசத்துக்கு | சரிதாரம் |
| பூரத்துக்கு | பேசிதாரம் |
| சித்திரைக்கு | சரிதாரம் |
| அனுஷத்துக்கு | பேசிதாரம் |
| பூராடத்துக்கு | சரிதாரம் |
| அவிட்டத்துக்கு | பேசிதாரம் |

| | |
|---|---|
| உத்திரட்டாதிக்கு | சரிதாரம் |
| கார்த்திகைக்கு | பேசிதாரம் |
| திருவாதிரைக்கு | சரிதாரம் |
| ஆயிலியத்திற்கு | பேசிதாரம் |
| உத்திரத்திற்கு | சரிதாரம் |
| சுவாதிக்கு | பேசிதாரம் |
| கேட்டைக்கு | சரிதாரம் |
| உத்திராடத்திற்கு | பேசிதாரம் |
| சதயத்திற்கு | சரிதாரம் |
| ரேவதிக்கு | பேசிதாரம். |

இந்தப்படி பரணிமுதல், கூ-நட்சத்திரமும் இதில்சொன்னபடி யெண்ணிக்கொண்டு யோகத்தை அறியவும்.

## ஜென்மநட்சத்திரம் பார்க்கும்நிலை.

ஜென்மநட்சத்திரம் முதல் கடைசிநட்சத்திரம்வரைக்கும்எண்ணினதுகையை நாலில்பெருக்கி திதிவாரங்கூட்டி நவக்கிரகத்தில் கிழக்கேநின்றது ஆதித்தன்-சோமன்-லாபயோகம்-அங்காரகன்-மிருத்தியு - புதன்-பிரகஸ்கதி-லாபம்-சுக்கிரன்-சவுக்கியம்-சனி-மகாபாண்டம்-ராகு-காதாபாதம்-கேது-மகதயன் இதுநித்தியபலன்.

இலக்கினத்தில் குருவிருக்கினும் சுக்கிரனிருக்கினும் அப்போதுவீடுகட்டினால் ஐந்நூறுவருடம் சுகமாயிருப்பார்கள். லக்கினத்தில் புதனிருந்தால் ஐம்பதுவருடம் சுகமாய்வாழ்ந்திருப்பார்கள் லக்கினத்தில் புதனும் சுக்கிரனும் குருவும் இருந்தால் ஐம்பது வருடம் ஸ்தம்பபிரதிஷ்டை. லக்கினத்தில் குருவும், நாலில்சந்திரனும்செவ்வாயும் சனியும், கக-ல் இருக்க நாற்பதுவருடம் சுகமாகவிருக்கும். லக்கினத்தில் சுக்கிரனிருக்க நூறுவருடம் சுகமாகவிருக்கும். சிங்கம் கன்னி துலாம் இந்தமூன்று இராசியிலும் சூரியனிருக்க ஈசான்யத்தில் ஸ்தம்பப்பிரதிஷ்டை செய்யவேணும். கும்பம் மேஷம் இக்திரண்டுராசியிலும் சூரியனிருக்க நிருதிமூலையில் ஸ்தம்பப்பிரதிஷ்டைசெய்யவேணும். ரிஷபம் கடகம் மிதுனம் இந்தமூன்றுராசியில் சூரியனிருக்க அக்கினிமூலையில் ஸ்தம்பப்பிரதிஷ்டைசெய்யவேணும். இப்படிபார்த்துச் செய்யாமல் அன்னியமாகச்செய்தால் தரித்திரமுந்துக்கமும்வரும் புருஷனுக்கு ஊனியாம்.

## இராசிவிழிப்புராசி.

மேஷம்-ரிஷபம்-மிதுனம்-கர்க்கடகம்-தனுசு-மகரம் இந்த, கூ-ராசியும் விழிப்புளராசியாம்.

## இலக்கினசுபக்கிரக குரூரநிர்ணயம்.

நாலாமிராசி பத்தாமிராசி ஏழாமிராசி ஒன்பதாமிராசி ஐந்தாமிராசி இவைகளில் சுபக்கிரகமிருந்தாலும், ஷை கிரகமிலக்கினத்

தைப்பார்த்தாலும், ஷெ கிரகம் உச்சத்திலிருந்தாலும், பாபக்கிரகம் ஆறாமிராசி மூன்றாமிராசி பதினோராமிராசியிலிருக்க ஸ்தம்பப்பிரதிஷ்டைசெய்யில் சுபகரமுண்டாம்.

## மாதங்களில் காலசர்ப்பகெதி லட்சணம்,

காலசர்ப்பகெதி ரிஷபம் மிதுனம் கடகம் இந்தமூன்று சங்கராந்தியிலும் காலசர்பம். ஈசான்யத்தில்-சிரசும், வாயுமூலையில்-இடுப்பும், நிருதிமூலையில்-வாலும், இதன்பின்பக்கத்திலும், சிம்மம் கன்னி துலாம் இந்தமூன்றுசங்கராந்தியிலும் வாயுவுமூலையில்-சிரசும், நிருதிமூலையில்-இடுப்பும், அக்கினிமூலையில்-வாலும், இதன்பகமாகவும், விருச்சிகம் தனுசு மகரம் இந்தமூன்றுசங்கராந்தியிலும், அக்கினிமூலையில்-சிரசும், ஈசான்யமூலையில்-இடுப்பும், வாயுவுமூலையில்-வாலும், இவ்விதமாக இருக்கும் இடுப்புப்பக்கம் ஸ்தம்பப்பிரதிஷ்டைசெய்யிற் சுகமுண்டாம். வாயின்மேற்செய்யில் மிருத்துபயம். முதுகின்மேற்செய்யில் கெடுதியுண்டாம். வாலின்மேற்செய்யில்சலனம். இப்படிக்கில்லாத விடத்தில் ஸ்தம்பப்பிரதிஷ்டைசெய்யில் சம்பத்துண்டாம்.

## சூசிகாசங்கராந்தி நிர்ணயம்

ரிஷபம் கடகம் மிதுனம் இந்தசங்கராந்தியில் சூரியனிருக்க, கன்னி கும்பம் துலாம் இதில் சம்பந்தமானாலும், உத்திரம் அஸ்தம் சித்திரை இந்தமூன்று நட்சத்திரத்திலும் சந்திரனிருக்க, அக்கினிமூலையில் ஸ்தம்பப்பிரதிஷ்டைசெய்யலாம். கும்பம் மீனம் மேஷம், இந்தசங்கராந்தியில் சூரியனிருக்க, ரிஷபம் மிதுனம் கடகம் இது சம்பந்தமானாலும், உரோகணி மிருகசீரிடம் புனர்பூசம் இந்தமூன்று நட்சத்திரத்திலும் சந்திரனிருக்க நிருதிமூலையில் ஸ்தம்பப் பிரதிஷ்டைசெய்யவும், இந்தப்படிக்கு பிரதமஸ்தம்பப் பிரதிஷ்டை செய்யலாம். சுபப்பிரதம் அன்னியமார்க்கத்தில் செய்தால் கேடுவரும்.

## ஜென்மகேந்திர கிரகபலன்

பிரகஸ்பதியிருக்கும் லக்கினத்தில் ஸ்தம்பப் பிரதிஷ்டைபண்ணி புதனிருக்கின்ற லக்கினத்தில் தூலமேத்தி சுக்கிரனிருக்கின்ற லக்கினத்தில் ஓமேமூடினால் அந்தவீட்டுக்கு அக்கினிபயம், சோரபயம். இராஜபயமுமில்லை. சலராசியில் சந்திரனிருக்கினும், ருடீல்-சந்திரனிருந்தாலும்சுக்கிரவாரத்திலீகட்டினால்சம்பத்துண்டாம்.

## மனைகளின் இராஜயோகம்.

குருவாரத்தில் கடகம் மீனம் தனுசு இந்தலக்கினத்தில் பிரகஸ்பதியானாலும், சுக்கிரனானாலுமிருக்க வீடுகட்டினால் அந்தவீட்டில் சவுக்கியமாய் ராஜாதிபதியாய் புத்திரசம்பத்துண்டாகி சுகமாயிருப்பார்கள். சுபக்கிரகம், ௧0-ல் இருந்தாலும் லக்கினத்தைப்பார்த்துக்கொண்டிருந்தாலும் அப்படிப்பட்டவேளையில் ஸ்தம்பப்பிரதிஷ்டை செய்தால் சுபப்பிரதமாகும். மீனலக்கினத்தில்சுக்கிரனிருக்கவானாலும், ௪-ல்பிரகஸ்பதியிருக்கவானாலும், ௧0-ல் உ-ல்உச்சஸ்தானமாயிருந்தசனி-௧௧-ல் இருந்தாலும் அப்படிப்பட்ட லக்கினத்தில் ஸ்தம்பப்பிரதிஷ்டைசெய்தால் சுகமுண்டாம்.

## நிலநீளம் வைக்கும்விதி

ஒன்றுனநிலம் ஒருவிரலொத்திக் தள்ளிவைப்பது யாதொரு நீளத்தையும், அ-பங்குசெய்து, எ-உட்கூடு ஒன்னை, ௬-செய்து மேல், ௫-கீழ், ௪-தளமட்டம்வைப்பது நிளநீலத்தை, ௬-செய்து உட்கூடு, உ-௬-செய்து- மேல்-௫, கீழ்-௪, வேறு நிலநீளத்தை, எ-செய்து, ௬-உட்கூடு, ௩-௬ செய்து மேல-௫ கீழ்-௪, நிற்பதங்கள்பற்றி வைக்கவேண்டுமென்பதே உட்கூடுவிரல் முறியாமல்வைப்பது உட்கோட்டிற் பாதிபோம் விரலொறறிக்கொள்வது.

பங்குனிமுதல் மூன்றுமாதம் வடக்குமுகவாசலும். ஆனிமுதல் மூன்றுமாதம்கிழக்கு முகவாசலும், புரட்டாசிமுதல் மூன்றுமாதம் தெற்குமுகவாசல்விட உத்தமம.

மார்கழி தை மாசி இந்த மூன்றுமாதமும் மேற்கே தலையான படியால மேற்கே வாசல்விடவும.

## அருக்க னிலையறிய,

சனிக்கிழமைராத்திரி,௩0-நாழிகையும், ஞாயிற்றுக்கிழமைபகல், ௩0-நாழிகையும், தெற்கிலும், ஞாயிற்றுக்கிழமைராத்திரி௩0-ம் திங்கட்கிழமை, ௧0-ம், தென்மேற்கிலும், செவ்வாக்கிழமை பகல் ௩0-ம்இராத் திரியில், ௧0-ம்மேற்கிலும், மற்ற, உ0-ம், புதன்கிழமை பகல், ௩0-ம், வடமேற்கிலும், புதன்கிழமை இராத்திரி ௩0-ம், வியாழக்கிழமைபகல், ௩0-ம், இராத்திரியில், ௧0-ம், வடக்கிலும், மற்ற உ0-ம், வெள்ளிக்கிழமை, ௬0-ம், வடகிழக்கிலும்,சனிக்கிழமை பகல், ௩0-ம் கிழக்கிலும், அருக்கனிருக்கும் அக்கினிமூலை பாழாம்.

## திசையோனி நிலை

| | | | |
|---|---|---|---|
| கருடன் | கிழக்கு | பூனை | தென்கிழக்கு |
| சிங்கம் | தெற்கு | நாய் | தென்மேற்கு |

| | | | |
|---|---|---|---|
| பாம்பு | மேற்கு | எலி | வடமேற்கு |
| யானை | வடக்கு | முசல் | வடகிழக்கு |

அருக்கனில் கருடனை வைத்து முறையேபார்க்கும்போது எதிர்க்கெதிர் பகையோனிநிற்கும், அவைகளுள் கருடன் திசையிலிருந்து பாம்புத்திசைக்குப்போகலாம், பாம்புத்திசையிலிருந்து கருடன் திசைக்குப் போகலாகாது. ஏனெனில் கருடன் இரையெடுக்கப்போகும், பாம்பு இரையாகவரும் ஆதலாலென்க. ஒருவன்யாத்திரைக்குப் பட்சிமுதலிய சகுனங்கள் பார்க்கும்போது இரையாகும் யோனித்திசையிலிருந்து இரையெடுக்கும் யோனித்திசைக்கு அவை போகலாகாது.

## விஷ்டி தோஷம்

பூர்வபட்சச்சதுர்த்தசியில்ஐந்துசாமம்மேற்கிலேயும், அஷ்டமியில் இரண்டுசாமம் தென்கிழக்கிலேயும், ஏகாதசியில் ஏழுசாமம்,வடக்கிலேயும், பூரணையில்நாலுசாமம் தென்மேற்கிலேயும், அமரபட்சத்திரிதிகையில் ஆறுமாசம் வடமேற்கிலேயும், சத்தமியில்மூன்றுசாமம்தெற்கிலேயும்,தசமியில்எட்டுசாமம்வடகிழக்குலேயும், சதுர்த்தசியில் முதல்சாமம்கிழக்கிலேயும் விஷ்டியுண்ணுதலால், இச்சாமங்களில் சுபகாரியங்களும், இத்திசையில் யாத்திரையுஞ் செய்யலாகாது,

## வீடுகளுக்கு தெருவாசற்கால்வைக்கும் இலக்கணம்.

ஆவணிமாதம் கட்டும்வீட்டுக்கு கிழக்குபார்த்த வாசற்படிவைக்கலாம்.

கார்த்திகைமாதம் கட்டும்வீட்டுக்கு தெற்குபார்த்த வாசற்படி வைக்கலாம்.

மாசிமாதம் கட்டும்வீட்டுக்கு மேற்குபார்த்த வாசற்படிவைக்கலாம்.

வைகாசிமாதம்கட்டும்வீட்டுக்கு வடக்குபார்த்தவாசற்படிவைக்கலாம்.

## எந்தமாதங்களில் வாசக்கால்வைத்தாலும் திசையறிந்து வைக்கவேண்டும்,

மேஷம் ரிஷபம் இவ்விரண்டுமாதங்களில் வீடுகட்டில் வடக்குப்பார்த்த வாசற்படி வைக்கவும்.

கடகம் சிங்கம் இந்த இரண்டுராசியில் சூரியனிற்க வீடுகட்டினுல் கிழக்குபார்த்த வாசற்படி வைக்கலாம்.

துலாம் விருச்சிகம் இவ்விரண்டுராசியிலும் சூரியனிருக்க வீடு கட்டினுல் தெற்குப்பார்த்த வாசற்படி வைக்கலாம்.

மகரம் கும்பம் இவ்விரண்டுராசியிலும் சூரியனிருக்க வீடுகட்டினுல் மேற்குப்பார்த்த வாசற்படி வைக்கலாம்.

கன்னி மிதுனம் தனுசு மீனம் இந்தராசிகளில் சூரியனிருக்க வீடுகட்டினுல் வாசக்கால் வைக்கலாகாது.

மேஷ சிங்க தனுசுராசியில் ஜனித்தோர்க்கு வடக்குமுகமான வீடும், ரிஷபகன்னி மகரராசியார்க்கு தெற்குமுகவீடும், மிதுனதுலா கும்பவிராசிக்காரருக்கு மேற்குமுகவீடும், கடகவிருச்சிகமீனவிராசிக்காரருக்கு கிழக்குமுகவீடு கட்டிடங்களில் வசிக்கில், ஐசுவரியம். இராஜயோகம் புத்திரகுடும்பவிருத்தியும், நோயற்றவாழ்வுமுண்டாம் அல்லது, மாறியிருக்கில் கடனும் பலரோகவாதையும் உண்டாகும்.

## திசையறிந்து வாசற்கால் வைக்கும்விதி

கிழக்குப்பார்த்த வாசற்படியுள்ள வீட்டுக்கு ஈசான்யமுதல்அக்கினிவரைக்கும் அளர்ந்துஅதை அ-பாகம்பண்ணினுல்.

முதற்பாகம்—ஆனி. இரண்டாம்பாகம்—சோகம் மூன்றும்பாகம்— தனப்பிராப்தி. நாலாம்பாகம்— இராஜஸன்மானம். ஐந்தாம்பாகம்= புத்திரவிருத்தி ஆறும்பாகம்=சுகம். ஏழாம்பாகம்—துக்கம், எட்டாம்பாகம்—ரோகம்.

மேற்குப்பார்த்த வாசற்படிக்கு நிருதிமூலை முதல் வாயுமூலை வரைக்கும் அளந்து அ-பாகம் பண்ணினுல்,

முதற்பாகம்—ஆனி. இரண்டாம்பாகம்—சத்துருவிருத்தி. மூன்றும்பாகம்—சுகம். நாலாம்பாகம்—தனம்.ஐந்தாம்பாகம்—பாக்கியம். ஆறும்பாகம்= சுகம். ஏழாம்பாகம்—பயம். எட்டாம் பாகம் நாசம்.

வடக்குப்பார்த்த வாசற்படிக்கு வாயுமூலைமுதல்ஈசான்யமூலை வரைக்கும் அளந்து,அ-பாகம்செய்தால்.

முதற்பாகம்—மனையாள்நாசம். இரண்டாம்பாகம்—பலயீனம் மூன்றும்பாகம்—தனஆனி. நாலாம்பாகம்—தானியவிருத்தி. ஐந்தாம்பாகம்—தனம். ஆறும்பாகம்—சௌக்கியம். ஏழாம்பாகம்—துக்கம். எட்டாம்பாகம்—பாதகரம்.

தெற்குப்பார்த்த வாசற்படிக்கு அக்கினிமூலைமுதல் நிருதி மூலைவரையில் அ-பாகம் பண்ணினுல்.

முதற்பாகம்—தனஹானி.இரண்டாம்பாகம--சத்துருவிருத்தி மூன்றும் பாகம்=சுகம், நாலாம்பாகம்—தனவரவு. ஐந்தாம் பா

கம்—பாக்கியமுண்டாம். ஆறாம்பாகம்—நன்மையுண்டாம். ஏழாம் பாகம்—பயம். எட்டாம்பாகம்—நாசமாம்.

இந்தப்பாகங்களில் இயற்கைதெரிந்து நல்லபாகத்தைப் பார்த்து வாசற்கால் வைக்கவேண்டியது.

## நவக்கிரகபலன்களறிந்து வாசற்கால்வைக்கும் நிர்ணயம்

கிழக்குப்பார்த்த வாசற்படிக்கு ஈசானியமுதல் அக்கினிமூலை வரைக்கும் அடியளந்து,௯-பாகம் பண்ணவும்.

தெற்குப்பார்த்த வாசற்படிக்கு அக்கினிமூலைமுதல்நிருதிமூலை வரைக்கும்,௯-பாகம் பண்ணவும்.

மேற்குப்பார்த்த வாசற்படிக்கு நிருதிமூலைமுதல் வாயுமூலைவரைக்கும் அளந்து,௯-பாகம் பண்ணவும்.

வடக்குப்பார்த்த வாசற்படிக்கு வாயுமூலைமுதல் ஈசானியமூலைவரைக்கும்,௯ பாகம் பண்ணவும்.

இந்நான்குதிக்கும் முதற்பாகம்—சூரியன். இரண்டாம்பாகம்-சந்திரன் மூன்றாம்பாகம்—அங்காரகன், நான்காம்பாகம்—புதன் ஐந்தாம்பாகம்—குரு. ஆறாம்பாகம்—சுக்கிரன். ஏழாம்பாகம்—சனி எட்டாம்பாகம்— ராகு ஒன்பதாம்பாகம்—கேது. இந்நவக்கிரகத்தில் பிரகஸ்பதியிருக்கிற பாகத்தில் பிரதானம்கோயிலுககு வாசற்கால் வைக்கலாம்.

சுக்கிரன்பாகத்தில் வீட்டிற்கு வாசற்கால்வைக்கலாம். அதன் பாகத்தின் மாட்டுத்தொழுவத்திற்கும் வாசற்கால் வைக்கலாம்.

மேலும் புதன் குரு சுக்கிரன் இவைகளில் கோயிலுக்கும் வீட்டிற்கும் மாட்டுத்தொவழுத்திற்கும்வாசற்கால் வைக்சலாம்.

வாசற்காலுக்கு இடதுபக்கததிற் கதவுவைக்கவேண்டும்.

இப்பால் ஏழுசாண் நீளமும் மூன்றுசாண் அகலமுமுள்ள வாசற்கால் உத்தமம்.

ஒன்பதுசாண்நீளமும் ஐந்துசாண் அகலமுமுள்ளவாசற்காலும் உத்தமம்.

இரண்டுமரத்தினால் வாசற்கால்பண்ணலாகாது. மூன்றுவிதமரத்தினால் கட்டில்செய்யலாகாது.

கதவுக்கு ஒற்றைப்படை பலகைசேர்த்துச் செய்யவேண்டும் இரட்டைப்பலகை சேர்த்துப் பண்ணலாகாது.

### மூலைக்குத்தாகாதறிய,

வீட்டில்நுழையும்போது வீட்டுவாசற்படிக்கு எதிரில்கட்டைச்சுவரிருந்தால் சத்துருபயமாம்.

தெருவாசற்படியுயர்ந்து உள்வாசற்படிதாழ்ந்திருக்கக்கூடாது அப்படியிருக்கில் வரும்பலன் நீங்கிவிடும்.

## வாஸ்துவிழிநோக்கில் இருபத்தெட்டு

## பங்கில் முகூர்த்தம்.

வாஸ்துவின் விழிநோக்கறிந்து முகூர்த்தம்செய்வதாகையால் அந்தமனையை இருபத்தெட்டுப் பாகஞ்செய்து காலில் பதினேழு பாகந்தள்ளி தலையிற்பத்துபாகந்தள்ளி நடுவிலொருபாகத்தில் முகூர்த்தஞ்செய்தால் இராஜசம்பத்துண்டாம்.

வாஸ்துவின் அதிகாரலட்சணமாவது நாழிகை மூன்றேமுக்காலுக்குச் சமயம் ஐந்து.

முதற்சமயங்கடிகைமுக்காலுக்குள் தந்தசுத்திசெய்வான் அதில் முகூர்த்தஞ்செய்தால் அரசராற் பயமுண்டாம்.

வாஸ்து இரண்டாஞ் சமயமானதிற் கடிகைமுக்காலுக்குள் ஸ்நானஞ்செய்வன் அதில்முகூர்த்தஞ்செய்தால் பீடையுண்டாகும்.

மூன்றாஞ்சமயக்கடிகை முக்காலுக்குள்ளே பூசைசெய்வன் அதில் முகூர்த்தஞ்செய்தால் வருமையால் வாடுவார்கள்.

நாலாஞ்சமயமான கடிகைமுக்காலுக்குள் போஜனம் அதில் முகூர்த்தஞ்செய்தால் புத்திரசந்தான முண்டாகும்.

ஐந்தாஞ்சமயமான கடிகைமுக்காலுக்குள் தாம்பூலங் கொள்வன் அதில் முகூர்த்தஞ்செய்தால் மகாவுத்தமம்.

## கிரகபலன்.

வியாழம் வெள்ளிவாரமும் லக்கினம்நாலு ஏழிற்சுபர்ஆறிலும் மூன்றிலும் பாவரிருக்க கோபுரம் சாலைவீடுமாளிகை இவைகள்கட்டில் நூறுவயது பெற்றுவிளங்கும்.

ஜென்மலக்கினத்திற்கு 0 நாலுபக்கத்தில் சந்திரன்நிற்க, பதினொன்றில் இராகு-செவ்வாய்-சனி இவர்களிருக்கில் மனைமுகூர்த்தஞ்செய்தால் வயதுநூறுவருஷம் விளங்கும் லக்கினத்தில்குருவும் சுக்கிரனுமிருந்தும் மூன்றில்சூரியனிருக்க ஆறில் செவ்வாயிருக்க, முகூர்த்தஞ்செய்யிலந்தமனை நூறு௵ விருத்தியாய்விளங்கும்.

லக்கினத்தில் சந்திரன்நிற்க, ௬-ல்புதனிருக்க, குரு உச்சமாக முகூர்த்தஞ்செய்யில் அந்தமனைக்கு அறுநூறுவயதாகும். இலக்கினத்தில் பத்தில் சுக்கிரனிருக்க, மூன்றில்புதனிருக்க. பாவரஸ்தமான மகாமுகூர்த்தஞ்செய்யில் அந்தமனைக்கு அறுநூறுவயது விளங்கும்.

குருசுக்ஷேத்திரத்திலிருக்க, வெள்ளி வீட்டில்புதனிருக்கமுகூர்த்தஞ்செய்யில் எண்ணூறுவடதிருக்கும். சூரியன் அஸ்தமான

---

0 நாலுபக்கமாவது-௧-௪-௭-௧0-ஆமிடமாம்.

காலத்தில் சந்திரனிருக்க, ஆலயமுகூர்த்தஞ்செய்யில் ஆயிரம் வருஷம் விளங்கும்.

சுக்கிரனுதயமாகவெழில் இராஜனிருக்க, பத்தில்சந்திரனிருக்க முகூர்த்தஞ்செய்யில் ஆயிரம்வருஷம் விளங்கும். இலக்கினத்திற் சுக்கிரனிருக்க குரு சுக்ஷேத்திரத்தில் இருக்க முகூர்த்தஞ்செய்யில் அக்கினிபயமில்லை.

கடகம்-மகரம்-மீனம் இவைகளிற்சந்திரனிருக்க, வைக்கோல் போட்டால் ஜெயமாகும். பூராடம்-திருவோணம்-உரோகணீ - உத்திராடம்-உத்திரட்டாதி-ஆயிலியம்-மிருகசீரிடம் இவைகளில் குருவிருக்க குருவாரத்திற்செய்ய மகிழ்ச்சியுண்டாம்.

சலவிராசியில் சுக்கிரனிருக்க, சுக்கிரவாரமாயிருந்தால் செல்வமுண்டு. சலவிராசியில் சந்திரனிருக்க சோமவாரமாகில் மனையாள் கெர்ப்பமாயினும் முகூர்த்தஞ்செய்யினும் குடிபுகினும் மத்திபமென்று மயனென்பவர் சொல்லிய வாக்கியமாகும்.

| | | | |
|---|---|---|---|
| கிழக்கு | இந்திரன் | மேற்கு | வருணன் |
| தென்கிழக்கு | அக்கினி | வடமேற்கு | வாயுவு |
| தெற்கு | இயமன் | வடக்கு | குபேரன் |
| தென்மேற்கு | நிருதி | வடகிழக்கு | ஈசானியன் |

## இலக்கின பலன்

ரிஷபம்-சிங்கம்-விருச்சிகம்-கும்பம் இந்நான்கும் ஸ்திரலக்கினம் உத்தமம். மேஷம்-கடகம்-துலாம்-மகரம்-இந்நான்கும் சரலக்கினம் மத்திபம். மிதுனம்-கன்னி-தனுசு-மீனம் இந்நான்கும்உபயராசியாகையால், வீடுகட்டக்கூடாது, ஆரம்பலக்கினத்திலிருந்துமுடிவிலக்கினத்துக்குச் சத்துருக்ஷேத்திரமான லக்கினேச்சுரன் சத்துருக்ஷேத்திரத்திலிருந்தாலும், ஆரம்பலக்கினத்திற்குப்பத்தாமிடத்திலிருந்தாலும் அப்படிப்பட்டவேளையில் வீடுகட்டினல். பராதீனமாய்ப்போகும்.

மகரம்-மிதுனம்-சிங்கம்-ரிஷபம் இந்தராசியுடையோர் கிராமமத்தியில் வீடுகட்டலாகாது.

கத்திரிக்கோல்போலும். மூன்றுமூலைபோலும், சேத்திரம்போலும், தலைபோலும். மத்தளம்போலும், கொட்டைப்பாக்குபோலும், உள்ளும்புரம்புமாயிருக்கப்பட்ட பூமியிலும் உப்பு நிலகிராமத்திலும்

அல்லது அதற்கு மூலையிலும், பள்ளநிலத்திலும், தண்ணீரோடுகிற நிலத்திலும், பலர்கூடாதென்று தடுக்கும்நிலத்திலும், கோயில்நிலத்திலும், புற்றிட்டிருந்தநிலத்திலும், சுடுகாட்டுநிலத்திலும், ஆடுமாடு கட்டப்பட்டநிலத்திலும், கிழக்கு மேற்கு அகலங்குறைந்த நிலத்திலும், தண்ணீர்சமீபித்த நிலத்திலும், வீடுகட்டலாகாது, கட்டில்பலவித துன்பமுண்டாகும்,

## பூமியைச்சோதித்து வீடுகட்டும்நியமம்.

வெளுத்தபூமி, தித்திப்பானபூமி, தாமரைப்பூ வாசனையுள்ள பூமி, இவைகளில் பிராமணர் வீடுகட்ட—உத்தமம்.

சிவந்தபூமி, துவர்ப்புபூமி, குதிரைவாசனையுள்ளபூமி, இவைகளில் அரசர்கள் வீடுகட்டினல்—உத்தமம்.

கறுத்தபூமி, கசப்பு காரமுள்ளபூமி, தானிய வாசமுள்ளபூமி, இவைகளில் சூத்திரர் வீடுகட்ட—உத்தமம்.

பச்சைபூமி, புளி உப்பு பொருந்தியபூமி இவைகளில் சங்கம சாதிகள் வீடுகட்ட—உத்தமம்.

நீங்காதமதுரமும் பரிமளம்பொருந்திய பூமியில் சகலசாதிகளும் வீடுகட்ட—உத்தமம்.

## க்ஷேத்திர ஆரூடம்

இந்தத்திக்கில் வீடுகட்டினல் நல்லதாவென்றுகேட்கும்போது அந்தத்திக்கிலிருப்பவர்க்கு எதுவோ அந்தக்கணக்கை வலதுபக்கத்தில்வைத்து கர்த்தனுமாதி அட்சரவர்க்குக்கும் இதுவே அந்தக் கணக்கு இடப்பக்கத்தில்வைத்து அப்பேருக்குக் கொடுத்துமிகுந்தது தனம், முன்வலப்பாகத்தில் வந்திருந்தகணக்கை இடதுபாகத்தில்வைத்து எட்டுப்பேருக்குக் கொடுக்கமிகுந்தது குணம் தனம் அதிகமாகவும் குணம்குறைந்திருந்தால் நல்லது. குணமதிகமாயிருந்து தனங்குறைவாயிருந்தால் நல்லதல்ல. தனமும் குணமும் சரியாயிருந்தால் ஆதாயமும், விரையமுஞ் சமமாயிருக்கும்.

## குழிகெல்லி ஜலம்விடும் சோதனை,

வீடுகட்டும்படியான இடத்தில் ஈசான்யபாகத்தில் நாற்சதுரமாகக்கெல்லி அக்குழியில் சு-சுமங்கலிகளால் ஜலங்கொண்டுவந்து விடும்போது, அந்தஜலம் வலமாக ஓடுமானல், பொருளும் செல்வ

மும் சேரும், இடமாக ஓடிமானால், மனக்கிலேசம் மரணம். குழி
ஙிளம்பினாலும், ஜலம்உள்ளேபோனாலும் மனக்கிலேசமும், மனச்சஞ்
தேகமும் உண்டாம்.

## மனைமுகூர்த்தகாலத்தில் குழியில் நீர்விட வேண்டியவிதி.

மனை ஆரம்பக்குழியில் மூன்றுசுமங்கிலிகள் கலந்து ஒர்பாத்தி
ரத்தில் ஜலம்கொண்டுபோய்ச் சொரிந்துவிட்டு, உடனே அக்குழி
யைவிட்டுநீங்கி, திரும்பிப்பாராமல் வந்துவிடவேண்டுமென்பதாம்.

## மேற்படிகுழியில் புட்பம்விடும்சோதனை

மனை ஆரம்பகாலத்தில் அகழ்த்துகின்ற சதுரக்குழியில் ஜலம்
பெய்து அஜ்ஜலம் சுழலுகிறபோது புட்பமொன்றை அதில் இடவ
தென்றும், அது துசூரியனைவலமாகச் சுற்றிவந்தால் நன்மையென்
றும், இடமாகவந்தால் தீமையென்றும், தெரிந்துகொள்ளச்சகுனம்
பார்க்கவேண்டுமென்று சிலர்சொல்லுகிறதுண்டு. அதுவிதியல்ல எ
னெனின், ஒருவர்தாம் உத்தேசித்தகாலி நிவேசனமானது சகலநல
ங்களையும் பொருந்தியிருப்பதை அறிந்தே மனப்பிரஸ்தத்துடன். அ
வ்வீடுகட்டுவதற்கு வேண்டிய சகலசாமான்களையும் சித்தப்படுத்திய
போது திரும்பவும் மற்றும் ஓர்சகுனம் பார்க்கவேண்டு மென்பது
அடாதகாரியம். அன்றியும் எடுத்தவேலையை நிர்விக்கினமாய்க்கூட்
டிமுடிக்கும்பொருட்டு முதலில்விக்கினேஸ்வரரை உபாசித்து அப்
பால்மனையின் அதிதேவதையாகிய பூமிதேவியையும் உபாசித்துநட
த்துகின்றவர்களுக்கு குறையொன்றும் வராதென்கிறநிச்சயத்துட
ன்மேற்கூறிய இரண்டுதெய்வங்களையுந் தொழுது வேலையைத்துவ
க்கவேண்டு மென்பதாம்.

## வலமதிவட்டமான ஓர்பள்ளஞ்செய்து அதிற்பூவும் தண்ணீரும் விட்டு குறிபார்க்கும் விபரம்

இந்திரன் திக்கில் பரிமளம்பொருந்திய மலரானதுநிற்குமாகில்
அதிகசவுந்திரியம் பொருந்திய லட்சுமிவிலாசமும் தனதானியசம்ப
த்தும் சந்தானபாக்கியமும் தீர்க்காயுசு முண்டாவதோடு பாற்பசு
முதலிய கறவைகளுஞ் சேரும்,

அக்கினிதிக்கில் வாசம்வீசுகின்ற புட்பமான்து வந்துநிற்குமா
கில் கற்புநிலைமை பொருந்திய பெண்சாதியானவள் மலடியாவாள்
இதன்றிவிஷத்தாலும், பாம்பினாலும், பயமும்அச்சமும்உண்டாகும்
அக்கினிசுவாலையினாலும், கள்ளர்கள்பயத்தினாலும், பொருள்விருத்தி
யில்லாமல் எஜமான்நாசமாவான்.

இயமன் மூலையென்னுந் தென்திக்கில் வாசம்வீசும் மலரானது வந்து நிற்குமாகில், மனதில் சிந்தையும், வியாகூலமும் உண்டாவதோடு பலபேரால் கலகமும், தீங்காகிய காரியமும், தீமை, பிணி, அச்சம், முதலியவைகளும் அதிகரித்துண்டாகும்.

கன்னிமூலையில் அம்மலரானது வந்து நிற்குமாகில். பொருளும், அன்னமும், கனகமும். இலட்சுமிப்பிரகாசமும், நவதானியலாபமும், பிறவிச்செல்வமும், என்றுளும் நீங்காமல் வற்றாச்சமுத்திரமாய் மென்மேலும் பெருகவுண்டாகும்.

வருணன் மூலையில் அழகும் வாசமும் பொருந்திய பூவானது வந்துநிற்குமாகில், நிறைசெல்வம் மாறாமலிருப்பதுமல்லாமல் நினைத்தகாரியமும் ஆரம்பித்த தொழில்களும் கைகூடி ஜெயமாகும்.

வாயுமூலையில் விகசிதம்பொருந்திய மலர்வந்து நிற்குமாகில் பதினெண் காசமென்னும் க்ஷயரோகத்தில் மரணமும், சோரர்களினால் தனமுதலிய பொருட்சேத முண்டாவதோடு அம்மனையானது அலகைவாழுஞ் சுடுகாடாகும், அன்றியும், சகல்பாக்கியமும் அழிந்துபோகும். சஞ்சாதரர் மனைவாழ்வோர்களி லிருவரேனும் சிதைப்பிரமை யாவர்.

குபேரன திக்கில் விநோதம்பொருந்திய மலரானது வந்துநிற்குமாகில், தனதான்ய சம்பத்தும், புத்திரசந்தானமும், ஆயுள்விருத்தியும், பாக்கியமும், அதர்மசிந்தைநீங்கி, தர்மசிந்தையோங்கி, அபயமென்றவரைக்காத்துப் பொருளுதவி செய்துவரப்பட்ட மகாபுண்ணியவானாகவும் இருப்பான்.

ஈசான்யமூலையாகிய பரமசிவத்தின் திக்கில் பரிமளம்பொருந்திய மலரானது வந்துநிற்குமாகில் கனக ஐஸ்வரியமும் தீர்க்காயுளும், புத்திரசம்பத்தும், வாழ்வும், மென்மேலும் விர்த்தியாய்ப்பெருகி நீடூழிகாலம் நிலைநிற்கும். இதன்றி பெரியோர்களுக்கும் தபோதனர்களுக்கும் அன்னபானாதி கொடுக்கவல்லவனாயிருப்பான்.

## நிலைவைக்க.

மனை அகலத்தை, கூ-பாகம்செய்து சந்திரபாகத்திலாவது, புதபாகத்திலாவது நிலைவைக்கவும்.

சூரியவாஸ்துவீதிக்கு கிழக்கு முதலாகவும், சந்திரவாஸ்துவீதிக்கு தெற்கு முதலாகவும் கொள்க.

தேவாலயம், ராஜக்கிரகம், சத்திரம் இவைகளுக்கு மத்தியில் வைக்கவும். மனையின் கீழ் மேல்தெற்கு-வடக்கு, முழத்தினால் அளந்துமாறி கண்ட தொகைக்கு குழியென்றும், ஆயமென்றும், பகணமென்றும் பெயர், மனையின் சுற்றளவை முழமாகவும்வைத்து அங்குலத்தாலேனும், விதஸ்தியாலேனும், முழத்தாலேனும் அளந்து கண்டதொகையை ஆயமாகவும் கொள்ளலாம். இதற்கு பரிநாமமென்றுபெயர்.

## சுவர்களி னுயர்வு நாட்சி லட்சணம்.

ஒருமுழம் அகலப் பிரமாணத்திற்கு இரண்டுமுழப்பிரமாணம் சுவர் வைக்கவேண்டும், ௧0-சாணுயரமுள்ள சுவர் அரசர்களுக்கும், பிராமணர்களுக்குமாம். ௯-சாணுயரமுள்ளசுவர் வைசியருக்கும், சூத்திரர்களுக்குமாம். அ-சாணுயரமுள்ள சுவர் சங்கரசாதியாருக்காகும் இந்த கணக்கிற்கு க்குறைவாயிருக்கலாகாது. இதையறிந்து செய்யவேண்டியது. சுவர்வைக்கும்போது விழுந்தால் சோரபயம். வெளிப்பக்கமாய்ச் சுவர்விழுந்தால் கலகம். உட்புறம் விழுந்தால், விட்டுக்குடையவனுக்காகாது.

## சந்துகுந்நலறிய

சந்துகுத்தல், கோடிகுத்தல், குளக்குத்தல், கேணிக்குத்தல், கட்டைக்குத்தல் ஆகாது.

## வாசற்படி வைக்கும் லட்சணம்

ஒருவீட்டின் நாலுபக்கத்திலும் வாசற்படிவைத்திருந்தால் விகமபிதோமுகமென்று சொல்லப்படும். அதன்பலன் விர்த்திப்பிரதம் கீழண்டைவாசல்படியில்லாமல் மூன்றுபக்கத்திலுமிருந்தால்வியாக்கிரபாதமென்னப்படும். இதன்பலன் பசுவுகளுக்கும், மிருகங்களுக்கும் பாதையாய் திருடர் பயமாகும். தெற்குமுகம் வாசற்படியில்லாமல் மற்ற மூன்று பக்கத்திலுமிருந்தால் பாக்கியப் பிரதம், மேற்குமுகமாகவாசற்படியில்லாமல்மற்ற மூன்றுபக்கத்திலிருந்தால ஸ்ரீநிலயமென்று சொல்லப்படும். உத்தமபலன்நன்முகவாழ்வார்கள் வடக்குமுகமாய் வாசற்படியில்லாமல் மற்ற மூன்றுனால் கமலாகரம் சுபம்.

## மனைமுகூர்த்தஞ்செய்யுமிடத்து சூன்யம்.

தலையோடு, எலும்பு, யானையோடு, கூபம், மயிர், மரம், சுக்கிரன், கருங்கல், சாம்பல் இவைகள், இருக்கிலாகாது. இதுகள்

இருந்தால் கர்த்தா நாசமடைவர். அல்லது இரும்பு, ஈயம். பித்தளை காணில் மத்திமபலன் உண்டாம், அல்லது பொன், தேரை, செங்கல், சங்கு, பால்வார்க்குஞ்சங்கு, வெள்ளி, இரத்தினங்கள், இவை முதலிய வருக்கஙகளைக்காணில், அந்தக்கிரகக் கர்த்தாவுக்கும், அக்கிரகத்தில் வசிக்கும் யாவருக்கும் க்ஷேமகரமுண்டாகும்.

## கம்பம்.

கம்பங்கள் அடி அடியினும், நுனி மேலும் இருக்கவும். உத்திரம் விட்டங்களுக்கு அடியை மேற்கு-தெற்கிலும், நுனியைகிழக்கு வடக்கிலும் வைக்க நன்மை, மாறிவைக்கில் தீமையுண்டாம்.

## ஒருமனையை அறுபத்துநான்கு பாகஞ்செய்து வீடுகட்டுவதற்கு லட்சணம்.

மனையைநான்குபாகமாக அளந்துக்கொண்டு அந்த அறுபத்து நான்குபங்கில் மத்தியில்நான்குபங்குபிரமத்தானம், நான்குதிக்கும் உருத்திரபாகம்.

திக்குகள்நான்கு விஷ்ணுபாகமும், மற்றதெல்லாந்தேவர்களது பாகமென்றும் பெயராம்.

அண்டத்துக்கொத்தபடி பிண்டம், பிண்டத்துக் கொத்தபடி வீடு, காசரணுதிகளோடுங்கூடி விளங்கியகிரகம்.

இந்தப்பிரகாரமாய் வீடுகட்டினல் அதற்குவயதுநிதானம் நூறு கன்றுகாலின் கறவைப்பசுக்கள் இவைகள் நாளுக்குநாள் விர்த்தியாவதுமன்றி, தாமரைக்கமலத்தில் வீற்றிராநின்ற இலட்சுமியானவள் சேர்ந்து ஆனந்தத்தாண்டவம் புரிந்துக்கொண்டிருப்பாள்.

சந்திரனுதிக்க, ஸ்தம்பமுதலியவைநாட்டி புதனுதிக்க, காப்பு பூட்ட வெள்ளியுதிக்க. தளம் அல்லது, ஓடு இசைத்து வியாழம் உதிக்க, கிரகப்பிரவேசம்செய்தால் தேவர்போல வாழ்வார்கள்.

மனைக்கு எந்தவாரமோ அந்தவாரமுதல் ஆதிவாரம்வரைக்கும் எண்ண எத்தனை வந்ததோ, அந்த தொகையை ௬-ல் பெருக்கி வந்ததொகை எத்தனையோ அத்தனை கணக்குக்கு அசுவனிமுதலாகத்தள்ளி நின்றநாள் ௬-வரைக்கும் ஒருகண், அதற்குமேல், ௧௨-இரண்டுகண், அதற்குமேல், ௬-நாள் குருடு இப்படி மனைநட்சத்திரத்திற்குள் பார்த்து மனைகண்களை அறியவும்.

## வயது பலனறிவது.

உரு-வயதுக்குட்பட்டால்-அதமபலன், நன்மையில்லை. உரு-க்குமேல் ருo-வயதுவரையில்-மத்திமபலன் சமமாகநடக்கும். ருo-வயதுக்குமேல்சகலசவுக்கியமும், சம்பத்தும், பூரணயுசும்உண்டாம்

## மனைக்குப் பால்யாதிபருவமறிவது

மனைக்குவந்த அங்கிசத்தொகையை எ-ல் பெருக்கி, ரு-ல் கழித்து வந்தது, க-க்கு பாலன், உ-க்கு யவ்வனம். ங-க்கு கௌமாரம். ச-க்கு மூப்பு. ரு-க்கு மரணமென்பது.

## வீட்டுக்குப்பருவப்பார்க்கும் விதி.

மனையின் துருவபதமாகிய ஆயமொத்தத்தை எட்டிற்பெருக்கி ஐந்திற்கழிக்க, மிகுசேடம் மனையின்பருவ மென்னப்படும். அச்சேடங்களுள், ஒன்றுக்குப்பாலன்-நன்மை. இரண்டுக்கு வாலிபன் நன்மை. மூன்றுக்கு அரசன்-நன்மை. நான்குக்குக் கிழவன் தீமை ஐந்துக்கு அந்தியம்-மிகத்தீமை. இவ்விதமாய்க் கண்டுகொள்ளவேண்டுமென்பதாம்.

## மனையெடுத்தல் சுக்கிரன் இடம்

கிரகப்பிரவேசகாலங்களில் சுக்கிரன் எதிர்வலம் இருக்கில் தீமை. இடப்புரம் இருக்கில்-நன்மை, 'மூளமாகில்-கிரகாரம்பம் டு பிரவேசம்-நிலைவைத்தல், இவைகள் முன்னும்வலமும்-நன்மை பின்னும் இடமும் தீமை மனைபோட வடக்குங்கிழக்கும் நன்றாம் தெற்கும் மேற்கும் தீதாம்;

## வீடுகட்டநிச்சயிக்கும்போது நட்சத்திரங்கள் நிற்கும் நிலை.

வீடு அஸ்திவாரமுகூர்த்தம் ஸ்தம்பப்பிரதிஷ்டையும் சூரியன் கார்த்திகை-பரணி. ச-ம் பாதம், ரோகணி முதற்பாதம் இருக்கினும், டு சந்திரன்கார்த்திகையிருக்கினும், செவ்வாய்-கார்த்திகை மகரம்-ரேவதி-உத்திராடம்-அஸ்தம்-மூலம்-பூசம்இந்தஏழுநாளிலும் இருந்தால்கிரகபதியாகியஎசமானுக்கு அத்தியந்ததுக்கமுண்டாகும்

எஜமான் கை சாணல் நாலுசாண் கோல்கொண்டு கிழக்குமேற்கு வடக்கு தெற்கு இந்நான்குதிக்கையுமளந்து இருதுகையுங் குழி

மாறியத்தொகையை ஆயமாகவைத்துக்கொண்டு. திசைப்பொருத்தம் பார்க்கவேண்டியது.

வீட்டெஜமானுடைய காலடியாற் கணக்கிட்டு அதையே முதன்மையாக வைத்துக்கொண்டு ஷெ. மனையில் எவ்வளவு விஸ்தாரமுள்ள கட்டிடங்கட்டவேண்டுமோ அந்தமனைகட்டிடத்துக்குட்பட்ட அகலங்களை அளவை கிழக்கு-மேற்கு-தெற்கு-வடக்கு இவ்வளவென்று அளவிட்டு ஒன்றுக்கொன்றுமாறிய குழித்தொகையை துருவபதமாக வைத்துக்கொண்டு

முதலாவது,—அம்மனைக்குவந்தகுழியை துருவமாக்கி எட்டிற்கழித்து தெற்பகர ஆயகம் காணவும் ஷெ தொகையை,

இரண்டாவது,—எட்டில் பெருக்கி பனிரெண்டில் கழித்து மிகுந்தசேடம் ஆதாயம்.

மூன்றாவது,—ஒன்பதில் பெருக்கி பத்தில் கழித்து மிகுந்த சேடம் விரையம்.

நான்காவது,—மூன்றில் பெருக்கி எட்டில் கழித்து மிகுந்த சேடம். 0 யோனி.

ஐந்தாவது,—எட்டில் பெருக்கி இருபத்தேழில் கழித்து மிகுந்த சேடம் நட்சத்திரம்.

ஆறாவது,—நாலில் பெருக்கி முப்பதில் கழித்து மிகுந்த சேடம் திதி.

ஏழாவது,—ஒன்பதில்பெருக்கி ஏழில் கழித்து மிகுந்தசேடம் வாரம்.

எட்டாவது,—நாலில் பெருக்கி பனிரெண்டில் கழித்து மிகுந்த சேடம் ராசி

ஒன்பதாவது,—ஒன்பதில பெருக்கி நாலில் கழித்து மிகுந்த சேடம் அம்சம்.

பத்தாவது,—நாலில் பெருக்கி ஒன்பதில் கழித்து மிகுந்த சேடம் ‡ அமிசம்.

பதினோராவது,—இருபத்தேழில் பெருக்கி நூறில்கழித்து மிகுந்த சேடம் வயது.

ஆக பொருத்தம் கக-க்கு,

0 யோனி-கருடன்-பூனை-சிங்கம் - நாய்-பாம்பு-எலி-ஆனை-முயல் இதில் ஆனை-சிங்கம்—உத்தமம்.

‡ அமிசம்-சோரம்-சக்தி - தானியம்-ராச்சியமக்லீபம்-விருத்தம்-ரோகம்-சுபம். இப்படிக்கிரமமாகப்பார்க்கவும். இதில் உ-ரு-அ கூ-உத்தமம். மற்றவையாகாது.

ஆயகமீராமற்போனல் அ—வைத்துக்கொள்ளவும்.
ஆதாயமீராமற்போனல் கஉ—வைத்துக்கொள்ளவும்.
விரையமீராமற்போனல் க0—வைத்துக்கொள்ளவும்.
யோனிமீராமற்போனல் அ—வைத்துக்கொள்ளவும்.
நாள்மீராமற்போனல் உஎ—வைத்துக்கொள்ளவும்.
திதிமீராமற்போனல் ௩0—வைத்துக்கொள்ளவும்.
வாரமீராமற்போனல் எ—வைத்துக்கொள்ளவும்.
இராசிமீராமற்போனல் கஉ—வைத்துக்கொள்ளவும்.
வமிசமீராமற்போனல் ச—வைத்துக்கொள்ளவும்
அங்கிசமீராமற்போனல் கூ—வைத்துக்கொள்ளவும்.
வயதுமீராமற்போனல் க0ப—வைத்துக்கொள்ளவும்.

ஆதாயம் அதிகப்பட்டு, விரையம் குறைவாயிருந்தால் வீட்டுக்குடையவன் தனவானவான்,

ஆதாயங் குறைவாயிருந்து விரையமதிகமாயிருந்தால் தரித்திரனவான்

ஆதாயமும் விரையமும் சரியாயிருக்கில் சமனயிருக்கும்,

முதல்பதமென்கிற துருவ ஆயகத்தை அ-ல் கொடுக்க மிகுந்த தொகையை வைத்துக்கொண்டு.

க-வந்தால் துவசாயம்—இந்திரன்—காரியசித்தி
உ-வந்தால் தூமாயம்—அக்கினி—மரணம்.
௩-வந்தால் சிம்மாயம்—யமன்—ஜெயம்.
ச-வந்தால் சிவனயம்—நிருதி—ரோகம்,
ரு-வந்தால் ரிஷபாயம்—வருணன்—ராச்சியம்,
சா-வந்தால் சானயம்—வாயுவு—துக்கம்,
எ-வந்தால் கெசாயம்—குபேரன்—சுபம்,
அ-வந்தால் காகாயம்—ஈசானியம்—நிஷ்பலம்,

துவசாயத்துக்கு வடக்கே கட்டலாம்,
சிம்மாயத்துக்கும் கெஜாயத்துக்கும் மேற்கே கட்டலாம்,
ரிஷபாயம் மேற்கேயல்லாமல் மற்ற விடங்களில் கட்டக்கூடாது,

துவசாயம் அக்கினிமூலையிற்றவிர, மற்றஎந்ததிக்கிலும்கட்டக்கூடாது,

மற்ற எந்த திக்கிலே கட்டியிருக்கிறதோ அந்தப்பிரகாரமேயிருக்கலாம், மற்றொரு விடங்களிலுங் கட்டக்கூடாது,

துவசாயம்-ரிஷபாயம்-சிம்மாயம்-பிராமணுளுக்கும், க்ஷத்திரியாளுக்குமாகும்,

கெஜாயம்-ரிஷபாயம் வைசியர்களுக்கும், சூத்திரர்களுக்குமாகும், துவசாயம் நல்லபுண்ணியவாளுவான்,

தூமாயம்—மிருத்துபிரதம்.
சிம்மாயம்—விஷப்பிரதம்
சிவநாயம்—ரோகப்பிரதம்
ரிஷபாயம்—இராட்சதப்பிரதம்.
கெசாயத்துக்கு—சுபப்பிரதம்.
காகாயத்துக்கு—விஷபயம்.

காகாயத்துக்கும் பீடையாம். இந்த ஆயங்களில்துணந்தெரிந்தவர்க்கு ஆயங்கள் நிர்ணயம்பண்ணும்போது ஒரு அங்குலமதிகமானுல் பூரணுயுள் பலன் அறியவும். ஸமமாயிருந்தால் சமபலனுயிருக்கும் அங்குலம் குறைவாயிருந்தால் குணஸ்தனென்றறியவும் இந்த ஆயங்களில் குணங்கள் தெரிந்துகொள்வதாம்.

## மரமறிய.

அம்பலத்தில் நின்றமரம், தீயில்வெந்தமரம், பட்சிகள் வாழ்ந்தமரம், புள்ளிருந்தமரம், கொடிசுற்றியமரம், குளக்கரையில் நின்றமரம், யானைமுரித்தமரம், காற்றிஞல் முறிந்தமரம், பறச்சேரி சுடுகாடு பாழ்வீடு பூவற்றில்நின்றமராம், பேய் பூதம் குடியிருந்தமரம. வில்வமரம் - விளா-புளி-வேங்கை-புங்கு-மாவிலிங்கை-அத்தி - புன்னை-நொச்சி இவைகளும், முள்ளமரங்களும் தீதாம்.

## மரங்களைவெட்ட திதி நிர்ணயம்

பஞ்சமிமுதல் ஐந்துநாளில் வெட்டிஞல் பூச்சிபிடியாது இவ்வைந்துநாளையில் ரோகணிநட்சத்திரத்திலாஞல் மிகவுமுத்தமம் வேலமரம்வெட்டிஞலும், பூச்சிபிடியாது, இதற்குஆகாநாள் கிர்த்திகை நட்சத்திரத்தில் சூரியனிருக்க, திருவோணம்-அவிட்டம் மூன்றும் பாதத்திலும் நாலாம்பாதத்திலும், சதயம்-பூரட்டாதி மூன்றும்பாதத்திலும் சுக்கிரநிற்க, மரம்வெட்டலாகாது.

முன்புவெட்டின மரங்களாஞலும், இந்தநட்சத்திரத்திலும் இவர்களிருக்கும்போதும் வீட்டுக்குக்கொண்டுவரக்கூடாதுபின்புதிருவோணம்-அவிட்டம்-சதயம்-பூரட்டாதி-உத்திரட்டாதி-மகம்-பூரம்

உத்திரம்-அஸ்தம்-சித்திரை-சுவாதி-இந்த-கக-நட்சத்திரத்திலும் சந்திரனிருக்க மரம்வெட்டலாகாது, வெட்டின மரங்களானாலும் வீட்டுக்குக் கொண்டுவரக்கூடாது.

## மரங்கள் வெட்டும்விதி

வாரம்-யோகம்-கரணம் இவைகளையறிந்து கர்த்தனுக்கும் சந்திரதாரபலன் பார்த்துக்கொண்டு தச்சனுக்கு கெந்தம்-தாம்பூலம்-புட்பம் தட்சணைகொடுத்து காட்டுக்கனுப்பி மரம்வெட்டினால் சுபமுண்டாகும்,

## விடுகட்டுதற்குதவாமரங்கள்

காற்றிலடிபட்டு வீழ்ந்தமரம், ஆலயத்திலிருக்குமரம், மயானத்திலிருந்தமரம் இவ்வகைப்பட்டமரங்களால் வீடுகட்டிடஞ் செய்தால் செல்வங்குறைந்து ஆயுள்ஜீரணித்து வம்மிஷம் நாசமாகும்.

## மரமிசைத்தல்.

மரமிசைக்கும்போது முதுதலைகீழாகவும் இளந்தலை மேலாகவும் ஓரஇசையாகில் முதுதலையுள்ளும் இளந்தலைபுறத்தியுமாக இசைப்பதுநன்று இதற்குப் பிசகுவருமாகில் பிணியுங்கேடுங் கடனுமுண்டாம். இளந்தலைகீழும் முதுதலைமேலுமாக இசைப்பாராகில் நோயுண்டாகும்.

முதுதலை இரண்டுந்தென்மேல் மூலையில் பொருந்த வைத்து தென்றிசை முதுதலைமேலாகவும் இளந்தலையிரண்டும் வடதிசை மூலையிற் பொருந்தவைத்து வடதலைகீழாகவும் பிணைக்கவுத்தமம்

இளந்தலையிரண்டும் வடகீழ்மூலையொழிய வேரிடத்திலிசைக்கலாகாது முதுதலையிரண்டும் தென்மேல்மூலையிலே யொழிய மற்றவிடங்களிலிசைக்கலாகாது இசைக்கில்வருமையும்நோயுமுண்டாம்

பறப்பினிற்பாதியைப் பனிரண்டுகூறுசெய்து இதிலேந்துகூறு ஏற்றமஞ்சு ஆறுமஞ்சாகை ஏழுநடுவாங்கை எட்டுமரமிசைக்க கோடாகை ஒன்பது கோடியென்பதாம்.

திங்களில் காலேநாட்டி, புதனிற்கையைவைத்து வெள்ளியில் மேய்ந்து வியாழத்திற்குடிபுகுந்தால் தேவேந்திரன்போலே அஷ்டஐசுவரியமும்பெற்று நீடூழிகாலஞ்செல்வம் நீங்காமல் கீர்த்தியுள்ளவனுக வாழ்வான்.

## ஆண்மரம்

மரமானது தூண்போலத்திரண்டு நீண்டு ஒழுங்காக விருக்குமாகில் ஆண்மரமென்று சொல்லப்படும்.

## பெண்மரம்,

மரமானது அடிபெருத்து நுனியானதுசிறுத்திருந்தால் அதை பெண்மரமென்று சொல்லப்படும்.

## அலிமரம்

மரமானது சிறுத்துநீண்டு நெடுமையாகித் தலைபெருத்திருந்தால் அதை அலிமரமென்று சொல்லப்படும்.

ஆண்மரமாகில் கால்களுக்கும் தூணுக்குமாகும் பெண்மரமாகில் வலை உத்திரம் போதிரைக்குமாகும் அலிமரமாகில் விட்டம் சட்டத்திற்குமாகும் கைகளுக்கு உத்தமமரங்கள் நன்று.

மாமரம் தேவர்களுக்காகும் வேம்பு பிராமணர்களுக்காகும் தேக்கு அரசர்களுக்காகும் இலுப்பை செட்டிகளுக்காகும். வேங்கை வேளாளருக்காகும்.

## பதவி

காலிநிலத்தில் தேவாலயமுதலிய கிருகங்களெடுக்க வேண்டிய போதுவாஸ்து, பதம்-சு-௯-போட்டு பதவின்யாசம்செய்துவாஸ்து ஹோமம், வாஸ்துபூசை, வாஸ்துபலி, வாஸ்துசாந்தியும்விதிப்படிசெய்துமுகூர்த்தம் செய்யவும்.

## வீடுகட்ட மண்

வெள்ளைமண்—பிராமணர்களுக்கு பலமணமுள்ளது.
சிவந்தமண்—அரசர்களுக்கு பூமணமுள்ளது
பசுமண்—அல்லது, களிப்புமண்—வைசியருக்கு வேர்மணமுள்ளது
கருமண்—சூத்திரருக்கு நீர்மணமுள்ளது.

## தோஷநிவர்த்தி குத்தல்கள்

கோவில் பாய்ச்சல், வீட்டுபாய்ச்சல், சந்துபாய்ச்சல், வயல் பாய்ச்சல், கோடிக்குத்தல, குளக்குத்தல்,ஆற்றுக்குத்தல், கிணற்றுக்குத்தல் சந்துகுத்தல் இவைமுதலிய தோஷங்கள்நூறு அடிக்குமேலாயின் யாதொரு தோஷமுமில்லை.

## முகூர்த்தஞ்செயயுமிடம்.

மனைமுகூர்த்தஞ்செய்ய வாஸ்துபுருஷன் காலிற்கெல்லில் ஸ்ரீமரணம். முதுகிற்கெல்லில், பொருள்சேதம், தலையிற்கெல்லில்தாய் தந்தைமரணம், வயிற்றிற்கெல்லில் பொருள்சேரும்.

## தோஷம்

மனைநடுவில வாசல்விடுதல், ஷை தான்யகர்ப்பம், ஷை உத்திரம் வைத்தல், கிணறுஎடுத்தல், அடுப்புஇயற்றில்கூடாது. ஒற்றைக்கம்பம் ஒற்றையுத்திரம், தோணிமத்தியிலுத்திரம், நிலைவாசல்வாரைக்குத்தல், வாசற்படிக்குநேர், வாரைச்சலம்விழுதல், சாலகம்விடுதல் மண்படைவைத்தசுவர், இரட்டைப்படை ஆகாதுகை ஒற்றைப்படலாகாது.

## முத்தம் நடுவில் கப்பம் உத்திரம் சுவர் வரலாகாது.

மனைசெய்யவேண்டுமென்று சிற்பாசாரியை அழைக்கவந்தவர்கள் நின்று ஒருகாலைத்தூக்கிநிற்றல், காலினால் காலைச்சொரிதல்தலையைச்சொரிதல், முழங்காலைக்கட்டிக்கொண்டிருத்தல் கன்னத்தில் கையைவைத்திருத்தல், முகஞ்சோர்ந்திருத்தல், துக்கவார்த்தைப் பேசுதல், அகாலத்திலழைத்தல், அவனழைக்கும்போதுசிற்பாசாரி எண்ணெய்யிட்டுக் கொண்டிருத்தல் இவையாகில் அந்தமனை நிறைவேறமாட்டாது திரவியநஷ்டமாம்,

## குளிகைகாலம் பார்க்கவேண்டிய விபரமாவது

எந்தவாரத்தில் குளிகைகாலம் பார்க்வேண்டுமோ அந்தவாரமுதல் சுக்கிரவாரம்வரையில் எண்ணினமதாகையை ௩௪-னல் மாறிக்கண்டநாழிகையை இத்தனையென்றுணர்ந்து அந்தநாழிகைக்கு மேல் ௩௪-நாழிகை குளிகைகாலமாம். அக்காலத்தில் மனைமுகூர்த்தஞ்செய்ய ஊரேற்ற, கால்காட்ட, வாகனரோகஞ்செய்ய தானியக்களஞ்சியங்கட்ட இதுமுதலாகிய சுபகாரியங்களைச்செய்ய சுபகரமுண்டாம்.

நிலைநீளத்தை எ-கூறுசெய்து ௬-கூறு உள்ளும், நின்ற ஒரு கூறும் ௲- பங்குசெய்து மேல் ௫-ம், கீழ் ௪-ம் உட்கூட்டில்பாதியாகக்

கூறுசெய்து நிறையாகநின்ற கூறில் நிலைமையந்தன்னில் சரியாய் வைக்கில் மிகவும்நன்று,

## பூதபலன்

அகலநிகளமளந்து குழியான துருவபதத்தை ௩-ல் பெருக்கி, ரு-ல் கொடுக்க,

க-மிருந்தால் பூதத்துவம் இதன்பலன் பாக்கியப்பிரதம்.
உ-மிருந்தால் உதகதத்துவம் இதன்பலன் சந்தோஷம்
௩-மிருந்தால் அக்கினிதத்துவம் இதன்பலன் மிருத்துவுபயம்,
ச-மிருந்தால் வாய்வுதத்துவம் இதன்பலன் சுகம்.
ரு-மிருந்தால் ஆகாசதத்துவம் இதன்பலன் தரித்திரம்.

## இராசிசூல நிர்ணயம்

ஷை துருவபதத்தொகையை கூ-ல் பெருக்கி, கஉ-ல் கொடுக்க.

| | |
|---|---|
| க—மிருந்தால் மேஷம். | எ—மிருந்தால் துலாம். |
| உ—மிருந்தால் ரிஷபம். | அ—மிருந்தால் விருச்சிகம் |
| ௩—மிருந்தால் மிதுனம் | கூ—மிருந்தால் தனுசு. |
| ச—மிருந்தால் கடகம். | க0—மிருந்தால் மகரம். |
| ரு—மிருந்தால் சிங்கம் | கக—மிருந்தால் கும்பம் |
| சு—மிருந்தால் கன்னி. | கஉ—மிருந்தால் மீனம். |

இதில்எந்தத்தொகைவருமோ அந்தத்தொகையைநாலுபாதமுள்ள நட்சத்திரத்துக்கு பின்ராசியில் ௩-பாத மெவ்விராசிக்கு வருகின்றனவோ அவ்விராசிபலன் கேடாகும்.

A மேற்கூறிய விதியின்படிக்கும் பொருத்த நிமித்தம் முதலியதும் மனைகளினது நேத்திரம் வாஸ்து இவைகளையெல்லாம்நிச்சயித்தும் அந்தந்தப்பலன்களைத் தெரிந்துக்கொள்ள வேண்டுமென்பது கருத்தாம்.

மனைமுதலிய வீடுகளுக்குண்டாகும் லாபநஷ்ட பலன்களைக் கீழேகூறுவோம்.

மனையானது கிழக்கு முகமா யிருந்தும்.தென்மேற்குச் சற்றுள்ள மனையாகினும் கிரகத்துள் வட்பாகங்களில் நான்குமுதலிய அ வரையுள்ள நிலைமுதலிய சன்னல்துவாரமேனுமிருக்கினும் எதிர்ப்

பாரிசங்களின் நேர்ப்பக்கமின்றி மூலைப்பாரிசங்களில் தாழ்வுடைய வீடேனும் காலிடமேனுமிருந்தால் நூதனமாக வெதிற்பாரிசங்களின்கட்டிடமிடிந்தாலும் எதிரில்நெருக்கிய விடத்துள்தணிந்த வீடேனுங் குருகியலீடாகின் அதன்வாயலுக்கு மிவ்வில்லிடத்தின் வாயலுக்கும் தென்மேற்கு தெற்காவவிடங்களில் மேற்கூறியதணிந்த விடமிருக்கினும் அல்லதுஉயரமானகிரகம் இருக்கினும் அவ்வித வீட்டினதுமூலைக்குத்து இவ்விதகட்டிடத்தின்தலைவாயிற்களுக்கேனும் இவ்விடத்தின் மூலைகட்கேனும் வடமேற்கு தென்கிழக்கான சார்புகளாகவிருக்கினும் அவ்விதமனையையுடையானுக்குச்சொந்தமின்றி சிலநாளிற் குடும்பத்தோர்களும் க்ஷயமடைந்து பலவாறான வருத்தங்கட்குள் ளனுபவமுடையவராகிச் சித்தம்பிரமைமுதலிய கடன்களாற் பொருள்முதலிய பலவற்றையுமிழந்து தவிப்பார்கள். மகப்பேறில்லான் பகைபிணிசேரும். அதற்கு அப்படிக்கொற்றதை நிவிருத்தித்தும் மனையைக்கூட்டியல்லது குறைத்தேனுங்கட்டியும் எதிர்மனைகளின் பார்வைகளைத்தடுத்துள்ள வகைசெய்யிற் செல்வமேன்மையும் மகப்பேறுமுதலியலாபத்துடன் ஆயுளின்விருத்தியையும் அடையக்கடவன்என்றும் மிகவுமேன்மையான பூலாபத்துவம்முதலியவிருத்திகள்சேரும் அரசனுவன் முன்னிருந்த இருணம்முதலிய கடன்துன்பக்குறையும் குடும்பசகோதரர்கட் குண்டாகும் வியாதி சித்தக்குறைவு நோயும் நீங்குமெனக்காண்க.

B மேற்கு முகமான வீடாகியும் பின்பாகங்களில்லனும் தென்பால் வடபாலிப்பக்க வீடலது மனை ஈசானியவாங்கலாகியும்இவ்வுடையானில்லம் அக்கினிவாயு மூலைகள்வாங்கலாகியும்மேலேகூறிய மூன்றுஸ்தானவில்லிடங்கள் உயரமுள்ளகட்டிடமாகினும் அம்மூன்றுபக்கங்களி லொன்றுனபக்கங்களில் உயரமுள்ளதாகவு மற்றவிடங்களான வில்லிடங்கள் தாழ்மையுடனிருக்கினும் எதிருக்கெதிராகவிருக்கில் பகையும்பயமும் அவ்விடத்திற்குகுடியிருப்பினுக்குக் கூடபிடிக்காமலும் முன்சிலகாலம் விருத்திபோலத்தோன்றிப் பின் வரவரக் கைப்பொருளிழந்தும் பந்தனமானதுன்பத்தாலும்திருடர் பயம் புத்திரலாபமின்றி வருந்தியும் கடன்களாற்றன்னுயிர்ச் சேதங்களைக்கூட வனுபவிப்பனென்றும் பலவிததுன்பமும் பகைகளையுமனுபவிப்பன் சொற்பகாலம் யோகவந்தனாக வாழ்ந்துவருவனென்றறிகப்பின் சகலபாக்கியமுமிழந்து தவித்தும் பலவிவாதவிரோதங்களையனுபவிப்பனுகையால் மேற்கூறியபடியறிந்து நடக்கிற் சித்தியானயோகம் லாபம் பெறுவனெனக்காண்க.

C. வடக்குமுகமான கிரகமாகியும் அதன் எதிர்ப்பக்கங்களில் தாழ்வுள்ள விடமாகியும் அல்லது குடியிருப்பல்லாத மற்றய எருது துதமொழு வாகனப்பிறைசாவடி இவைகளாகியும், கிழக்கு ஈசான் யவாயு இவ்விததிக்குகளில்வாழ் கிரகமின்றியும், அப்படி வாழ்கிரக மாகின் அவைகளின்தெரு நிலைபிரதான மனைக்கட்டிடத்தின் கீழ் சுவரான வீசானியமூலையை நோககியதாகவிருக்கினும், வாயுமூலை யின்சாயல் எதிர்ப்பாகத்தின் குடியிருப்பல்லாத மேற்கூறியதொழு முதலியவிடங்களின் வாயற்கள் நிருதிக்கெதிரானலும் அம்மனைவா ழ்வோருக்கு ஆயுளற்பமும், அனேகரிருக்கினும் பிணியேனும் தரித் திரமேனும் மனுபவிப்பார்கள். குடும்பவிருத்தி குன்றிவரும். பொ ருட்பூமி முதலியவற்றை யடைந்தவரசனுகினும் அவன்வாழ்வு குன் றிவரும். தனதானிய நஸ்டமும, கடன்முதலிய பாதைகளாற்றீங்கு நேரும். குடும்பத்தார்கட்கு பாலியஎவ்வன கவுமாரவயதிலேயேமரி ப்பர். அப்படிமரிக்காராயின். மரித்தலைபொற்ற புத்தியீனராய்வியா தியுடையராயும். குடும்பதுக்க சோகாதி நஷ்டத்துடனும்வாழ்ந்து வருவார்களெனக் காணவேண்டியது. A. B. C. இவைகளிலவை யவைகட்குங் கூறியிருக்குங் குற்றவிடங்கள் நீங்கலாக மற்றவிடங் ளில் மேற்கூறிய குறிகளிருககில் மிகவுமேன்மையும், வரவரவதிக ஐஸ்வரிய விருத்தியுடன் புகழாய்வாழ்வார்கள் எனக்காணல்வேண் டும்.

D. தெற்குமுகமான வில்லிடத்தின் எதிர்ப்பாரிசத்திலும், உய ரமுள்ளகட்டிடமாகியும், அக்கினிதிக்கு நிருதி இவ்விடத்திலிருக்கு மனைகளின்மூலைகள் இவ்வீட்டினது வாயலுக்குச்சார்பாகியம் வீட் டுக்களின்மூலைகள் இவ்விடத்தினது மூலையைச்செங்குத்தலான நே குடையதாகவும், வடமேற்கு தென்கிழக்கு வாங்கலான கோணமு டைய வில்லேயானலும், மனையேயானலும் அவ்விடத்திற் குடியிரு ப்பரான ஆண்கட்கு ஆயுளுண்டென்றும், பெண்முதலிய அயல்கிர கத்தினின்றுவருபவர்கள் இவ்வகையோர்களுக்கு ஆயுட்குறைவு களும், பகைமுதலியபலவிரோதத்தையும் சிலநாள் பொருள்முதலிய கட்டிடசெல்வங்களுடன் மேன்மையான விருத்திகளையும், பிரபல வெற்றிகளையு மடையக்கடவன் யென்றும், சிலகாலஞ் சென்றபின் அவ்விடத்திலடங்கா மனுஷியர்களிருக்கினும். பின் இடங்காக்க மனுஷியர்களின்றிப் பரதேசம்போய்த்திரிதலும், பலபொருளுக்கு ன்றி மனத்துன்பம கடன்முதலியதாலும் வருந்தி இளைக்கப்படுவர் களென்றுங்காணல்வேண்டும். இவ்விதமிருக்குங் கிரகங்களை துதன

மாகச்சேகரித்தும், பிரபலத்துடனுநில் இடம்பொருளேவலுடன் அதிகமேன்மை பொருந்தி வாழ்வார்கள் என்றும் இவ்விதகுற்றங்களையெல்லா மிருந்தகவனிப்புடன் யோசித்துக் கட்டிடம் முதலிய வில்லிடங்கள் செய்யவேண்டுமென்பது கருத்தாம்.

## வாசஸ்தலத்தின் காலபல

### நிர்த்தாரணங்களாவன.

மனைகளையோ அல்லது கட்டிடங்களையோ எஜமான்னது இரண்டுகைமுழங்கொண்டகோலால் அகலநிகளங்களையளந்து அகலத்திற்கண்டதுகைக்கும், நிகளத்திற்கண்டதுகைக்கு மாகப்பெருக்கி அத்துகையுடன் அம்மனையுடையானது ஜெனனகாலத்திற்சூரியன் எந்நக்ஷத்திரம் எத்தனுவதுபாதமோ அதை அசுபதிமுதல் அவ்வித பாதங்கொண்ட நக்ஷத்திரத்திற்றும் முன்நக்ஷத்திரம் வரையிலெண்ணி நாலிற்பெருக்கியும், அச்சூரியனிருக்கும் நக்ஷத்திரபாதம் எத்தனையோ அதையுஞ்சேர்த்து 0 இந்தவடையாளமிட்ட (அத்துகையுடன் என்று) கூடிய துகையோடுகூடச் சேர்த்துக் கொள்ளவும்.

அப்படிஜெனனகாலந் தெரியாவிடில் பெயர் நாமத்துக்கு எந்த நக்ஷத்திரம் எத்தனுவது பாதமாகிறதோ அதை அசுபதிமுதல் நக்ஷத்திரமொன்றுக்கு நந்நான்குபாதமாக மொத்தபாதங்களைக் கூட்டி அத்துகையை மேலே 0 இவ்வடையாளமிட்ட விடத்திற்கூறியதுகையுடன்சேர்த்து இந்ததுகையை உ-ல் மறுதடவை பெருக்கி கூ-ல் கழித்த சேஷமறிந்து கொள்ளவேண்டியது.

## அவை கிழக்குமுகமான வீடாகியும்

### ஒன்றுமிச்சமாகவரின்.

கீர்த்திபுகழ் இராஜாங்கவதிகாரமும், அனேகபொருள் வரவு தன்தானியச்செல்வங்களும், சுவர்ணம் முதலானவைகள் நூதனலாபம்வரினும் மத்திமநாளிலேயே ரோகபாதையும் விரயமதிகந்தோன்றுங்கிலேசஞ் சிலகாலமும் கிலேசமின்றிச் சிலகாலமுமிருந்துவரும் என்றுங்காண்க, சந்ததிவிருத்தியுங் குடும்பவிருத்தியுங் கியாதியுண்டுன்றது. செல்வம்பெரினும் மத்தியிற்குறைநேருமெனக்காண்க, அப்படிக்குறைகள் வந்தாலும் முழுதுங்கெடாது

## இரண்டாகவரின்,

துக்கமனுபவித்தலும் அம்மனையிற்குடிமுற்றும்வாழுநாளின்றி மத்தியிற்கெடுவது பங்கமுதலிய பலவிதவருத்தம்தோன்றலும், சீத வாதாதி வரிஷ்டத்தையும், பகையுங்கொடுத்துப் பின்யோகபாக விருத்தியுஞ் சுகமும்நேரும். பிரபலசெல்வம் பொருட்பூமிஇவைசே ரும். அவையாவது விவாதவழக்கினாலாதல் மற்றொருவர் குடும்பப் பொருள் விருத்தி வந்துகூடுஞ் சுபசோபனசந்தோஷம் அவ்வீடுண் டானவுடனே நேருமெனக்காணல்வேண்டும்.

## மூன்றாகவரின்

பகைமனஸ்தாபமும் பொருள்நட்டமும் பலவிதவாதைநேரிடும் மனதுக்கும் தேகத்திற்கும் உஷ்ணவிரணாத்தநோயாற் றுன்பமும் சகோதரம்முதலிய பிரபல யோகமுடையார் உடன்கெடுவர். தனக் கேனும் அகாலதேக பாதைபயமும் ஒருவருக்கு இவ்வுடையான் இ ராசத்துவாரம் முதலியவர்களாற் பொருள்நஷ்டமும் மனதுக்குசஞ் சலமாகும்.

## நான்காகவரின்.

பிரபலவிருத்திகளுஞ் சம்பத்துக்களும் மேன்மையான தேவ தாபக்திகளும், விசேஷமான கூட்டமுதலிய சபாதிகாரவிருத்தி க ளுஞ் சுகசௌக்கியங் கொடுக்கினும் சிலநாள்செல்வமுஞ் சிலநாள் விரயமுமாகத்தோன்றும் தேவதாபாதைகளும் நல்லவேத கோஷா திகள் நடந்துவரும் புத்திரவிருத்திகள் மாத்திரங்குன்றும்.

## ஐந்தாகவரின்,

சுபசோபனகல்யாணம் முதலிய சுபங்களுடனே நடக்கும் புத் திரவிருத்தியுஞ் சம்பத்தும் நாளுக்குநாள் பிரபலித்துத் தோன்றும் மோசமான பொருட்கள்வரும். மிகவுமேன்மையான சுகங்களுண் டாகும்இராஜாதிகாரமும் இராஜவசியமும், பேட்டியானகீர்த்தியும் தேவாபக்தி தருமங்கள்வற்றாது நடந்துவரும். இவ்விடங்களில் வி சேஷ அன்னசத்திரந்தருமம் ஆலயவிடங்களாயும் பெரியோர்வாழு ம்பிரபலவிடமா மெனக்காண்க.

## ஆறாகவரின்.

அசனசயனபோக போக்கியம்நடக்கும். நல்லரூபஸ்திரீகள் கே ளிவிலாஸ ஸந்தோஷஸல்லாபமுண்டாகும். மனோதைரியவீரியமுஞ் செல்வமு மதிகரிக்கும். குடும்ப சுபசோபனாதிகளு முண்டாகும்,

ஆகினுஞ் சிலகாலம் வயதுடையஸ்திரீகள் மரிப்பார்கள் முன்சில நாட்செல்வமுஞ் சுகமுமின்றிவாழ்ந்து பின்செல்வங்களும்யோகமு மத்தியநாளிற்சேரின்றிப் பின் முன்புபோலவேசேரும்.

ஏழாகவரின்.

பகைமரண துக்கசோகம் பில்லி சூனியம்முதலியதுஷ்டதேவதைகளின்றுன்பமும் அவ்விடத்தில்வசிக்குங் குடும்பக்ஷயமும் வியாதிமுதலியதுன்பமடைவன்பரதேசத்தார்களாவார்களெனக்காணல் வேண்டும். முதலிற்செல்வவிருத்தி போற்சேரின்றி யுடனே அழிந்து நஷ்டமடைந்து கடன்முதலிய பாதையும் உரியதனம் முதலியவைகளுங்குன்றிவிடும் புத்திரர்முதலிய குடும்பவிருத்தி யில்லாதவன் எனக்காண்க.

எட்டாகவரின்.

மேற்கண்ட பலன்களோடு இராஜாவிரோதமும்விஷஜெந்துக்களின் ஹிம்சைகளும் மனக்கஷ்டநஷ்டமும் கெடுதலானதும் அபாயமானமரணமும் காற்கள் முதலியதிலும் அவயவங்களிலும் இந்திரியஸ்தானங்களிலும் வியாதிமுதலிய பிரபலரோகதுன்பமுமடைந்துவருமென்றும் பலவிதவாதையடைவன். சண்டையும்விவாதமும் நடக்கும் பலவாராய்வருங்கினுஞ் சிலகாலஞ்சென்றபின் லாபந்தனவிருத்திகளையுஞ் செல்வத்தையும் பெறுவனெனக்காணல்வேண்டும்

ஒன்பதாகவரின்.

முன்சிலநாட் பிரபலயோகத்தையும் சத்துருபந்துக்கள்பலபொருள் வலுவிற்சேருதலும், தனக்கேனுங் குடும்பங்கட்கேனும் சுவீகாரம்முதலிய புத்திரர்கள்உண்டாகும். சுயபுத்திரர் உண்டாகின் மரித்தலையடைப்படுமென்றும் விரணநோயாற் றுன்பங்களையும் பின் கடன்முதலிய பலவருத்தங்களையு மனுபவிக்கப் படுவர்களென்றும் பெருங்கவலையான துன்பமடைவர்கள்.

## மேற்கு முகமாகியும்.

ஒன்றுமிச்சமாகவரின்.

வியாதிபீடையும்வரும்படி லோபமும் பகையுங்கூடும். உயிர்சசேதம்முதலிய துக்கசோகஸம்பவமுமுண்டாகும். விவாதசிவனமிவைகளால் மனதுக்குத்திருப்தியின்றிபலவிதவெண்ணங்களும் மனதுக்குச் சந்துஷ்டிகளும் பணச்சிலவும் இவ்விதமான கஷ்டபலன்நடக்கும் சோரம்போற் சொத்து நஷ்டமடைவன்.

இரண்டுமிச்சமாகவரின்,

சிலநாள் சுகமாகவாழ்ந்து பலதன இராஜயோகாதி பத்தியமுடையவராகியும், பலவாகனம் மாடுமுதலிய பலதிரவியச் செல்வத்தையுங் குடும்பவிருத்திகளையும்படைத்துமிகவும்மேன்மையாகதலைமுறை இரண்டாகவாழ்ந்து வரவரவிருத்திக்காத பலநஷ்டங்களும் பலதுன்பமும் குடும்ப புத்திரரோகம் பைத்தியம் சயித்தியம்முதலியபலவிதக் கிலேசமாகவும் நடந்துவரும். சிலவுசாஸ்தியாகும் சிலகாலமிப்படி யனுபவித்தபின் கடைசியாக மற்பசுகலாபந்தோன்றி இராஜயோகபலன்களை யடைவார்களெனக் காணவேண்டியது.

மூன்றாகவரின்.

கட்டிடம் விருத்தியின்றியும் பேய்முதலியவை யனுசரித்தும் கொலையானமரணமடையத்தக்க வில்லென்றும், பலவித கஷ்டநஷ்டசோகமுண்டாகும். புத்திரதோஷமும் கடன்தொந்தரவும் பல கவலையுண்டாகும்.

நான்காகவரின்,

பெண்வம்சமேபெருகும். புத்திரசோகமும்பலவிதகவலைகளும் அனேகவிததுக்கசோகமும் முதலுங்கடையுமுள்ள காலம் விருத்திதோன்றுதழியும் விசேஷசெல்வமும் இராசத்துவயோகமும் பிரபலதேவதாலயப் பிரபலசத்திகளும் இவ்விதமாக நடக்கும்.

ஐந்தாகவரின்,

சொற்பகாலம்வரையில் புத்திராதிகுடும்பக்ஷேமயோகங்களின்றியும் முன்காலிபூமியாகியும் பின் புத்திராதிக்ஷேமத்துடன் சிலநாள் விருத்தியுற்றபின்றன்குடும்ப மேன்மையுடைய சுகத்தையடைந்து வரப்படுவனென்றும், அப்படி இருவர்தலை முறையின் பழையப்பிரகாரமே ஓர்தலைமுறைவரையில் இருந்தனயோகங்களையுமடைந்து இடம்பொருளேவ லெவ்விதசுகங்களையும் பறக்கடித்தும்கடன் முதலிய பலதொந்தரவுகளா லதிகவாதைகளை யடைந்தும் மனக்கவலையுடன் தனதானியக் குறைவுகளைப்படைத்து அப்படி இருவர்தலைமுறைசென்றபின் யோகமடைவர். இஃதுயாரெனில் அம்மனைவாசியானோர் உடனோர்க்குரைத்த பலனெனக்காண்கவும்.

ஆறுக்கும் மேற்கண்ட பலனேயாம்.

ஏழாகவரின்,

திரமில்லாத நூதனக்குடியிருப்பையுடைய விடமென்றும், அவைகளாற் பலவாறான கஷ்டநஷ்டத்தையுந் துக்காதிபாதை குடும்பவிருத்தியின்றி அம்மனைவாழ்பவர் பழையஇராஜயோகம் முதலிய செல்வங்களையுமிழந்து கடனுக்குள்ளாகி யந்தமனையைவிட்டு வருநாளில்ஓர்செல்வனவ்விடத்திற் சனித்து அவனாற் சகலபாக்கியமும் பிரபலயோகங்களையு மதிகரித்தவாழ்வுகளையும் படைப்பனென்றும் விசேஷயோகவானாகவாழ்வன் அம்மனையும் பின்வரவரபெருஞ்செல்வத்தை விளக்கினும் புத்திரலாபங்களை மாத்திரங்குன்றச்செய்யும் எனவறியவேண்டியது.

எட்டாகவரின்.

ஆயுள்செல்வத்தையும் சொற்பகாலந்தரித்திரத்தையுங் கொடுக்கும் பலவிதவியாதியுடையவராகி வாழ்வார்கள. சிலநாட்சென்றபின் ஒருவரேனுந்திரமா யம்மனையை ஆளார்கள் குடும்பக்குறைவுகளையும் பலவிதகஷ்டத்தையும்பொருத்துவார்க ளெனக்காண்கவும

ஒன்பதாகவரின்.

பெருஞ்செல்வமும் கீர்த்திமூர்த்தியான மகிமைகளையும் அநேகவிதமான தனம்கிரகவாகனம்பூமி கன்றுகாலிகளைப்படைக்கினும் ஆயுள்தீர்க்கமில்லாராகியும் பலவிதவியாதிமுதலிய துன்பமுடையதும், இந்திரியநஷ்ட முடையோராகி வாழ்ந்துவருவார்கள்.

அப்படி தலைமுறை மூன்றின்பின் ஆயுள்விருத்தி யடைந்தும் பொருளின்றிவருந்துவார்கள், மகவுதோட முண்டாமென்றறியவும்.

## தெற்குமுகமான கிரகமாகியும்

ஒன்றுமிச்சமுமாகவரின்.

அம்மனையுடையார்வாழ்வோரிவர்கட்குகடனதிகமாகியும் பொருளிழந்துதவித்தலும், பலவிதமானவருத்தமும் எவர்வரினும் சற்றுநாளிற் செல்வமழிந்தும் பலவாறான கஷ்டநஷ்ட துன்ப மடைவர் மரண துக்கக்கிலேசமானவை பீடித்தேவரும். பகையும்கிலேசமுண்டாகி, ஸ்திரமாயும் மனையில் பலவிதவரிஷ்ட பலன்தோன்றும் சிலகாலஞ்சென்றபின் செல்வமோங்கி வளம்பெறுதலும் பலதனயோகமுடைத்தாய் வாழ்வரென்க.

இரண்டாகவரின்,

பெருமையான செல்வவாழ்க்கையானது ஆறுவருஷத்துக்குள் ளுண்டாகும் அதுவும் பிரபலயோகமுண்டாகும். அசனசயன போக சபோக்கியவாழ்வும் மிகமேன்மைநடந்தபின் ஸூழ்ந்துவுயருமென வறிக.

மூன்ருகவரின்,

குடும்பவிருத்தி யதிகந்தோன்றும் எதிரியோர்மரிப்பார்கள்பல செல்வமும் வரவரக்குன்றும் பகையுங்கேடும் அம்மனை யுதித்தவர் கள் கீர்த்திமானுகவிருக்கினுஞ் செல்வமடையாதுழலுவார்கள். பர தேசவாசியாகத்தவிப்பன் சிலநாட்கஷ்டமுஞ் சிலநாட் செல்வமும் பொருந்திவாழ்வன் எனக்காண்க.

நான்காகவரின்,

பொருட்பேறும் மகப்பேறும் மிகவுமேன்மை கல்விமுதலிய வரசாதிபத்தியஞ்சேரும் பொருள்பலவாருக வதிகரிக்கும் அதிகார ங்கைகூடிவாழ்வர் சிலநாட்சென்றபின் பொருட்குன்றும்பகையுண் டாகும் பலவிததுக்கசோகபாதையை அனுபவிப்பார்களென்க

ஐந்தாகவரின்,

சோராக்கினிபாதையந்த இல்லத்தில்நேரும் பலவிதபொருளுங் கைகூடும் நஷ்டமதிகமாகும் மனக்கவலேயும் பொருள்விரயமதிகரிக் கும் கடன்வரும். பின் இவ்விதக்குறைவுகள்யாவும் நீங்கும் வியாதி முதலியதுந்தீரும்.

ஆருகவரின்,

பாக்கியம் மிகுதியுண்டாகும். செல்வப்பெருக்கமும், பலயோ கமும், மிகுந்துபின்னுண்டாகும் ஸ்திரவாழ்வுப்வாசமும் அடையார் கள். பலவிதமுயல்வினுலுந் திரவியவந்தர்களானுலும் சித்தப்பிரமை நேத்திரக்கேடுமுதலிய அவயோகங்களை யனுபவிப்பார்கள் அரசவதி காரங்கூடும்.

ஏழகவரின்,

செல்வமதிகமுண்டாகினுந் தோன்ருதுமறையும், குடும்பவிரு த்தியதிகரிக்கினும் பொருளின்றி வருந்துவாரகள். மனப்பயத்தை யுந்துக்கத்தையு மனுபவித்தபின்பு சுகமடைவர் பொருள் பின் பிர பலமாம்.

எட்டாகவரின்

புத்திரச்செல்வமும் பலதன்யோகமும் தனதானியக்கிரகவாக னமேன்மைகளும் அனேகவித செல்வயோகமும் பொருளுங்கூடும் கீர்த்தி மூர்த்திபுகழ் படைத்தவருண்டாவார்கள். பலதனசெல்வமு ண்டாகினும் ஸ்திரீசந்ததியோர் நிலைப்பில்லாதடைவர். மனக்கிலே சதுக்கங்களைப் பின்னனுபவிப்பார்களென்ன வறியவேண்டியது.

ஒன்பதாகவரின்,

கீர்த்தி மூர்த்தி மகிமையுடைய விடமாகும். இராஜயோகப்புக ழும் பிரபலசெல்வமுஞ்சேரும். அனேகவிதலாபம்வரும். முன்னிரு ந்ததலைமுறைவரையிற் பலகஷ்டநஷ்டம் பொருந்திகடனால்வருந்திப் பலவித விரயமடையினும் பின்பல செல்வமுங்கைகூடியிழந்தபொ ருளும் பிரபலவிருத்தியாகி யாவரும்மெய்க்கப் பூபதிபோல் வாழ் வார்கள் அப்படிஓர்தலைமுறை சென்றபின் குன்றிக் கடன்முதலிய பலதொந்தரவுகளை யடைவார்கள். பகையும் விவாதவழக்கினாலும் பொருட்போம். குடும்பமழிந்து மானஹீனமடைவார்கள்.

## வடக்கு முகமாகியும்,

ஒன்றுமிச்சமுமாகவரின்,

சிலதலைமுறைவரையிற் பிரபல தனம்படைக்கினும், அவ்விடம் பாழாகும். பலதன நஷ்டமும் ஆயுட்குடும்பக்குறைவும் நேரும்.

இரண்டுமிச்சமாகவரின்,

கொடுங்கோற்பகை கடன் இல்லிடமிழந்து உழலுவர்பலவகை துக்கசோகமும் பலவித கஷ்டநஷ்டமடைவார்கள்.

மூன்றுமிச்சமாகவரின்,

பலவகை இராஜயோகஞ்செல்வம்சேரும். குடும்பவிருத்தியுட ன்மூன்றுதலைமுறைவரை பெரும்பிரபலமடைந்து பின்னிழப்பார்

நான்குமிச்சமாகவரின்.

அவ்விடந்திரமிராது. பகையும் கவலையும்நேரும். பொருட் போம். புத்திரஹானியும் அபகீர்த்தியுமுண்டாகும்.

ஐந்தாறுஒன்பதாகவரின்,

நித்தியசஞ்சலம் பிணிவாதை கடன்முதலிய பலவகைமனோவ ருத்தமும் பொருட்சேதமும் அனேகஇடம்விட்டுப்பேருதல் குடும்ப

ஸ்திரீகட்கரிஷ்டம் சித்தப்பிரமைமுதலிய பலதுன்பமும் முன் பலதன செல்வயோகமுடையவராகி வரவரதலைமுறைநஜந்தினுள் நசித்தும் கடனுற்றனமிழந்தும் ஆயுளற்பமுடையராவர் ஆறு ஒன்பதாகினும் விதியேபலனாகும்.

ஏழுஅல்லது எட்டாகவரின்

மூன்றுதலைமுறைகுன்றியுடன் தழைத்தோங்கும் செல்வவிருத்தியைசெய்விக்கும். மிகவும்யோகமுண்டாகும். பிரபலஜெயத்துடன் அனேகவித கடன்முதலிய பலதொந்தரவுகளும் நீங்கிச் சுகசௌக்கிய வெற்றியுண்டாகும். இஷ்டகாரியங்கள் சித்தியும்சித்தபிரமைமுதலிய பலவித கஷ்டரோகமும்நீங்கிச் சுகம்பெறுவர்களெனக் காணல்வேண்டும்.

## கன்னிகாசக்கர விபரமறிய

சிவதாரத்தில் இலட்சுமிப்பிரதம் இந்தக்கிரகம் கன்னிகாகாலசக்கரம் மூன்றுலிங்கஙகணக்கெழுதி அதற்குக்குறுக்கேரேகைநாலுகீறி அடிவரையில் அசுவனிநட்சத்திரமுதல் உள நட்சத்திரங்களையும் மூன்றுலக்கத்துக்குமெழுதவும்.

## கன்னிகா சக்கரம்.

| | ர | | சி | | அ | |
|---|---|---|---|---|---|---|
| ரோ | | தி அ | | க தி | | ச |
| கா | | பு உ | | வி உ | | பூ |
| ப | | பூ பூ | | அ பூ | | உத் |
| அ | | ஆம | | கேமூ | | ரே |

க-ம் பாதம்.
உ-ம் பாதம்.
ங-ம் பாதம்.
ச-ம் பாதம்.

இதில் காலற்றநாள் கார்-உத்ரம்-உத்தராடம் உடலற்றநாள்மிருசித்-அவிட்டம், தலையற்றநாள், புனர்-விசா-பூரட்டாதி.

இந்தச்சக்கரத்தை எண்ணிப்பார்க்க ஊர்த்தமுகம் எந்தகுறுக் குரேகையில் சந்திரனிருக்கிறதோ அந்தரேகையில்சூரியனிருந்தால் அக்கினிபயம், அங்காரகனிருந்தால் மிருத்தியுபயம். புதனிருந்தால் ரோகப்பிரதம். பிரகஸ்பதியிருந்தால் தானியஹானி. சுக்கிரனிருந் தால்கலகம் சனியிருந்தால்சோரபயம். ராகுவிருந்தால் தேகபீடை. கேது இருந்தால்சவம் இந்தக்கிரகம் கன்னிகாசக்கரத்தை எண்ணிக் கொண்டு வருகிறநட்சத்திரத்தால் ஊர்த்தமுகமாயிருக்கிற நட்சத் திரத்தில் ஸ்தம்பப்பிரதிஷ்டைசெய்தால் உத்தமம். இறங்கிவருகிற நட்சத்திரம் அதோமுகமாயிருக்கிற நட்சத்திரத்தில் ஸ்தம்பப்பிரதி ஷ்டைசெய்யலாகாது. ரோகனி-பூசம்-திருவாதிரை-திருவோணம் அவிட்டம்-சதயம்-உத்திரம்-உத்திராடம்-உத்திரட்டாதி-இந்த ௯-ம் ஊர்த்தமுகநட்சத்திரம் ஆகையால்ஸ்தம்பப்பிரதிஷ்டைசெய்யலாம் இதன்றி துவசம்-மெத்தை-பசுத்தொழுவம்-கோபுரம் இவைகள்கட் டலாம்.

திரிமுகநட்சத்திரத்தில் சுவர்வைக்கலாம், பசு-ஆடு-மாடு-குதி ரை இவைகள் வாங்கலாம்.

ரேவதி-அஸ்தம்-புனர்பூசம்-சித்திரை-சுவாதி-அசுவனி-மிருக சிரம்-அநுஷம்-கேட்டை இந்நட்சத்திரம் ௯-ம்-சுவர்வைக்கவும் யானை-குதிரை-ஆடு-மாடு இவைகள் வாங்கவும் உத்தமம்.

அதோமுகநட்சத்திரத்தில் கிணறு-குளம்-ஏரி இவைகள் எடுக் கலாம் விசாகம்-மூலம்-ஆயிலியம்-கார்த்திகை-பூரம்-பூராடம்பூரட் டாதி மகம்பரணி இந்த ௯-நட்சத்திரமும், அதோமுக மானதால் கிணறு குளம் ஏரிக்கால் அகழி சுரங்கம்கணக்கு அப்பியாசம்களஞ் சியம் இவைகள்செய்யலாம். தனம்புதைக்கலாம், சங்குஸ்தாபனம் பண்ணலாம். ஸ்தம்பப்பிரதிஷ்டைபண்ண முதற்சாமம் உத்தமம். இரண்டாஞ்சாமம் சந்தோஷம். மூன்றாஞ்சாமம் அதமம். நாலாஞ் சாமம் சந்தியாகாலம் இராக்காலங்களிலும் கூடாது.

# தேவதைகளிருப்பிடம்.

## அறியும் எந்திரம்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | |
| | | | | | | | |
| | | பேய்காவல், | தேவர்கள்காவல் | | பேய்காவல், | | |
| | | தேவர்கள்காவல் | பிரமஸ்தானம் | | தேவர்கள்காவல். | | |
| | | | நாலு அறையும் | | | | |
| | | பேய்காவல் | தேவர்கள்காவல் | | பேய்காவல், | | |
| | | | | | | | |
| | | | | | | | |

### விருத்தம்.

இடமனையொன்றினுக்கு மெட்டெட்டா மறையைக்கீறிப்
நவேதுபிரமஸ்தானம் நான்குமூலையும் பேயாக்கம்
அடைவிலேயெட்டுக் தேவராகுவர் நாற்பத்தெட்டும்
குடிபலர்க்காகுமென்று கூறினர்மயனூர் வல்லோர்.

# இதில் அவரவர்கட்கு வேண்டிய

## நாமநக்ஷத்திர வெழுத்துகள்

| கிரமம் | நட்சத்திரம் | நான்குபாத வெழுத்துகள் | | | |
|---|---|---|---|---|---|
| க | அசுவினி | சு | சே | சோ | லா |
| உ | பரணி | லீ | லு | லே | லோ |
| ங | கார்த்திகை | ஆ | ஈ | ஊ | ஏ |
| ச | ரோகணி | ஒ | வா | வீ | வு |
| ரு | மிருகசீரிடம் | வே | வோ | கா | கி |
| சு | திருவாதிரை | கூ | க்க | ஞ | ச |
| எ | புனர்பூசம் | கே | கோ | ஹ | ஹி |
| அ | பூசம் | ஹு | ஹே | ஹோ | ட |
| கூ | ஆயிலியம் | டீ | டு | டே | டோ |
| கய | மகம் | மா | மீ | மூ | மே |
| கக | பூரம் | மோ | டா | டி | டு |
| கஉ | உத்திரம் | டே | டோ | பா | பி |
| கங | அஸ்தம் | பூ | ஷ | ண | டா |
| கச | சித்திரை | பே | போ | ரா | ரி |
| கரு | சுவாதி | ரு | ரே | ரோ | த |
| கசு | விசாகம் | தீ | து | தே | தோ |
| கஎ | அநுஷம் | நா | நீ | நு | நே |
| கஅ | கேட்டை | நோ | யா | யி | யு |
| ககூ | மூலம் | யே | யோ | ப்பா | பபி |
| உய | பூராடம் | ப்பூ | த்த | ப | ட |
| உக | உத்திராடம் | பே | போ | ஜ | ஜி |
| உஉ | திருவோணம் | ஜு | ஜே | ஜோ | கோ |
| உங | அவிட்டம் | க | கி | கு | கே |
| உச | சதயம் | கோ | ஸ | ஸீ | ஸு |
| உரு | பூரட்டாதி | ஸே | ஸோ | த | தி |
| உசு | உத்திரட்டாதி | து | ஸ | த்தா | த்தி |
| உஎ | ரேவதி | தே | தோ | ச்சா | ச்சி |

# அமிர்தசித்தமரண யோகங்களும்

## அடங்கியது

| ஞாயி | திங்க | செவ் | புத | வியா | வெள் | சனி |
|---|---|---|---|---|---|---|
| சித்த | சித்த | சித்த | மரண | அமிர் | அமிர் | சித்த |
| மரண | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த |
| சித்த | மரண | மரண | அமிர் | மரண | சித்த | அமிர் |
| சித்த | அமிர் | அமிர் | சித்த | மரண | மரண | சித்த |
| சித்த | அமிர் | சித்த | மரண | மரண | சித்த | சித்த |
| சித்த | சித்த | மரண | சித்த | மரண | சித்த | சித்த |
| சித்த | அமிர் | சித்த | சித்த | அமிர் | சித்த | சித்த |
| சித்த | மரண | சித்த | சித்த | அமிர் | மரண | சித்த |
| சித்த | மரண | சித்த | சித்த | சித்த | மரண | மரண |
| மரண | மரண | சித்த | சித்த | அமிர் | மரண | அமிர் |
| மரண | சித்த | சித்த | அமிர் | சித்த | சித்த | சித்த |
| அமிர் | சித்த | அமிர் | அமிர் | மரண | சித்த | மரண |
| அமிர் | சித்த | சித்த | மரண | சித்த | அமிர் | மரண |
| சித்த | மரண | சித்த | சித்த | சித்த | சித்த | மரண |
| சித்த | அமிர் | சித்த | சித்த | அமிர் | மரண | அமிர் |
| மரண | மரண | மரண | சித்த | சித்த | சித்த | சித்த |
| மரண | சித்த | மரண | சித்த | சித்த | சித்த | சித்த |
| மரண | சித்த | மரண | சித்த | மரண | மரண | சித்த |
| அமிர் | சித்த | அமிர் | மரண | மரண | சித்த | சித்த |
| சித்த | மரண | சித்த | அமிர் | சித்த | மரண | சித்த |
| அமிர் | மரண | மரண | அமிர் | சித்த | சித்த | சித்த |
| அமிர் | அமிர் | சித்த | சித்த | சித்த | மரண | மரண |
| மரண | சித்த | சித்த | மரண | சித்த | சித்த | மரண |
| சித்த | சித்த | மரண | சித்த | மரண | சித்த | அமிர் |
| சித்த | மரண | மரண | அமிர் | சித்த | சித்த | மரண |
| அமிர் | சித்த | அமிர் | சித்த | சித்த | சித்த | சித்த |
| அமிர் | சித்த | சித்த | மரண | மரண | அமிர் | மரண |



பின்வரும்

## சோடசபொருத்தத்திற்கு

# பலன்களறிவது.

### நேற்பம்.

க-வந்தால்—நால்வகை ஜாதிகளுக்கும் பொருந்திநடக்கும்.

உ-வந்தால்—வறுமை மத்திமம்

ந-வந்தால்—வேடர்களுக்காகும்

ச-வந்தால்—வறுமை மத்திமம்

ரு-வந்தால்—அரசு சகலகாரியமும் ஜெயம்

சா-வந்தால்—வறுமை நீசர்களுக்கு உத்தமம்

எ-வந்தால்—வேள்வி உத்தமம் சுபமுண்டாம்

அ-வந்தால்—வறுமை இதுகளுடன் மனையும் சீக்கிரத்தில்முடியாது.

### ஆதாயம்

க-க்கு—விசேஷபலனுண்டாம்,

உ-க்கு—செல்வமுண்டாம்.

ந-க்கு—கீர்த்தியும் சவுக்கியமும் உண்டாம்.

ச-க்கு—சகலசவுக்கியமும் உண்டாம்

ரு-க்கு—மத்திமபலனுண்டாம்

சா-க்கு—மத்திமபலனுண்டாம்

எ-க்கு—சுபமும்ஞானங்களுமுண்டாம்,

அ-க்கு—சுபசந்தோஷமுண்டாம்.

கூ-க்கு—மிகுந்த போகபாக்கியமுண்டாம்

க0-க்கு—சகலகாரியமும் மத்திமபலனும்

கக-க்கு—தருமசிந்தையுஞ் செல்லமுமுண்டாம்

கஉ-க்கு—சமஸ்தமும் உத்தமபலனாய் நடக்கும்,

### ஆதாயச்சிலவு,

க-க்கு—சகலமும் குன்றிப்போகும

உ-க்கு—வீடுதீப்பமும், மரணபயமுண்டாம்.

௩-க்கு—குடும்பம் மிகுந்த சுபமாகவிருக்கும்
௪-க்கு—மத்திமம்.
௫-க்கு—மிகுந்தசுபமும் வீண்செலவுகளும் நேரிடும்
௬-க்கு—மத்திமம்.
௭-க்கு—மிகுந்த சவுக்கியத்தில் மனஸ்தாபமுமுண்டாம்.
௮-க்கு—இலக்குமிவாசமும் பிணிமுதலியதுகளுமுண்டாம்
௯-க்கு—மத்திமம்.
௧0-க்கு—மரணபயமுண்டாம்

## யோனிபலனறிவது

சிம்மயோனி—போகபாக்கியமும் செல்வமும் உண்டாம்

கரயோனி—மனஸ்தாபம் குடும்பகலகம் பொருள்நஷ்ட முதலாகிய துகளுமுண்டாம்.

துவஜயோனி—தனப்பிராப்தியும், குடும்பசம்பத்தும், புத்திரசம்பத்தும் உண்டாம்.

சுவானயோனி—தேகத்தில் பிணிகளும் குடும்பகலகமும் இஷ்டபந்துக்கள் விரோதமும் உண்டாம்.

கஜயோனி—மிகுந்தசெல்வமும் இலட்சுமிலாபமும்பந்துக்கள் நேசமும் உண்டாம்.

புகையோனி—கொலை, களவு, மனவியாகூலம், சத்துருக்கள் நேசமுதலாகியது முண்டாம்.

இடபயோனி—அந்தமனையினுல் இலட்சுமிகடாட்சமும் பொருள் வரவும் உத்தியோகமுதலாகியதுகளு முண்டாம்.

காகயோனி—அந்தமனையில் நோயும் துக்கமும் எந்நாளும் உண்டாகும்.

## வாரபலனறிவது

௧-க்கு ஆதிவாரம் குரோதமுண்டு மத்திமம் ௨-க்குசோமவாரம் நாளுக்குநாள் மிகுந்தநலமுண்டாம் ௩-க்கு மங்களவாரம்-பழம் பொருளும் புதுப்பொருளும் போவதுமன்றி. தனநாசமுமுண்டாம் ௪-க்கு புதவாரம் மிகுந்த லட்சுமீகரமுண்டாம். ௫-க்கு குருவாரம்- புத்திரசம்பத்தும், தனசம்பத்துமுண்டாம். ௬-க்கு சுக்கிரவாரம் சகலகாரியமும் நன்மையுண்டாம். ௭-க்கு சனிவாரம்-சோரபயம் மத்திமபலனுண்டாம்,

## திதிபலனறிவது.

க-க்கு பிரதமை உத்தமத்தில் மத்திமம். உ-க்கு துதியை இன்பமுண்டாம். ங-க்கு திரிதியை ஜெயமுண்டாம். ச-க்கு சதுர்த்தி மத்திமபலன். ரு-க்கு பஞ்சமி புத்திரசம்பத்தும், நன்மையு முண்டாம். சு-க்கு சஷ்டி மத்திமபலன், எ-க்கு சப்தமி போகபாக்கியமும், சுபமுமுண்டாம். அ-க்கு அஷ்டமி சுக்கிலபக்ஷம்சுபம். கிருஷ்ணபக்ஷம் வியாதியுண்டாம். கூ-க்கு நவமி மனை தீபமில்லாமல்பாழாகும். க0-க்கு தசமி பாக்கியமும் நன்மையுமுண்டாம், கக-க்கு ஏகாதசி சிறுமையுண்டாம். சுக்கிலபக்ஷம் சுபமுண்டாம். கஉ-க்குதுவாதசி அன்னவஸ்திர முதலாகியதும் உண்டாவதோடு கல்வியுமுண்டாம். கங-க்கு திரயோதசி கல்வி முதலாகிய சம்பத்துகளு முண்டாம். கச-க்கு சதுர்த்தசி மனைபாழாம் கரு-க்கு பூரணை எல்லாம் உத்தமமாய் நடக்கும் சுபமுண்டாம்.

## நட்சத்திரபலனறிவது

க-க்கு அசுவினி—எல்லாம் வசியமாகும், வெற்றியுண்டாம்.

உ-க்கு பரணி—வீடுகட்டி முடியு முன் எஜமான் இறந்துபோவான்.

ங-க்கு கார்த்திகை—அந்தவீடு அக்கினியால் பயமுண்டாம்

ச-க்கு ரோகிணி—ஜெயமுண்டாம்.

ரு-க்கு மிருகசீரிடம்—மிகுந்த சுபமுண்டாம்.

சு-க்கு திருவாதிரை—குறைவிலலாத சவுக்கியமாயிருந்தாலும் மத்திமபலனாகவே நடக்கும்.

எ-க்கு புனர்பூசம்—புத்திரபாக்கியமும். செல்வமும் உண்டாம்.

அ-க்கு பூசம்—புத்திரவிர்த்தி, சுபவிர்த்தியுண்டாம்.

கூ-க்கு ஆயிலியம்—சௌக்கியமில்லாமல் மரணபயம் உண்டாம்.

க0-க்கு மகம்—உத்தமத்தில் மத்திமம்.

கக-க்கு பூரம்—உத்தமத்தில் மத்திமம்.

கஉ-க்கு உத்திரம்—நாளுக்குநாள் மிகுந்த சுபகாமுண்டாம்.

கங-க்கு அஸ்தம்—புத்திரவிர்த்தி முதலானது சிலநாளுண்டாயிருக்கும்.

கச-க்கு சித்திரை—பிணிமுதலாகிய மத்திமபலனுண்டாம்.

கரு-க்கு சுவாதி—மிகுந்த சுகமுண்டாம்.

கசு-க்கு விசாகம்—துன்பமாகிய சஷ்டாஷ்டகம் உண்டாம்,

கஎ-க்கு அனுஷம்—சகலசவுக்கியமும்கல்வித்திறமையுமுண்டாம்.

௧அக்கு கேட்டை—அசுபகரமாகிய குடும்பவிரோதம் பகைமுதலா கியதும் உண்டாம்.

௧௯-க்கு மூலம்—எஜமானுக்கு நோய்முதலாகிய மத்திமபலன்களு ண்டாம்.

௨0-க்கு பூராடம்—மனைபாழடைந்து போவதுமன்றி நோய்முதலா கிய துன்பமுண்டாம்.

௨௧-க்கு உத்திராடம்—மிகுந்த சுபகரமுண்டாம்.

௨௨-க்கு திருவோணம்—புத்திரவிருத்தி முதலாகியதுண்டாயிருந்த போதிலும் சுபங்கள் மத்திமபலனாக நடக்கும்.

௨௩-க்கு அவிட்டம்—கட்டினவர்சிலகாலம்அனுபவித்துமற்றவாகள் அனுபவிப்பார்கள்.

௨௪-க்கு சதயம்—இலட்சுமிவாசம் பண்ணுவதும் சகலவெற்றிய மு ண்டாம்.

௨௫-க்கு பூரட்டாதி—சந்ததியில்லாமல் மத்திமபலனாய் நடக்கும்.

௨௬-க்கு உத்திரட்டாதி—போகபாக்கியம் மிகுந்தசுபகரமுதலாகிய தும் உண்டாம்.

௨௭-க்கு ரேவதி—அந்தமனையில்வாசம்பண்ணுபவர்களுக்குஎந்நாளு ம் பிணிகளுண்டாம்.

## இராசி பலனறிவது

௧-க்கு மேஷம்—குடும்பம் விருத்தியாயிருந்தபோதிலும் பலபி ணிகளும் உண்டாம்.

௨-க்கு விருஷபம்—மதிக்கத்தகுந்த பெருமையும்புண்ணியவிர் த்தியுமுண்டாம்.

௩-க்கு மிதுனம்—தனமுதலாகிய துண்டாயிருந்த போதிலும் மத்திமபலனாய் நடக்கும்.

௪-க்கு கடகம்—சுபஜெயங்களும் பூரணாயுசும் உண்டாம்.

௫-க்கு சிங்கம்—வசிகரம் செல்வம் இதுகளுண்டாம்.

௬-க்கு கன்னி—ஞானமும் ஆயுள்விருத்தியும் உண்டாம்.

௭-க்கு துலாம்—போகபாக்கியமும் செல்வமும் உண்டாம்.

௮-க்கு விருச்சிகம்—சகலநன்மையும் ஒன்றுக்கொன்று பொ ருந்தாமலே நடக்கும்.

௯-க்கு தனுசு—சுபகரமும் செலவமும் சமமாகநடக்கும்.

க0-க்கு மகரம்—நாளுக்குநாள் பொருள்சவுக்கியமும்புத்திரவி ருத்தியும் உண்டாம்.

கக-க்கு கும்பம்—செல்வமும் துன்பமும் இரண்டுங் கலந்து நடக்கும்.

கஉ-க்கு மீனம் ஜெயமுண்டா யிருந்தபோதிலும் தாமசமாய் நடக்கும்.

## அம்சபலனறிவது

க-க்கு தான்யாம்சம்—நன்மைமுதலாகிய சுபகரங்களுண்டாம்.
உ-க்கு நிதனும்சம்—வறுமைமுதலான பிணிகளுண்டாம்.
௩-க்கு சத்தியாம்சம்—சுபகரங்களும் சுபசோபனுதிகளுமுண்டாம்
௪-க்கு நிர்ப்பீதியம்சம்—சுகசம்பத்துண்டாம்.
௫-க்கு புத்தியம்சம்—நல்லறிவு கல்வித்திறமை காவியலக்ஷணங்க ளுண்டாம்.
௬-க்கு கிலீபாம்சம்—கலகம் குடும்ப அபிவிர்த்தி முதலாகிய துண டாம்.
௭-க்கு தஸ்கராம்சம்—வறுமைதீமை முதலாகியதுண்டாம்
௮-க்கு நரபதியம்சம்—வெற்றி ஜெயப்பிரதாபம் உணடாம்.
௯-க்கு பிரஜாம்சம்—புத்திரவிருத்தி குடும்பவிருத்தி முதலாகிய சு பங்களுண்டாம்.

## வம்சபலனறிவது

க-க்கு பிரம்மவம்சம்—மிகுந்த சுபகரமுண்டாம்.
உ-க்கு க்ஷத்திரிவம்சம்—ஜெயமும் வெற்றியுமுண்டாம்
௩-க்கு வைசியவம்சம்—தனமுஞ் செல்வமுமுண்டாம்.

## நேத்திரபலனறிவது

ஒருகண்—சமயலனுக நடக்கும்.
இருகண்—மிகுந்த சுபமுண்டாம்.
குருட்டுக்கண்—அதமம் கூடாது.

## சூத்திரபலனறிவது

க-க்கு பாலசூத்திரம்—உத்தமபலனாய் நடக்கும்.
உ-க்கு குமாரசூத்திரம்—சுபகரமுண்டாம்,
ங-க்கு அரசசூத்திரம்—நன்மையுண்டாம்.
ச-க்கு விருத்தசூத்திரம்—மத்திமபலனாய் நடக்கும்.
ரு-க்கு மரணசூத்திரம்—தீமையாகிய பலன்களுண்டாம்

## யோகபலனறிவது

அமிர்தயோகம், சித்தயோகம்—சுபபலனுண்டாம்
மரணயோகம்—எல்லாவிஷயங்களுக்கும் கூடாவாம்.

## கணபலனறிவது

கணங்கள் ஒன்றாகில் நலமுண்டாம், தேவகணமும்மனிதகணமும்வந்தால் உத்தமபலனுண்டாம், தேவகணமும் இராக்ஷதகணமும்வந்தால் பகையும் சத்துருக்கள் விருத்தியும் உண்டாம், இராக்ஷசகணமும் மனிதகணமுமாகில் மரணமும் தீதும்உண்டாம்.

## குணபலனறிவது

சாத்விதகுணம்—உத்தமபலமாம், இராசதகுணம்—மத்திமபலமாம், தாமதகுணம்—அதமபலமாம்.

## பஞ்சகபலனறிவது

க-க்கு—மிருத்தியுபஞ்சகம், உ-க்கு—அக்கினிபஞ்சகம், ச-க்கு இராஜசஞ்சகம், சு-க்கு—சோரபஞ்சகம், அ-க்கு—ரோகபஞ்சகம், ங-ரு-எ இவை நிஷ்பஞ்சகமாம். இதை எல்லா சுபங்களுக்கும் வைத்திருக்கின்றது.

## தாராபலனறிவது

ங-ரு-எ-வருமானால் கொலை, பிணி, வறுமை முதலாகியது முண்டாம். க-உ-ச-சு-அ-கூ-வந்தால் செல்வம், புத்திரவிருத்தி, வாழ்வு, மகிழ்ச்சி முதலாகிய சிறப்புகளுமுண்டாம்.

## சந்திரபலனறிவது,

க-ங-சு-எ-க0-கக-வந்தால் சுபகரமுண்டாம். பூர்வபக்ஷம் உ-ரு-கூ-வந்தால் சுபம். அமரபக்ஷத்தில் கஉ-ச-அ-வந்தால் சுபம். மற்றவை தீது.

## அசுவனிநட்சத்திரம்

ஜெனனதினம் சு-சே-சோ-லா-அசுவனி நக்ஷத்திரத்தையுடையவருக்கு ரோகினிநக்ஷத்திரம் உத்தமம். அதன்விபரம்.தாராபலன்-சஎ௵ க்ஷேமம் அதிபதிகுரு வாகனம் யானை நாமதேயபலன் க்ஷேமகரம் அதிபதிபலன் தைரியம் வாகனபலன் லட்சுமிலாபம் சந்திரபலன்-உ௵ சுக்கிலபக்ஷம் உத்தமம் வாரத்தில் சோமவாரமானால் அமிர்தயோகம் கதம்பேச மகாரிஷிசொல்லிய ஆனந்தாதி யோகத்தில் வர்த்தமானயோகம் இதன்பலன் அதிகலாபம் கௌரிபஞ்சாங்க காலத்தில் உ-நாழிகைக்குள்ளாக அமிர்தவேளையில் சந்திரன் தினகாலவோரையிலும் எஉ-நாழிகைக்குமேல் க0-நாழிகைக்குள் உத்தியோவேளையிலும் குருதினகால வோரையிலும் கஉஅரை - நாழிகைக்குமேல் கரு-நாழிகைக்குள்ளாக லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் மனைமுகூர்த்தஞ்செயய உத்தமம்.

ஷை ரோகினி நக்ஷத்திரம் புதவாரமானால் சித்தியோகம் ஆநந்தாதியோகத்தில் சுபயோகம் பலன் சுபப்பிரதம் கௌரிபஞ்சாங்க யோகம் ௬ஏ-நாழிகைக்குமேல் ௯ நாழிகைக்குள்ளாக அமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் எஉ-நாழிகைக்கு மேல் க0-நாழிகைக்குள சுபவேளையிலும் குருதினகாலவோரையிலும்செய்ய உத்தமம்.

## பரணிநட்சத்திரம்,

ஜெனனதினம் லி-லு-லே-லோ பரணிநக்ஷத்திரமாக உடையவருக்கு ரேவதிநக்ஷத்திரம் உததமம். அதன்விபரம் தாராபலன் அ௵ மைத்திரம் அதிபதி சுக்கிரன் வாகனம் கருடன் நாமதேயபலன் சிநேகம் அதிபதிபலன் சந்தோஷம் வாகனபலன் சுகவிருத்தி சந்திரபலன் கஉ-௵ கிருஷ்ணபக்ஷம் உத்தமம் வாரத்தில் ஆதிவாரமானால் அமிர்தயோகம்கதம்பேசமகாரிஷிசொல்லிய ஆனந்தாதியோகத்தில் வர்த்தமானயோகம் இதன்பலன் அதிகலாபம் கௌரிபஞ்சாங்க காலத்தில் உதயமுதல் உ½-நாழிகைக்குமேல் ௯-நாழிகைக்குள்ளாக உத்தியோகவேளை அல்லது லாபவேளையில் சுக்கிரன்தினகாலவோரையிலும் மனைமுகூர்த்தஞ்செய்வதோடு மற்ற சுபங்களையும்செய்ய உத்தமம்.

ஷை ரேவதி நக்ஷத்திரம் சோமவாரமானால் சித்தியோகம் ஆனந்தம் யோகத்தில் மாதங்கயோகம் பலன் மத்திமம். கௌரிபஞ்சாங்க

வேளை இரண்டரை நாழிகைக்குள்ளாக அமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் அல்லது ரு-நாழிகைக்குமேல் எ½-நாழிகைக்குள் உத்தியோகவேளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்,

ஷை ரேவதிநக்ஷத்திரம் குருவாரமானால் சித்தியோகம் ஆனந்தாதியோகத்தில் மித்திரயோகம்பலன் இராச்சியலாபம் கௌரிபஞ்சாங்கவேளை உ½-நாழிகைக்குள்ளாக உத்தியோகவேளையிலும் குருதினகாலவோரையிலும் அல்லது கஉ½-நாழிகைக்குமேல் கரு-நாழிகைக்குள்ளாக லாபவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் மேலே சொல்லிய சுபங்களைச்செய்ய உத்தமம்.

ஷை ரேவதிநக்ஷத்திரம் சுக்கிரவாரமானால் அமிர்தயோகம்ஆனந்தாதியோகத்தில் ஸ்ரீவர்ச்சயோகம்பலன்லட்சுமிலாபம் கௌரிபஞ்சாங்கவேளையில் க0-நாழிகைக்குமேல் கக½-நாழிகைக்குள் அமிர்தவேளையிலும் குருதினகால வோரையிலும் கஎ½-நாழிகைக்குமேல் கஅ௵-நாழிகைக்குள்ளாக லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்ய வுத்தமம்.

## கார்த்திகைநட்சத்திரம்

ஜெனனதினம் அ-இ-உ-எ-கார்த்திகைநக்ஷத்திரமாக உடையவருக்குபூசநக்ஷத்திரம் உத்தமம். இதன்விபரம் தாராபலன் ஆறுக்குசாதனம் அதிபதிசந்திரன் வாகனம்ஜம்புகம் நாமதேயபலன்காரியசாதனம் அதிபதிபலன் கீர்த்தி வாகனபலன் சவுக்கியம் முதற்பாகத்துக்குள் ஜனித்தவர்களுக்கு நாலாஞ்சந்திரன் மத்திபம் இரண்டாம்பாதமுதல் நாலாம்பாதம் இவற்றுள்ஜனித்தவர்களுக்கு மூன்றுஞ்சந்திரன் உத்தமம், வாரத்தில் சோமவாரமானால் சித்தியோகம் கதம்பேசமகாரிஷி சொல்லிய ஆனந்தாதியோகத்தில் பிரஜாபதியோகம் இதன்பலன் இஷ்டசித்தி கௌரிபஞ்சாங்காலத்தில் இரண்டரை நாழிகைக்குள்ளாக அமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் அல்லதுபனிரண்டரை நாழிகைக்குமேல் பதினைந்து நாழிகைக்குள்ளாக லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை பூசநக்ஷத்திரம் குருவாரமானால் அமிர்தயோகம் ஆனந்தாதியோகத்தில்சுபயோகம் இதன்பலன்சுப்பிரதம் கௌரிபஞ்சாங்கம் இரண்டரை நாழிகைக்குள் உத்தியோகவேளையிலும் குருதினகால

வோரையிலும் அல்லதுபனிரண்டரை நாழிகைக்குமேல்பதினேர்து நாழிகைக்குள்ளாக லாபவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும்செய்ய உத்தமம்.

## ரோகணிநட்சத்திரம்

ஜெனனதினம் ஒ-வ-வி-வு ரோகணிநக்ஷத்திரமாக உடையவருக்கு ரேவதிநக்ஷத்திரம் உத்தமம் இதன்விபரம் தாராபலன் ஆறுக்குசாதனம் அதிபதி சந்திரன்வாகனம் ஜம்புகம்நாமதேயபலன் காரியசாதனம் அதிபதிபலன் கீர்த்தி வாகனபலன் சவுக்கியம் சந்திரபலன் பதினேராஞ்சந்திரன் உத்தமம் வாரத்தில்சோமவாரமானல் சித்தியோகம் கதம்பேசமகாரிஷிசொல்லிய ஆனந்தாதியோகத்தில் வர்த்தமானயோகம் இதன்பலன்மத்திமம் கௌரிபஞ்சாங்கவேளை இரண்டரைநாழிக்குள்ளாக அமிர்தவேளையிலும் சந்திரன்தினகால வோரையிலும் மனைமுதலாகிய சுபங்கள்செய்ய உத்தமம்

ஷை ரேவதிநக்ஷத்திரம் குருவாரமானல் சித்தியோகம் ஆனந்தாதியோகத்தில் மித்திரயோகம்பலன் இராச்சியலாபம்கௌரிபஞ்சாங்கவேளையில் இரண்டரைநாழிகைக்குள்ளாகஉத்தியோகவேளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை ரேவதிநக்ஷத்திரம் சக்கிரவாரமானல் அமிர்தயோகம் ஆனந்தாதியோகத்தில் ஸ்ரீவர்சசயோகம் இதன்பலன் இலட்சுமிலாபம் கௌரிபஞ்சாங்கவேளை பத்துநாழிக்குமேல்ஒண்ணேகால் நாழிகைக்குள்ளாக அமிர்தவேளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

## மிருகசிரநட்சத்திரம்

ஜெனனதினம் வே-வோ-க-கி மிருகசிரநக்ஷத்திரமாக உடையவருக்கு பூசநக்ஷத்திரம் உத்தமம் அதன்விபரம் தாராபலன் நாலுக்கு க்ஷேமம் அதிபதி குரு வாகனம் யானை நாமதேயபலன் க்ஷேமகரம் அதிபதிபலன் தைரியம் வாகனபலம் இலட்சுமிலாபம்சந்திரபலன் முதல் இரண்டுபாதத்துக்குள் ஜனித்தவர்களுக்குமூன்ருஞ்சந்திரன் பலன் திரவியலாபம் உத்தமம். மூன்ரும்பாதம் நான்காம்பாதம்ஜெனித்தவர்களுக்கு இரண்டாஞ்சந்திரன் சுக்கிலபட்சம் உத்தமம்வாரத்தில்சோமவாரமானல் சித்தியோகம் கதம்பேசமகாரிஷிசொல்லிய ஆனந்தாதியோகத்தில் பிரஜாபத்தியோகம் இதன்பலன் இஷ்டசித்தி கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரை நாழிகைக்குள் அமிர்த

வேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் அல்லது பனிரெண்டரை நாழிகைக்குமேல் பதினைந்து நாழிகைக்குள்ளாக லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை பூசநக்ஷத்திரம் குருவாரமானால் அமிர்தயோகம் ஆனந்தாதியோகத்தில் சுபயோகம் இதன்பலன் சுபப்பிரதம் கௌரிபஞ்சாங்கம் இரண்டரைநாழிகைக்குள் உத்தியோகவேளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

## திருவாதிரை நட்சத்திரம்

ஜெனனதினம் கூ-க்க-ஞ-ச திருவாதிரைநக்ஷத்திரமாக உடையவருக்கு அஸ்தநக்ஷத்திரம் உத்தமம் இதன்விபரம் தாராபலன் எட்டுக்கு மைத்திரம் அதிபதிசுக்கிரன் வாகனம்கருடன் நாமதேயபலன் சிநேகம் அதிபதிபலன் சந்தோஷம் வாகனபலன்சுகவிருத்தி சந்திரபலன்நாலாஞ் சந்திரன்பலன்மத்திமம் கிருஷ்ணபக்ஷம் உத்தமம் வாரத்தில் சுக்கிரவாரமானால் அமிர்தயோகம்கதம்பேசமகாரிஷி சொல்லிய ஆனந்தாதியோகத்தில் அமிர்தயோகம் அதன்பலன்வஸ்திரலாபம்கௌரிபஞ்சாங்ககாலத்தில்பதினேழரைநாழிகைக்குமேல் ஒன்ணேகால் நாழிகைக்குள்ளாக சுகவேளையிலும்சுக்கிரன்தினகாலவோரையிலும் செய்யஉத்தமம்.

## புனர்பூசநட்சத்திரம்.

ஜெனனதினம் கே-கோ-ஹ-ஹி-புனர்பூசம் ஜென்மநக்ஷத்திரமாக உடையவருக்கு உத்திரட்டாதி நக்ஷத்திரம்உத்தமம் அதன்விபரம் தாராபலன் இரண்டுக்குசம்பத்து அதிபதிபுதன் வாகனம் குதிரை நாமதேயபலன் சம்பத்கரம் அதிபதிபலன் காந்திவாகனபலன் அர்த்தலாபம் சந்திரபலன் முதல்மூன்று பாதத்துக்குள் ஜெனித்தவர்களுக்கு பத்தாஞ்சந்திரன் உத்தியோகவிருத்தி உத்தமம் நாலாம்பாதத்தில் ஜெனித்தவர்களுக்கு ஒன்பதாஞ்சந்திரன் சுக்கிலபக்ஷம் உத்தமம் வாரத்திலசோமவாரமானால் சித்தியோகம் கதம்பேசமகாரிஷி சொலலிய ஆனந்தாதியோகத்தில் கதாயோகம் இதன்பலன் மத்திமம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள்ளாக அமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் அல்லது பனிரெண்டரை நாழிகைக்குமேல் பதினைந்துநாழிகைக்குள்ளாகலாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்யஉத்தமம்.

ஷ்டி உத்திரட்டாதிநக்ஷத்திரம் புதவாரமானால் சித்தியோகம் ஆனந்தாதியோகத்தில் லம்பயோகம் இதன்பலன் போஜனலாபம் கௌரிபஞ்சாங்கம் ஏழரைநாழிகைக்குமேல் பத்துநாழிகைக்குள்சுப வேளையிலும் குருதினகால வோரையிலும் செய்ய உத்தமம்,

ஷ்டி உத்திரட்டாதிநக்ஷத்திரம் குருவாரமானால் சித்தியோகம் ஆனந்தாதியோகத்தில சந்திரயோகம் பலன்சுபமுண்டாகும்கௌரி பஞ்சாங்ககாலத்தில் காலையிரண்டரைநாழிகைக்குள் உத்தியோக வேளையிலும் குருதினகால வோரையிலும் செய்ய உத்தமம்,

ஷ்டி உத்திரட்டாதிநக்ஷத்திரம் சுக்கிரவாரமானால் சித்தியோகம் ஆனந்தாதியோகத்தில்துவசயோகம் இதன்பலன்வஸ்துலாபம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் பதினேழரை நாழிகைக்குமேல்பதினெட்டேமுக்கால் நாழிகைக்குள் லாபசுகவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் மனமுகூர்த்தஞ்செய்ய உத்தமம்,

## பூசநட்சத்திரம்

ஜெனனதினம் ஹூ-ஹே-ஹோ-ஹா-ட பூசநக்ஷத்திரமாக உடையவருக்கு ரேவதிநக்ஷத்திரம் உத்தமம் இதன்விபரம் தாராபலன் இரண்டிக்கு சம்பத்துதாரை அதிபதிபுதன் வாகனம்குதிரை நாமதேய பலன் சம்பத்கரம் அதிபதிபலன் காந்தி வாகனபலன் அர்த்தலாபம் சந்திரபலன் ஒன்பதாஞ்சந்திரன் சுக்கிலபட்சம் உத்தமம் வாரத்தில் சோமவாரமானால் சித்தியோகம் கதம்பேசமகாரிஷிசொல்லிய ஆனந்தாதியோகத்தில் மாதங்கயோகம் பலன்மத்திமம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள் அமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் அல்லது கஉ$\frac{1}{2}$-நாழிக்குமேல்பதினைந்துநாழிக்குள் லாபவேளையிலும் சுக்கிரன்தினகால வோரையிலும் செய்ய உத்தமம்.

ஷ்டி ரேவதிநக்ஷத்திரம் குருவாரமானால் சித்தியோகம் ஆனந்தாதியோகத்தில் மித்திரயோகம்பலன் இராச்சியலாபம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள்உத்தியோகவேளையிலும் குரு தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்,

ஷ்டி ரேவதிநக்ஷத்திரம் சுக்கிரவாரமானால் அமிர்தயோகம்ஆனந்தாதியோகத்தில் ஸ்ரீவர்ச்சயோகம் இதன்பலன் இலட்சுமிலாபம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் பதினேழரைநாழிகைக்குமேல் பதினெட்டேமுக்கால் நாழிகைக்குள் லாபவேளையிலும் சுக்கிரன் தினகால வோரையிலும் செயயஉத்தமம்.

## ஆயிலிய நட்சத்திரம்.

ஜெனன தினம்-டி-டு-டே-டோ-ஆயிலிய நக்ஷத்திரமாக உடைய வருக்கு அசுவினிநக்ஷத்திரம் உத்தமம். இதன்விபரம்தாராபலன்இரண்டுக்கு சம்பத்து அதிபதிபுதன்வாகனம் குதிரை நாமதேயபலன் சம்பத்கரம் அதிபதிபலன் காந்தி வாகனபலன் அர்த்தலாபம் சந்திரபலன் பத்துக்கு உத்தியோகவிருத்தி உத்தமம். வாரத்தில் சோமவாரமானால் சித்தயோகம் கதம்பேசமகாரிஷிசொல்லிய ஆனந்தாதியோகத்தில் இராக்ஷசயோகம் இதன்பலன்மத்திமம். கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள் அமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை அசுவனிநக்ஷத்திரம் குருவாரமானால் அமிர்தயோகம்ஆனந்தாதியோகத்தில் மானசயோகம் இதன்பலன் இராஜசன்மானம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள் உத்தியோகவேளையிலும் குருதினகால வோரையிலும் செய்ய உத்தமம்,

ஷை அசுவனிநக்ஷத்திரம் சுக்கிரவாரமானால் அமிர்தயோகம் ஆனந்தாதியோகத்தில் வச்சிரயோகம், இதன்பலன்மத்திமம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் பதினேழரை நாழிகைக்குமேல் பதினெட்டேமுக்கால் நாழிகைக்குள்லாபவேளையிலும்சுக்கிரன்தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

## மக நட்சத்திரம்

ஜெனன தினம் மா-மீ-மூ-மே-மகம்ஜென்மநக்ஷத்திரமாகஉடையவருக்கு அஸ்தநக்ஷத்திரம்உத்தமம் இதன்விபரம் தாராபலன் நாலுக்குக்ஷேமம், அதிபதி குருவாகனம் யானை நாமதேயபலன் க்ஷேமகரம் அதிபதிபலன்தைரியம் வாகனபலன் இலட்சுமிலாபம் சந்திரபலன் இரண்டுக்குசுக்கிலபட்சம் உத்தமம். வாரத்தில்சோமவாரமானால் சித்தயோகம், கதம்பேசமகாரிஷிசொல்லிய ஆனந்தாதியோகத்தில் வச்சிரயோகம் இதன்பலன்மத்திமம். கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள்ளாக அமிர்தவேளையினும்,சந்திரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்,

ஷை மகநக்ஷத்திரம் சுக்கிரவாரமானால் அமிர்தயோகம். கதம்பேசமகாரிஷிசொல்லிய ஆனந்தாதியோகத்தில் அமிர்தயோகம் இதன்பலன் வஸ்திரலாபம், கௌரிபஞ்சாங்ககாலத்தில்பதினேழரை

நாழிகைக்குமேல் பதினெட்டேமுக்கால் நாழிகைக்குள் லாபசுகவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

## பூர நட்சத்திரம்.

ஜெனன தினம்-மோ-பா-டி-டு-பூரநக்ஷத்திரமாக உடையவருக்குரேவதிநக்ஷத்திரம் உத்தமம். அதன்விபரம் தாராபலன் எட்டுக்கு மைத்திரம் அதிபதிசுக்கிரன் வாகனம்கருடன் நாமதேயபலன் சிநேகம் அதிபதிபலன் சந்தோஷம் வாகனபலன் சுகவிருத்தி சந்திரபலன் எட்டுக்குகிருஷ்ணபக்ஷம் உத்தமம். வாரத்தில் ஆதிவாரமானால் அமிர்தயோகம் கதம்பேசமகாரிஷிசொல்லிய ஆனந்தாதியோகத்தில் வர்த்தமானயோகம்பலன் அதிகலாபம். கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குமேல்ஐந்துநாழிகைக்குள்ளாக உத்தியோகவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை ரேவதிநக்ஷத்திரம் சோமவாரமானால் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் மாதங்கயோகம்பலன்சொற்பகஷ்டம், கௌரிபஞ்சாங்ககாலத்தில் பனிரெண்டரை நாழிகைக்குமேல் பதினைந்துநாழிகைக்குள்ளாக லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை ரேவதிநக்ஷத்திரம் குருவாரமானால் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் கெதாயோகம் பலன்மத்திமம், கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள்ளாக உத்தியோகவேளையிலும் குருதினகால வோரையிலும் செய்ய உத்தமம்,

ஷை ரேவதிநக்ஷத்திரம் சுக்கிரவாரமானால் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் சித்தியோகப்பலன் சகலசித்தி, கௌரிபஞ்சாங்ககாலத்தில் பதினேழரைநாழிக்குமேல் பதினெட்டேமுக்கால் நாழிகைக்குள் லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்,

## உத்திர நட்சத்திரம்

ஜெனன தினம் டே-டோ-ப-பி-உத்திரநக்ஷத்திரமாக உடையவருக்கு அசுவனிநட்சத்திரம்உத்தமம். அதன்விபரம்தாராபலன்எட்டுக்குமைத்திரம் அதிபதிசுக்கிரன் வாகனம்கருடன்நாமதேயபலன் சிநேகம் அதிபதிபலன் சந்தோஷம்வாகனபலன் சுகவிருத்திசந்திரபலன் முதற்பாதமுடையவருக்கு ஒன்பதாஞ்சந்திரன் உத்தமம். இரண்டாம்பாதம் மூன்றாம்பாதம் நான்காம்பாத முடையவருக்கு

எட்டாஞ்சந்திரன் சுக்கிலபக்ஷம் உத்தமம், வாரத்தில் சோமவாரமா னல் அமிர்தயோகம், கதம்பேசமகாரிஷிசொல்லிய ஆனந்தாதியோ கத்தில் இராட்சசயோகம் பலன்மத்திமம். கௌரிபஞ்சாங்க காலத் தில் இரண்டரைநாழிக்குள்ளாக அமிர்தவேளையிலும் சந்திரன் தின காலவோரையிலும் செய்ய உத்தமம்,

ஷை அசுவினிநட்சத்திரம் குருவாரமானல் அமிர்தயோகம் ஆ னந்தாதியோகத்தில் மானசயோகம்பலன் இராஜசன்மானம்கௌரி பஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள்ளாக உத்தியோக வேளையிலும் குருதினகால வோரையிலும் செய்ய உத்தமம்

ஷை அசுவனிநட்சத்திரம் சுக்கிரவாரமானல் அமிர்தயோகம் ஆனந்தாதியோகத்தில் வச்சிரயோகம் இதன்பலன் கௌரிபஞ்சாங் க காலத்தில் பதினேழரைநாழிகைக்குமேல் பதினெட்டேமுக்கால் நாழிகைக்குள்ளாக லாபசுகவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரை யிலும் செய்ய உத்தமம்.

## அஸ்தநட்சத்திரம்

ஜெனனதினம்-பு-ஷ-ண-ட-அஸ்தநட்சத்திரமாக உடையவருக் கு ரேவதிநட்சத்திரம் உத்தமம் அதன்விபரம் தாராபலன் ஆறுக்கு சாதனதாரை அதிபதிசந்திரன் வாகனம் ஜம்புகம் நாமதேயபலன் காரியசாதனம் அதிபதிபலன் கீர்த்திவாகனபலன் சவுக்கியம்சந்திர பலன் ஏழுக்கு உத்தமம் வாரத்தில்சோமவாரமானல் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் மாதங்கயோகம் இதன்பலன்மத்திமம் கௌ ரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள்ளாகஅமிர்தவேளை யிலும் சந்திரன் தினகாலவோரையிலும்செய்ய உத்தமம் அல்லது பதினைந்துநாழிகைக்குள்லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோ ரையிலும் செய்ய உத்தமம்.

ஷை ரேவதிநட்சத்திரம் குருவாரமானல் சித்தயோகம் ஆனந் தாதியோகத்தில் மித்திரயோகம் பலன் ராச்சியலாபம் கௌரிபஞ் சாங்ககாலத்தில்இரண்டரைநாழிகைக்குள்உத்தியோகவேளையிலும் குருதினகால வோரையிலும்செய்யஉத்தமம். அல்லதுபதினேழரை நாழிகைக்குமேல் பதினெட்டேமுக்கால் நாழிக்குள்ளாக அமிர்தவே ளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை ரேவதிநட்சத்திரம் சுக்கிரவாரமானல் அமிர்தயோகம் ஆ னந்தாதியோகத்தில் ஸ்ரீவர்ச்சயோகம்பலன் இலட்சுமிலாபம்கௌ

பஞ்சாங்ககாலத்தில் ஏழரைநாழிக்குமேல் பதினென்றேகால் நாழிகைக்குள் அமிர்தவேளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்,

## சித்திரைநட்சத்திரம்

ஜெனனதினம்-பே-போ-ரா-ரி-சித்திரை நட்சத்திரமாக உடையவருக்கு உத்திரட்டாதிநட்சத்திரம் உத்தமம், அதன் விபரம்தாராபலன் நாலுக்குக்ஷேமம் அதிபதிகுரு வாகனம்யானைநாமதேயபலன் க்ஷேமதாரம் அதிபதிபலன் தைரியம் வாகனபலன் இலட்சுமிலாபம் சந்திரபலன்முதல் இரண்டுபாதத்துக்குள்ஜெனித்தவர்களுக்கு ஏழாஞ்சந்திரன் உத்தமம் மூன்றாம்பாதம் நாலாம்பாதம்உடையவர்களுக்கு ஆறாஞ்சந்திரன் உத்தமம் வாரத்தில் சோமவாரமானால்சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் கதாயோகம் இதன்பலன் மத்திமம்கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிக்குள் அமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் அல்லதுபனிரெண்டரை நாழிகைக்குமேல் பதினைந்துநாழிக்குள்ளாக லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் மனை முகூர்த்தஞ்செய்ய உத்தமம்.

ஷை உத்திரட்டாதி நட்சத்திரம் புதவாரமானால் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் லம்பயோகம் பலன் போஜனலாபம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் ஏழரைநாழிகைக்குமேல் பத்துநாழிகைக்குள் சுபவேளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை உத்திரட்டாதி நட்சத்திரம் குருவாரமானால்சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் சந்திரயோகம்பலன் சுபமுண்டாம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் காலை இரண்டரை நாழிகைக்குள் உத்தியோகவேளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்,

ஷை உத்திரட்டாதிநட்சத்திரம் சுக்கிரவாரமானால் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் துவஜயோகம்பலன்வஸ்துலாபம்கௌரிபஞ்சாங்ககாலத்தில் பதினேழரை நாழிகைக்குமேல் பதினெட்டேமுக்கால் நாழிகைக்குள் லாபவேளையிலும் சுக்கிரன் தினகால வோரையிலும் மனை முகூர்த்தஞ்செய்ய உத்தமம்.

## சுவாதிநட்சத்திரம்

ஜெனனதினம்-ரூ-ரே-ரோ-த-சுவாதிநக்ஷத்திரமாக உடையவருக்கு அத்தநக்ஷத்திரம் உத்தமம். அதன்விபரம்தாராபலன்எட்டுக்கு மைத்திரம் அதிபதிசுக்கிரன் வாகனம்கருடன் நாமதேயபலன் சிநே

கம் அதிபதிபலன் சந்தோஷம் வாகனபலன் சுகவிருத்தி சந்திரபல ன் பனிரெண்டுக்குமத்திமம் வாரத்தில் ஆதிவாரமானால் அமிர்த யோகம் ஆனந்தாதியோகத்தில் மானசயோகம் இராஜசன்மானம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குமேல் ஐந்துநா ழிகைக்குள்ளாக லாபவேளையிலும்சுக்கிரன்தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்

ஷை அஸ்தநட்சத்திரம் சோமவாரமானால் சித்தயோகம் ஆனந் தாதியோகத்தில் வச்சிரயோகம் பலன்மத்திமம். கௌரிபஞ்சாங்க காலத்தில் இரண்டரைநாழிகைக்குள் அமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை அஸ்தநக்ஷத்திரம் குருவாரமானால் சித்தயோகம் கதம்பேச மகாரிஷிசொல்லிய ஆனந்தாதியோகத்தில் இராட்சசயோகம்பலன் மத்திமம். கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிக்குள் உத்தி யோகவேளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்

ஷை அஸ்தநக்ஷத்திரம் சுக்கிரவாரமானால் அமிர்தயோகம்ஆனந் தாதியோகத்தில் அமிர்தயோகம் பலன் வஸ்திரலாபம் கௌரிபஞ் சாங்ககாலத்தில் பதினேழரை நாழிகைக்குமேல் பதினெட்டேமுக் கால் நாழிகைக்குள்ளாக லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோ ரையிலும் செய்ய உத்தமம்.

## விசாகநக்ஷத்திரம்

ஜெனனதினம்-தீ-து-தே-தோ-விசாகநட்சத்திரமாக உடைய வருக்கு உத்திரட்டாதி நட்சத்திரம் உத்தமம். அதன்விபரம் தாரா பலன் இரண்டுக்கு சம்பத்து அதிபதிபுதன் வாகனம் குதிரை காம தேயபலன் சம்பத்கரம் அதிபதிபலன் காந்தி வாகனபலன் அர்த்த லாபம் சந்திரபலன் மூன்றுபாதத்துக்குள் ஜெனித்தவருக்கு ஆறுஞ் சந்திரன் உத்தமம் பலன் சத்துருநாசம் நாலாம்பாதத்தில் செனித்த வருக்கு ஐந்தாஞ்சந்திரன் நிஷ்பலன் வாரத்தில் ஆதிவாரமானால் அ மிர்தயோகம் ஆனந்தாதியோகத்தில் ஸ்திரயோகம்பலன் தீர்க்கசித் தி. கௌரிபஞ்சாங்காலத்தில் இரண்டரைநாழிகைக்குமேல் ஐந்து நாழிகைக்குள்ளாக லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரை யிலும் செய்ய உத்தமம்.

ஷை உத்திரட்டாதி நட்சத்திரம் சோமவாரமானால் சித்தயோ கம் ஆனந்தாதியோகத்தில்சுபயோகம், கௌரிபஞ்சாங்ககாலத்தில்

இரண்டரைநாழிகைக்குள்ளாக அமிர்தவேளையிலும் சந்திரன் தின காலவோரையிலும் செய்ய உத்தமம்

ஷை உத்திரட்டாதி நட்சத்திரம்புதவாரமானல் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் லம்பயோகம் பலன் போஜனலாபம் கௌரி பஞ்சாங்ககாலத்தில் ஏழரைநாழிகைக்குமேல் பத்துநாழிகைக்குள் சுபவேளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை உத்திரட்டாதி நட்சத்திரம் குருவாரமானல் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் சந்திரயோகம்பலன்சுபமுண்டாம் கௌரி பஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள் உத்தியோக வேளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்,

## அனுஷநட்சத்திரம்

ஜெனனதினம்-௧-௱-௩-௫-அனுஷநக்ஷத்திரமாக உடையவருக்கு திருவோணநக்ஷத்திரம் உத்தமம் அதன்விபரம் தாரபலன்ஆறுக்குசாதனம் அதிபதி சந்திரன் வாகனம்ஜம்புகம் நாமதேயபலன்காரியசாதனம் அதிபதிபலன்கீர்த்தி வாகனபலன் சவுக்கியம் சந்திரபலன் மூன்றுக்கு உத்தமம், பலன் திரவியலாபம், வாரத்தில்சோமவாரமானல் அமிர்தயோகம் ஆனந்தாதியோகத்தில் சித்தயோகம் பலன் சகலசித்தி கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள் அமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும்செய்ய உத்தமம்,

ஷை திருவோணநக்ஷத்திரம் புதவாரமானல் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் சந்திரயோகம்பலன் சுபமுண்டாம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் ஏழரைநாழிகைக்குமேல் பத்துநாழிகைக்குள்ளாக சுபவேளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை திருவோணநக்ஷத்திரம் குருவாரமானல் சித்தயோகம்ஆனந்தாதியோகத்தில் துவஜயோகம்பலன்வஸ்துலாபம். கௌரிபஞ்சாங்ககாலத்தில் உதயமுதல் இரண்டரை நாழிகைக்குள்ளாக உத்தியோகவேளையிலும் குரு தினவோரையிலும் செய்ய உத்தமம்.

## கேட்டைநட்சத்திரம்

ஜெனனதினம்-ரோ-ய-யி-யு-கேட்டைநக்ஷத்திரமாக உடையவருக்கு அசுவனிநக்ஷத்திரம் உத்தமம் அதன்விபரம்தாரபலன் இரண்டுக்கு சம்பத்து அதிபதி புதன்வாகனம் குதிரை நாமதேயபலன்

சம்பத்காம் அதிபதி பலன் காந்தி வாகனபலன் அர்த்தலாபம் சந்திரபலன் ஆறுக்கு உத்தமம். பலன் சத்துருநாசம் வாரத்தில்சோமவாரமானால் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் இராக்ஷசயோகம் பலன் மத்திமம். கௌரிபஞ்சாங்ககாலத்தில் உதயமுதல் இரண்டரைநாழிகைக்குள்ளாக அமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை அசுவினி நக்ஷத்திரம் குருவாரமானால் அமிர்தயோகம் ஆனந்தாதியோகத்தில் மானசயோகம் பலன் இராஜசன்மானம்கௌரிபஞ்சாங்கவேளையில் இரண்டரைநாழிகைக்குள்ளாக உத்தியோகவேளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை அசுவினி நக்ஷத்திரம் சுக்கிரவாரமானால் அமிர்தயோகம் ஆனந்தாதியோகத்தில் வச்சிரயோகம் பலன்மத்திமம் கௌரிபஞ்சாங்கவேளையில் பதினேழரை நாழிகைக்குமேல் பதினெட்டேமுக்கால் நாழிகைக்குள்ளாக லாபவேளையிலும் சுபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

## மூலநட்சத்திரம்

ஜெனனதினம்-யே-யோ-ப-பி-மூலநக்ஷத்திரமாகஉடையவருக்கு திருவோணநக்ஷத்திரம் உத்தமம். அதன்விபரம் தாராபலன் நான்கிற்குக்ஷேமம். அதிபதிகுரு வாகனம்யானை நாமதேயபலன்க்ஷேமகரம் அதிபதிபலன் தைரியம் வாகனபலன் இலட்சுமிலாபம்சந்திரபலன் இரணடுக்கு சுக்கிலபக்ஷம் உத்தமம் வாரத்தில் சோமவாரமானால் அமிர்தயோகம் ஆனந்தாதியோகத்தில் சித்தயோகம்பலன் சகலசித்தி. கௌரிபஞ்சாங்ககாலத்தில் பதினைந்துநாழிகைக்குமேல் லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்யஉத்தமம்

ஷை திருவோணநக்ஷத்திரம் புதவாரமானால் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் க்ஷத்திரயோகம் பலன்சுபமுண்டாம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் ஏழரைநாழிகைக்குமேல் பதினொன்றேகால் நாழிகைக்குள்ளாக சுபவேளையிலும் குருதினகாலவோரையிலும்செய்ய உத்தமம்.

ஷை திருவோண நக்ஷத்திரம் குருவாரமானால் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் துவஜயோகம் பலன் வஸ்துலாபம்கௌரிபஞ்சாங்கவேளையில் இரண்டரை-நாழிகைக்குள்ளாக உத்தியோகவேளையிலும்குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

## பூராடநட்சத்திரம்

ஜென்னதினம்-பு-த-ப-ட-பூராடநக்ஷத்திரமாகஉடையவருக்கு ரேவதிநக்ஷத்திரம் உத்தமம். அதன்விபரம் தாராபலன் எட்டுக்கு மைத்திரம் அதிபதிசுக்கிரன் வாகனம்கருடன் நாமதேயபலன்சிநேகம், அதிபதிபலன் சந்தோஷம் வாகனபலன் சுபவிருத்தி சந்திரபலன் நாலுக்குரோகபயம், சுக்கிலபட்சம் உத்தமம் வாரத்தில் ஆதிவாரமானுல் அமிர்தயோகம், கதம்பேசமகாரிஷிசொல்லிய ஆனந்தாதியோகத்தில் வர்த்தமானயோகம், இதன்பலன் அதிகலாபம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் மூனேமுக்கால் நாழிகைக்குமேல் ஒன்னேகால் நாழிகைக்குள் லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலஹோரையிலும்செய்ய உத்தமம்.

ஷை ரேவதிநக்ஷத்திரம் சோமவாரமானுல் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் மாதங்கயோகம்பலன் மத்திமம். கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரை நாழிகைக்குள்ளாக அமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலஹோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை ரேவதிநக்ஷத்திரம் குருவாரமானுல் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் மத்திரயோகம் பலன் இராச்சியலாபம், கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள்ளாக உத்தியோகவேளையிலும் குருதினகாலஹோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை ரேவதிநக்ஷத்திரம் சுக்கிரவாரமானுல் அமிர்தயோகம் ஆனந்தாதியோகத்தில் ஸ்ரீவர்ச்சயோகம் பலன் லட்சுமிலாபம், கௌரிபஞ்சாங்ககாலத்தில் பதினேழரை நாழிகைக்குமேல் பதினெட்டேமுக்கால் நாழிகைக்குள்ளாக சுபசுகவேளையிலும் சுக்கிரன்தினகாலஹோரையிலும் செய்ய உத்தமம்,

## உத்திராடநட்சத்திரம்

ஜெனனதினம்-பே-போ-ஜ-ஜி-உத்திராடநக்ஷத்திரமாக உடையவருக்கு சதயநக்ஷத்திரம் உத்தமம், இதன்விபரம் தாராபலன்நான்கிற்குக்ஷேமம், அதிபதிபலன் தைரியம், வாகனபலன் இலட்சுமிலாபம், சந்திரபலன் உத்திராடநக்ஷத்திரம் முதற்பாகமாக வுடையவருக்கு மூன்றுஞ்சந்திரன்பலன் திரவியலாபம்உத்தமம். இரண்டாம் பாதமுதல் நாலாம்பாதவரையிலும் உடையவருக்கு இரண்டாஞ்சந்திரன்பலன் தனஹானி, சுக்கிலபக்ஷம் உத்தமம், வாரத்தில் சோமவாரமானுல் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் அமிர்தயோகம்

பலன் ஸ்திரலாபம் கௌரிபஞ்சாங்கவேளையில் பனிரெண்டரை நாழிகைக்குமேல் பதினைந்துநாழிகைக்குள்ளாக லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை சதயநக்ஷத்திரம் புதவாரமானால் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் மானசயோகம் பலன் இராஜசன்மானம், கௌரிபஞ்சாங்கவேளையில் மூணேமுக்கால் நாழிகைக்குமேல் ஒண்ணே கால் நாழிகைக்குளளாக அமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்,

ஷை சதயநக்ஷத்திரம் சுக்கிரவாரமானால் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் சௌமியயோகம் இதன்பலன் அர்த்தலாபம் கௌரிபஞ்சாங்கம், பதினேழரைநாழிகைக்குமேல் பதினெட்டே முக்கால் நாழிகைக்குள்ளாக லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

## திருவோணநட்சத்திரம்

ஜெனனதினம்-ஜா-ஜெ ஜோ-கா-திருவோண நக்ஷத்திரமாக உடையவருக்கு ரேவதிநக்ஷத்திரம் உத்தமம் அதன்விபரம் தாராபலன் ஆறுக்குசாதனம் அதிபதிசந்திரன், வாகனம் ஜம்புகம் நாமதேயபலன் காரியசாதனம். அதிபதிபலன் கீர்த்தி, வாகனபலன் சவுக்கியம் சந்திரபலன் மூன்றுக்கு திரவியலாபம் உத்தமம், வாரத்தில் ஆதிவாரமானால் அமிர்தயோகம் ஆனந்தாதியோகத்தில் வர்த்தமானயோகம் அதிகலாபம் கௌரிபஞ்சாங்க காலத்தில் இரண்டரைநாழிகைக்குமேல் ஐந்துநாழிகைக்குள் உத்தியோகவேளையிலும் சுக்கிரன் புதன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்

ஷை ரேவதிநக்ஷத்திரம் சோமவாரமானால் சித்தயோகம், கதம்பேசமகாரிஷிசொல்லிய ஆனந்தாதியோகத்தில் மாதங்கயோகம், பலன்மத்திமம். கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரை-நாழிகைகுள்ளாகஅமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை ரேவதிநக்ஷத்திரம் குருவாரமானால்சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் அமிர்தயோகம். பலன் இராச்சியலாபம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள்ளாக உத்தியோகவேளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை ரேவதிநக்ஷத்திரம் சுக்கிரவாரமானால் அமிர்தயோகம்ஆனந்தாதியோகத்தில் ஸ்ரீவர்ச்சயோகம், பலன் இலட்சுமிலாபம், கௌ

ரிபஞ்சாங்ககாலத்தில் பதினேழரை-நாழிகைக்குமேல்பதினெட்டே முக்கால்நாழிகைக்குள்ளாக லாபசுகவேளையிலும் சுக்கிரன் தின காலவோரையிலும்செய்ய உத்தமம்

## அவிட்டநட்சத்திரம்

ஜெனனதினம்-க-கி-கூ-கே-அவிட்டநக்ஷத்திரமாக உடையவருக்கு அசுவினிநக்ஷத்திரம் உத்தமம் இதன்விபரம் தாராபலன்ஆறுக்குசாதனம் அதிபதிசந்திரன் வாகனம் ஜம்புகம்நாமதேயபலன்காரியசாதனம் அதிபதிபலன் கீர்த்தி சவுக்கியம் சந்திரபலன் முதற்பாதம் இரண்டாம்பாதம் உடையவருக்கு நாலாஞ்சந்திரன்பலன்மத்திபம் மூன்றும்பாதம்நான்காம்பாதம் ஜனித்தவர்களுக்கு மூன்றுஞ்சந்திரன்பலன் உத்தமம். திரவியலாபம் வாரத்தில் சோமவாரமானல் சித்தயோகம் கதம்பேசமகாரிஷிசொல்லிய ஆனந்தாதியோகத்தில் இராட்சசயோகம் பலன்மத்திபம் கௌரிபஞ்சாங்க காலத்தில் இரண்டரைநாழிகைக்குள்ளாக உத்தியோகவேளையிலும், சந்திரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை அசுவினிநக்ஷத்திரம் குருவாரமானல்அமிர்தயோகம் கதம்பேசமகாரிஷிசொல்லிய ஆனந்தாதியோகத்தில் மானசயோகம் பலன் இராஜசன்மானம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள்ளாக உத்தியோகவேளையிலும்குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை அசுவினிநட்சத்திரம் சுக்கிரவாரமானல் அமிர்தயோகம், ஆனந்தாதியோகத்தில் வச்சிரயோகம், பலன்மத்திபம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் பதினேழரைநாழிகைக்குமேல் பதினெட்டேமுக்கால் நாழிகைக்குள்ளாக லாபசுகவேளையிலும், சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

## சதயநட்சத்திரம்

ஜெனனதினம்-கோ-ஸ-ஷி-ஸஉ- சதயநக்ஷத்திரமாக உடையவருக்கு ரோகணிநக்ஷத்திரம் உத்தமம். அதன்விபரம் தாரைஎட்டுக்குமைத்திரம்அதிபதிசுக்கிரன், வாகனம்கருடன், நாமதேயபலன்சிநேகம் அதிபதிபலன் சந்தோஷம் வாகனபலன் சுகவிருத்தி சந்திரபலன் நான்காஞ்சந்திரன் மத்திமம். வாரத்தில் சோமவாரமானல் அமிர்தயோகம், ஆனந்தாதியோகத்தில் வர்த்தமானயோகம், பலன்

அதிகலாபம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள் அமிர்தவேளையிலும்சந்திரன் தினகாலவோரையிலும்செய்யஉத்தமம்

ஷை ரோகணிநக்ஷத்திரம் புதவாரமானால் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் சுபயோகம், பலன் சுபப்பிரதம் கௌரிபஞ்சாங்க வேளை ஏழரைநாழிகைக்குமேல் இரண்டரைநாழிகைக்குள்ளாகசுபயோகத்திலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்,

## பூரட்டாதிநட்சத்திரம்.

ஜெனனதினம்-ஸே-ஸோ-தா-தி-பூரட்டாதிநட்சத்திரமாக உடையவருக்கு அசுவனிநட்சத்திரம் உத்தமம். அதன்விபரம் தாரைநாளுக்குக்ஷேமம். அதிபதிகுருவாகனம்யானை நாமதேயபலன்க்ஷேமகரம் அதிபதிபலன்தைரியம் வாகனபலன் இலட்சுமிலாபம் சந்திரபலன் மூன்றும்பாதம்வரையில் உடையவருக்கு மூன்றுஞ்சந்திரன் இதற்குப்பலன் திரவியலாபம் உத்தமம் நாலாம்பாதம் உடையவருக்கு இரண்டாஞ்சந்திரன்பலன் சுக்கிலபட்சம் உத்தமம் வாரத்தில் சோமவாரமானால் சித்தயோகம். ஆனந்தாதியோகத்தில் இராட்சசயோகம், பலன் மத்திமம். கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரை நாழிகைக்குள்ளாக அமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்

ஷை அசுவினிநக்ஷத்திரம் குருவாரமானால் அமிர்தயோகம்ஆனந்தாதியோகத்தில் மானசயோகம், பலன் இராஜசன்மானம்கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள் உத்தியோகவேளையிலும் குருதினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை அசுவினிநக்ஷத்திரம் சுக்கிரவாரமானால் அமிர்தயோகம், ஆனந்தாதியோகத்தில் வச்சிரயோகம்பலன் மத்திமம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் பதினேழரைநாழிகைக்குமேல் பதினெட்டே முக்கால் நாழிகைக்குகுள்ளாக சுபலாபவேளையிலும் சுக்கிரன்தினகால வோரையிலும் செய்ய உத்தமம்.

## உத்திட்டாதிநட்சத்திரம்

ஜெனன்தினம் து-ஜ-ஞ-த-உத்திரட்டாதிநக்ஷத்திரமாகஉடையவருக்கு அஸ்தநக்ஷத்திரம் உத்தமம், அதன்விபரம் தாராபலன்

கல்குசாதனம் அதிபதிசந்திரன், வாகனம்ஜம்புகம். நாமதேயபலன் காரியசாதனம், அதிபதிபலன்கீர்த்தி, வாகனபலம்சவுக்கியம் சந்திரபலன் ஏழுக்கு சவுக்கியம் கதம்பேசமுகாரிவழிசொல்லிய ஆனந்தாதியோகத்தில் மானசயோகம் பலன் இராஜசன்மானம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குமேல் ஐந்து நாழிகைக்குள்ளாக உத்தியோகலாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

மேற்படிஅஸ்தநக்ஷத்திரம் சோமவாரமானால் சித்தயோகம் ஆனந்தாதியோகத்தில் வச்சிரயோகம் பலன்மத்திமம். கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள்ளாக அமிர்தவேளையிலும் சந்திரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

மேற்படிஅஸ்தநக்ஷத்திரம்குருவாரமானால்சித்தயோகம்ஆனந்தாதியோகத்தில் இராட்சசயோகம் பலன் மத்திமம் கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள்ளாக உத்தியோகவேளையிலும் குரு தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

மேற்படி அஸ்தநக்ஷத்திரம் சுக்கிரவாரமானால்அமிர்தயோகம்ஆனந்தாதியோகத்தில் அமிர்தயோகம் பலன் ஸ்திரலாபம். கௌரிபஞ்சாங்ககாலத்தில் பதினேழரை நாழிகைக்குமேல் இருபதுநாழிகைக்குள் லாபவேளையிலும் சுக்கிரன்தினகால வோரையிலும் செய்ய உத்தமம்

## ரேவதிநட்சத்திரம்

ஜெனனதினம்-தே-தோ-ச-சி-ரேவதிநக்ஷத்திரமாக உடையவருக்கு அசுவினிநக்ஷத்திரம் உத்தமம். இதன்விபரம் தாராபலன் இரண்டுக்கு சம்பத்து, அதிபதிபலன், வாகனம்குதிரை நாமதேயபலன்-சம்பத்காம், அதிபதிபலன் காந்தி-வாகனபலன் அர்த்தலாபம் சந்திரபலன் இரண்டுக்கு சுக்கிலபட்சம் உத்தமம் வாரத்தில் ஆதிவாரமானால் சித்தயோகம். ஆனந்தாதியோகத்தில் ஆனந்தயோகம் பலன்-திரவியலாபம், கௌரிபஞ்சாங்ககாலத்தில் இரண்டரை நாழிகைக்குமேல் ஐந்துநாழிகைக்குள் உத்தியோக லாபவேளையிலும் சுக்கிரன் தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை ரேவதிநக்ஷத்திரம் குருவாரமானால் அமிர்தயோகம் ஆனந்தாதியோகத்தில் மானசயோகம் பலன் இராஜசன்மானம். கௌரி பஞ்சாங்ககாலத்தில் இரண்டரைநாழிகைக்குள் உத்தியோக வேளையிலும் குரு தினகாலவோரையிலும் செய்ய உத்தமம்.

ஷை ரேவதிநக்ஷத்திரம் சுக்கிரவாரமானால் அமிர்தயோகம், ஆனந்தாதியோகத்தில் வச்சிரயோகம் பலன் மத்திமம். கௌரிபஞ்சாங்ககாலத்தில் பதினேழரை நாழிகைக்குமேல் இருபதுநாழிகைக்குள்ளாக லாபவேளையிலும், சுக்கிரன் தினகாலவோரையிலும் வீடு-மனை - சுப முகூர்த்தம் இதுகள் அனைத்தையும் செய்யலாம் உத்தமம்.

## பொருத்தங்களின் விபரம்.

அவரவர்களுக்கு வேண்டிய நாமநக்ஷத்திரம், ஜெனனநக்ஷத்திரம் இதுகளைக்கொண்டு பொருத்தம்வைத்தபோதிலும் லக்கினம் சொல்ல விவரிக்கும் லக்கினம்தெரியவேண்டில் அந்தந்தகாலத்தில் தெரிந்துக்கொண்டு வைத்துக்கொள்ளவும். மேலும் இதில் சொல்லாத சுபநக்ஷத்திரங்கள் ஜெனனநாளுக்கு பொருந்தியிருந்தாலும் பார்த்துக்கொள்ளலாம், எல்லாமெழுத அடங்காது. இதுகளன்றியும் மனைமுகூர்த்தங்களுக்குமாத்திரமல்ல, மற்ற சுபமுகூர்த்தங்களுக்கும்செய்ய உத்தமம் சுபம்.

## சப்தகிரகங்களின் சூரியசாரம்.

பரணி பிற்பாதி - இரண்டுபோதமும், கார்த்திகை - நாலுபாதமும், ரோகணி-முதற்பாதமும், இந்த ஏழுபாதத்திலும் சூரியனிருக்க, வீடுகட்டினால் அக்கினிபயமுண்டாம்.

## அங்காரகசாரம்.

கார்த்திகை, பூசம், மகம், பூரம், அஸ்தம், மூலம், ரேவதி இந்த நக்ஷத்திரம் ஏழிலும், அங்காரகன் இருக்க வீடுகட்டினால், அக்கினிபயம், புத்திரஆனி இதுகளுண்டாம். இதேபிரகாரம் மீனம், கடகம், மகரம், சம்பூரணஜலராசி, கும்பம், ரிஷபம், அர்த்தஜலம். விருச்சிகம், துலாம், பாதிஜலராசி. கன்னி, மிதுனம், தனசு, நிர்ச்சலராசி. இதில் சம்பூர்ணஜலராசிக்கு உத்தமமான நக்ஷத்திரத்தில் சந்திரன், குரு, சுக்கிரன்பார்வையில் வீடுகட்ட எத்தனஞ்செய்தால் அங்காரகதோஷம் தேவையில்லை சுபந்தரும்.

## சல்லியவிருப்பிடத்தைக் கிருத்திகையைக்கொண்டு கூறுவதேபோல் மற்றெல்லாநாட்களையுங் கொண்டு கூறுவதென்றறிய.

கிருத்திகைமுதலாகக்கொண்டு அடைத்த முற்பகற்சக்கரத்திற் சந்திரன்நின்றநாளறையிலே சல்லியம்இருப்பனபோல அக்கிருத்திகையும் மற்றய ௨௭-நாட்களும்ஒருநாழிகைக்குஒவ்வொன்றாக உதிக்கும்,இயல்பிற்றாதலால்! அங்ஙனம் உதித்தரோகணிமுதலிய ௬-நாட்கள் முதலாகக்கொண்டு அடைக்கவேண்டிய முற்பகற்சக்கரத்திலும், மகம் முதலிய ௭-நாட்கள் முதலாகக்கொண்டு அடைக்கவேண்டிய பிற்பகற் சக்கரத்திலும், அனுஷம் முதலிய ௭-நாட்கள் முதலாகக் கொண்டு அடைக்கவேண்டியமுன்னிரவுசக்கரத்திலும், அவிட்டம் முதலிய ௭-நாட்கள் முதலாகக்கொண்டு அடைக்கவேண்டிய பின்னிரவுசக்கரத்திலும், சந்திரன்நின்றநாள் அறையிலே சல்லியம் இருப்பனவாகத் தெரிந்துகொள்ளப்படும்.

## சல்லியச்சக்கரமும் சல்லியவிருப்பிடமும் சல்லியவடைப்பும் நான்முதற்குறிப்புமென்றறிய.

கிழக்கு மேற்கு ௪-அறையும், தெற்கு வடக்கு ௭-அறையுமாக வரையப்படாநின்ற சல்லியச் சக்கரத்தின் அறை ௨௮-னுள்ளும் சந்திரன் நின்றநாளறையிலே சல்லியம் இருப்பனவாம். ஆதலால் அச்சந்திரன் நின்ற நாளறையை அறிவதற்குகிருத்திகை முதலாகக்கொண்டு அடைத்து வழங்கிவருகிற சல்லியச்சக்கரத்தைச் சாங்கோபாங்கமாகத்தானே தெரிந்துகொள்ளப்படும். அபிசித்து சேர்த்தெண்ணவே நாட்கள் ௨௮-ஆம்.

## சல்லியவிருப்பிடத்தை மேலேதன்னுதயநாட்களையுங்கொண்டுகூறியதேபோல் இராசிஉதயநாட்களையுங்கொண்டு கூறலாமென்றறிய.

இராசி ஒன்றிற்கு மும்மூன்றுநாட்கள் உடைத்தாதலால் உதித்தஇராசியினிடமாக உதித்தநாளை முற்பகற்சக்கரத்திலே கிருத்திகையை நிறுத்திவைத்ததுபோல நிறுத்தி அதனை அடைப்பினடை

வேதத்திற்குப்பின்னுள்ள மற்றய உள-நாட்களையும் அடைத்து சந்திரன்நின்ற நாளறையிலே சல்லியம் இருப்பனவாம் என்றுசொல்லப் படும்.

## சல்லியம் உண்டு இல்லை யென்பது உணர்த்தி

### ஆட்டினெலும்பு உண்டென்றறிய

கண்டங்களிலேநின்ற சுபக்கோட்களைப் பாபக்கோட்கள் கூடி நிற்கினும் நோக்கினும் சல்லியம் உண்டென்றும் கூடிநிற்றலும் நோக்கலும் இல்லையாகிற் சல்லியம் இல்லையென்றும் கண்டங்களிலே நின்ற சந்திரனை அங்காரகன் கூடிநிற்கினும் நோக்கினும் அங்காரகன்நின்ற நாளறையிலே ஆட்டினெலும்பு உண்டென்றும் சொல்லப்படும்.

### பாப்பாரெலும்பு பசுவெலும்பு அல்லது செங்கல் பொன் இவற்றுளோன்றுண்டென்றறிக

கண்டங்களிலேநின்ற சந்திரனைக் குருகூடிநிற்கினும் நோக்கினும் குருநின்றநாள் அறையிலே பார்ப்பாரெலும்புபசுவெலும்புஅல்லது செங்கல் பொன் இவற்றுள் ஒன்று உண்டென்றுசொல்லலாம்.

### விக்கிரகம் எருமையெலும்பு உண்டென்றறிய

கண்டங்களிலேநின்ற சந்திரனைச் சூரியன் கூடிநிற்கினும்நோக்கினும் சூரியன்நின்ற நாளறையிலே விக்கிரகம் உண்டென்றும் சனிகூடிநிற்கினும் நோக்கினும் சனிநின்ற நாளறையிலே எருமையெலும்பு உண்டென்றும் சொல்லலாம்.

### பாம்பாதல் புற்றாதல் பாம்பினெலும்பாதல்என்றறிய.

கண்டங்களிலே நின்ற சந்திரனை பாம்புகூடிநிற்கினும் நோக்கினும் பாம்புநின்ற நாளறையிலே பாம்பாதல் புற்றாதல் பாம்பினெலும்பாதல் உண்டென்று சொல்லப்படும்.

### நாயெலும்பு உண்டென்றறிய.

கண்டங்களிலே நின்ற சந்திரனை புதன்கூடிநிற்கினும் நோக்கினும் புதன்நின்றநாள் அறையிலே நாயெலும்பு உண்டென்றும் சுக்கிரன் கூடிநிற்கினும் நோக்கினும் சுக்கிரன்நின்ற நாளறையிலே வெள்ளியுண்டென்றும் சொல்லப்படும்.

## சல்லியசக்கரத்தின் அடைப்புவிதியு முற்பகல் பிற்பகல் முன்னிரவு பின்னிரவு ஆகிய இவற்றின் அடைப்பு நாட்களும்நாட்களின் நாழிகைகளும் இருந்துபார்க்கும் திசையுமென் றறிய.

கீழறை எ-னுள் முதலிலே இரண்டறைவிட்டு மூன்றும்அறை முதல் தெற்குநோக்கு மூன்றுஅறையும் அதற்கு மேலறைமுதல்வடக்குநோக்கி நான்கறையும் அதற்குமேலறைமுதல் தெற்கு நோக்கி ஐந்தறையும் அதற்கு கீழறைமுதல் கிழக்குநோக்கி ரெண்டறையும் உடனே வலம்சுழலத் தென்கீழறைமுதல் கஈ-அறையுமாக எண்ணி. முறையே முற்பகற்குக் கிருத்திகை முதலாகக்கொண்டு அடைப்பதாம். பிற்பகற்கு மகமும் முன்னிரவுக்கு அனுஷமும்பின்னிரவுக்கு அவிட்டமும் முதலாகக் கொண்டு அடைப்பதென்றும் ஒவ்வொரு நாட்கு நாழிகை ரெண்டே அரைக்கால் என்றும் சூரியன் வலமுற்றிருப்பதே இருந்துபார்க்கும் திசையென்றும் அறியப்படும். முற்பகற்கு மேற்குமுகமும், பிற்பகற்கு கிழக்குமுகமும், முன்னிரவுக்கு வடக்கு முகமும், பின்னிரவுக்குத் தெற்குமுகமும், இருந்து பார்க்குந் திசையாம். பிற்பகற்கு வடக்குமுகமும், முன்னிரவுக்குக் கிழக்குமுகமும் இப்படி என்று பட்சாந்திரங்களிலே சொல்லப் படுவனவும் சிலருளர்.

## சல்லியம் இருத்தலின் ஆழங்குறி யென்றறிய

சல்லியம் எவ்வெவ்கோட்களால் நியமிக்கப்பட்டனவோ அவ்வவ்கோட்களின் கதிர் எத்தனையுண்டோ அத்தனையும்காணுதலால் சாண் உ-கொண்டது முழமாம் என்கிறவகையிலே எண்ணிய வட்டம் முழமாகவும் சேஷித்துநின்றது, உள்ளபடியே சாணாகவும் கொண்டு நட்பாகூறி யுச்சம் பகைநீசத்திலே எறுவன குறைவனஅறிந்து இத்தனைமுழம் இத்தனைசாண் ஆழத்திலே இருக்கிறது என்று சல்லியம் இருத்தலின் ஆழம் குறிக்கப்படுஞ் சல்லியம் வினவின மனையின் அகலநீளங்களைத் தனித்தனியே சிறுகோலால் அளந்து அத்தொகை இரண்டினையும் ஒன்றிலே ஒன்றாகப்பெருக்கி உஅ - க்கு ஈந்தவட்டம் முழமாம் மீந்தசேஷத்தை கஉ-ற் பெருக்கி உஅ - க்கு ஈந்த வட்டம் சாணும் மீந்த சேஷத்தை ௬-ற் பெருக்கி உஅ - க்கு ஈந்தவட்டம் அங்குலமாம், இவ்வகையைக்கொண்டு முழமும்சாணும் அங்குலமும் எத்தனையாம் என்று அறிந்து இத்தனைமுழம் இத்தனைசாண் இத்தனை அங்குலமென்று சல்லியம் இருத்தலின் ஆழம் குறிக்கப்படும்.

## கூபச்சக்கரபலன்.

### விருத்தம்

நீர்காட்டுந் தலைமதனைப் பன்னிருகூ றுக்கி
நிகழ்த்துகின்ற ராசிதனைப் பிரமமேல் வைத்து
வார்காட்டும் வனமுலையாய் வலமிடமா யெண்ணி
மதிவெள்ளி யெவ்விடமோ வவ்விடத்தில் நீராம்
பார்காட்டும் பாம்பாகிற் பழங்கிணறு மென்க
பரிதிசனி செவ்வாயேல் நீரில்லை யென்க
சீர்காட்டும் புதனுகிற் கல்லென்று சொல்க
செம்பொன்னே லற்பசல மென்கமட மயிலே.

நீர் உண்டென்பது பொதுவிதியாக உணர்த்தி உடனே மடங்கா நீர் உண்டென்றும் கீழ்நீர் உண்டென்றும் பிரித்துஉணர்த்து மென்றறிய.

உதயம், ஆரூடம், நீர்க்கீழ், ஆனவை, ரிஷபம், கடகம், துலாம் விருச்சிகம், மகரம், கும்பம், மீனம், இவைகளாகில் நீர்உண்டென்றும் அவற்றிற் சந்திரன் சுக்கிரன் இவர்கள் நிற்கினும் அவற்றை நோக்கினும் மடங்காநீர் உண்டென்றும் புதன் குரு இவர்கள் நிற்கினும் அவற்றைநோக்கினும் கீழ்நீர் உண்டென்றும் சொல்லப்படும்.

மேல் உணர்த்திய மடங்கா நீரை வேறொருவகையி னுல்எடுத்துணர்ந்தி நீரின்மையையுங் கீழூற்று மேலூற்றுகளையுடன் உணர்த்து மென்றறிய

உதயம் ஆரூடம் நீர்க்கீழ் இராசிகளிற் பாம்புநிற்கினும், அவற்றைநோக்கினும், மடங்காநீருண்டென்றும், சூரியன் அங்காரகன் சனி இவர்கள்நிற்கினும் அவற்றைநோக்கினும் நீர் இல்லை யென்றும் நீர்க்கோட்கள் ஆரூடத்தில் நின்று நீரில்லாதகோட்கள் கவிப்பில் நிற்கிற் கீழூற்றென்றும், நீர்க்கோட்கள் கவிப்பில்நின்று நீரில்லாத கோட்கள் ஆரூடத்தில்நிற்கில் மேலூற்றென்றும் சொல்லப்படும்.

## மேலுணர்த்திய கீழூற்றுமேலூற்றுகள் மாறு படமாறு உணர்த்துமென்றறிய

பாம்பு உதயத்தில் நின்றவிடத்து நீர்க்கோட்கள் ஆரூடத்தில் நின்று நீரில்லாதகோட்கள் கவிப்பில் நிற்கில் மேலூற்றென்றும்நீர்க் கோட்கள் கவிப்பில்நின்று நீரில்லாதகோட்கள் ஆரூடத்தில் நிற்கில் கீழூற்றென்றும், இங்ஙனம் மாறுபடுத்திச் சொல்லப்படுவனவாம்.

## ஊற்றுகட்கு புறநடை உணர்த்துமென்றறிய

உதயம் ஆரூடம் நீர்க்கீழ் ஆனவை நீரிராசிகளாய் அவற்றில்நீர்க்கோட்கள் நிற்கில் மேலூற்றென்றும், நீரில்லாதகோட்கள் நிற்கில் கீழூற்றென்றுஞ் சொல்லப்படும்.

## மடங்கா நீர்கீழ்நீர் உணர்த்துமென்றறிய

கண்டங்களிலேநின்ற சந்திரனை குரு கூடிநிற்கினும் நோக்கினும் மடங்காநீர் உண்டென்றும் சுக்கிரன் கூடிநிற்கினும் நோக்கினும் கீழ்நீர் உண்டென்றும் சொல்லப்படும்.

## மேல்உணர்த்தியமடங்காநீரை வேறொருவகையால் எடுத்துணர்த்தி உடனேபழங்கிணறு உணர்த்துமென்றறிய

கண்டங்களிலே நின்ற சந்திரனை பரிவேடம்கூடி நிற்கினும் நோக்கினும், மடங்காநீர் உண்டென்றும் புதன் குருகூடிநிற்கினும் நோக்கினும், பழங்கிண றுண்டென்றுஞ் சொல்லப்படும.

## மேல்உணர்த்தியமடங்காநீரை வேறொருவகையால் எடுத்துணர்த்தி பழங்குழிகளும் ஓடையும் உணர்த்துமென்றறிய

கண்டங்களிலே சந்திரனாவது சுக்கிரனாவது நிற்கினும், அவற்றைநோக்கினும், மடங்காநீர் உண்டென்றும் இந்திரதனுசு, பரிவேடம், தூமம், நட்பம், இவர்கள்நிற்கினும், அவற்றை நோக்கினும், பழம் குழிகளாதல், ஓடையாதல், உண்டென்று சொல்லப்படும்.

## உப்புவரி கரைவலிவு நீர்த்தெளிவு இவைகளென

கண்டங்களிலே சூரியன் நிற்கினும் நோக்கினும் உப்புவரியென்றும், பரிவேடம்நிற்கினும் நோக்கினும் கரைவலிவு என்றும், சர்

திரன் சுக்கிரன் இவைகள் நிற்கினும் நோக்கினும் நீர்த்தெளிவுஎன்றும், சந்திரன் சுக்கிரன் அல்லாத மற்றயகோட்கள் நிற்கினும் நோக்கினும் நீர்த்தெளிவு இன்மையென்றுஞ் சொல்லபபடும்.

## வெள்ளுவரி கரையழிவு இடையூற்று கீழ்மோளை இவைகளென்றறிய

கண்டங்களிலே அங்காரகன் நிற்கினும் நோக்கினும் வெள் உவரியென்றும், புதன் நிற்கினும் நோக்கினும் கரையழிவு என்றும் அக்கண்டம் மிதுனம் கன்னி சிம்மம் இவைகளாகில் இடையூற்று என்றும் கீழ்மோளையென்றுஞ் சொல்லப்படும்.

## பெருநீர் மோளை கல் எலும்பு இவைகளென்றறிய

கண்டங்களிலே சனி பாம்பு இவைகள் நிற்கினும்நோக்கினும் பெருநீர் மோளையென்றும், குரு நிற்கினும் நோக்கினும் எலும்பு உண்டென்றுஞ் சொல்லப்படும்.

## கிணற்றின் ஆழக்குறியின்முதற்பங்கில்நீரும் நடுப்பங்கில்நீரும் கடைப்பங்கில் நீரும் உணர்த்தி எட்டுமுழத்திலேநீரும் பாறையடியில்நீரும் திப்பையடியில்நீரும் ஆகிய இவைகளென்றறிய

கிணற்றின் ஆழக்குறிப்பின் சந்திரனுக்கு முதற்பங்கில் நீரும் சந்திரனும் புதனுமல்லாத கோட்களுக்கு நடுப்பங்கில் நீரும், புதனுக்கு கடைப்பங்கில் நீரும், சூரியனுக்கு அ-முழத்தில் நீரும், கன்னியில் நின்ற பாம்பிற்கு பாறையடியில் நீரும், சனிக்குதிப்பையடியில் நீரும் சொல்லப்படும்.

## கிணற்றின் ஆழக்குறிப்பறிய

கீழ்நீரை எவ்வெவ்கோட்களால் நியமிக்கப்பட்டனவோ அவ்வவ்கோட்களின் கதிர்களும் மேற்படி கோட்கள் நின்றுள்ளவைஎந் தவிராசிகளோ அந்தந்த இராசிகளின் கதிர்களும் எத்தனையோ அத்தனையும் சாண்களாதலால் சாண்களை முழமாக்கி நின்றதை சாணுக்கொண்டு இத்தனைமுழம் இத்தனைசாணென்று கிணற்றினுழவத்தாட்சிகளையும் குறிக்கப்படும்.

## கீழ் நீர்வினவின் நிலத்தின்கண் உணர்த்துமென.

சூரியனுக்கு காடாம், அங்காரகன் சனி இவர்கட்கு முட்களாம், பாம்பிற்குத் தாழை புதல் புற்று இவைகளாம், சந்திரனுக்குவாழையாம், புதனுக்கு பலாவாம், குருவுக்கு தென்னை பனை கமுகு மா இவைகளாம், சுக்கிரனுக்கு கொடிகளாம்.

## கிணற்றின் அனுபவம் அறிவது

கீழ்நீர்க்காக இதுவரையிற்கூறிய இடங்களிற் சுபகோட்கள் நட்பாகஷி உச்சக்கோட்களாக நிற்கினும் நோக்கினும் கிணற்றையுடையான் அனுபவிப்பன், பாவக்கோட்கள் பகை நீச்சக்கோளாய் நிற்கினும் அவற்றைநோக்கினும் பிறர்அனுபவிப்பர், மேல்உணர்த்திய இடங்கள் சரவிராசிகளும் உபயவிராசிகளுமாக நிற்கினும்அவற்றை நற்பாகஷி உச்சம்பெற்ற சுபகோட்களது நோக்கம் உள்ளவிடத்து உடையான்நன்மைஅடைகுவன் என்றும், கிணற்றைத்தானே அனுபவிப்பன் என்றும், நோக்கமில்லாதவிடத்துதீமைஅடைகுவன் என்றும், கிணற்றைப்பிறர் அனுபவிப்பர் என்றும் சொல்லப்படும்,

## கிணறிருக்கும் திசையின்பலனை அறிவது

உடையவன் இருக்கும் வூருக்கும்மனைக்கும் கிணறானது கிழக்கு தென்கிழக்கு தெற்காகில் மக்களழிவாம், தென்மேற்காகில் அடிமைகளுண்டாம், மேற்காகிற் பயிர்கள் நோய்கொள்ளும், வடமேற்காகிற் குடும்பவிர்த்தியாம், வடக்காகில் தானியவிருத்தியாம்,வடகிழக்காகில் தனப்பிராப்தியுண்டாம், பிரமத்தானமாகில் லட்சுமிகடாக்ஷமுண்டாம்.

## விருவினன் நிலம்கீறுதலின்பலன்

கீழ்நீர்விருவினனை அந்நிலத்தைக்கீறிக் காட்டென்றளவிற்சிறுவிரலாற்கீறிற் பெண்பேறு உண்டாம், அணிவிரலாற்கீறிற் சம்பத்துண்டாம், நடுவிரலாற்கீறில் தேசசஞ்சாரம்வரும், சுட்டுவிரல்பெருவிரல்களாற்கீறில் பொல்லாங்குவிளையும்,

## கிணறுவெட்டத்தொடங்கும் மாதங்களின்பலன்.

கிணறெடுக்கமாதங்கள் சித்திரை, வைகாசி, ஆனி இவைகளாகிற் பெருநீருண்டாம் உத்தமமாம், ஆடி, ஆவணி இவைகளாகில் ஆற்

பதீருண்டாம் மத்திபமாம், மற்றய மாதங்களாகில் தீரின்மையாம் அதமமாம், இப்படியே கோட்களின் அமைவும் உண்டாகுதல் கண்டு உறுதிசொல்லப்படும்.

## வீட்டின்சாலை விபரமறிய

ஏற்றுகின்ற ஊரையும், எடுக்கின்ற மனையையும் சுஙு-அரையாக்கி நடு நாலரை பிரஸ்தானம் நாலுமூலை நாலரையும்போய் காக்கும். இந்தநான்கில் எட்டரையும் தேவர்கள் காவல்நின்ற சஅ-அரையும் கிழக்குமுதல் ஈசான்ய ஈருய் கிழக்கேசமயல்கட்டு, தென்கிழக்கே பசுத்தொழும், தெற்கே குப்பைதொட்டி, தென்மேற்கு தோப்பு, மேற்குஎருமைத் தொழும், வடமேற்கு நெல்குதிர்,வடக்கு போஜனசாலை, வடகிழக்கு நீர்ச்சாலை கிணறு. இப்படி மனைகளைக் கட்டினால் நற்பூவையாகிய மகாலட்சுமி பொருந்தியிருக்கும்படியான மனைகளாயிருக்கும்.

## அவரவர்கள் ஜெனித்தராசிக்கு வாசற்பொருந்தம்

இடபம், மிதுனம், கடகவிராசியிற் செனன மானவர்களுக்கு வடக்குவாயில் வீடும், சிங்கம், கன்னி, துலாம் இந்தராசிகளில்ஜெனனமானவர்களுக்கு கிழக்குவாயில் தெற்குவாயில்வீடும், விருச்சிகம், தனுசு, மகரம் இந்தராசிகளில் ஜெனனமானவர்களுக்கு தெற்குவாயில்வீடும், கும்பம், மீனம், மேஷம் இந்தவிராசிகளிற் ஜெனனமானவர்களுக்கு தெற்குவாயில்வீடும் கட்டினால் சுபங்கள் விசேஷமாக நடக்கும்.

## வீட்டுக்குத் தூண்நிறுத்த விவரமறிய

அவரவர்களுக்குண்டாகிய மனையின்நீளத்தை ஒன்பதுபாகஞ்செய்து நடுபாகத்தை மூன்றுகூறுசெய்து இதில் இரண்டுகூறு தெற்கேநீக்கிநின்ற ஒருகூறில் வாஸ்துநாபியென்று தெரிந்து கம்பம் நாட்ட உத்தமம்,

## வீட்டுக்கு வாயில்வகுத்த விவரமறிய

மனையின் அகலத்தை கூ-பாகஞ்செய்து இடதுபாகத்தில் ரு-கூறும், வலதுபாகத்தில் ரு-கூறுஞ்செய்து நின்றகூறு ஒன்றில் வாயில்வைக்க உத்தமம்.

## கதவுநிலைநிறுத்த விவரமறிய

வீடுகட்டகுறித்த முகூர்த்தங்களிலே சித்திரை வைகாசியிலே வடக்குவாயிலும், ஆடி ஆவணியிலே கிழக்குவாயிலும், ஐப்பசி கார்த்திகையிலே தெற்குவாயிலும், தை மாசியிலே மேற்குவாயிலும் நல்ல சுபமுகூர்த்தங்களிலே நான்கு வாயில்களுக்கும் நிலைநிறுத்த உத்தமம்.

## கதவினோசை விவரமறிய

தாள்-க-ரு-ரு-மாம் கதவுநிற்க பின்னும் கதவினோசைஎக்காளம்போலும் கழுதையின் ஓசைபோலும் செக்கினோசைபோலும் சப்திக்குமாகில் புத்திரபாக்கியமில்லை, மனையாள் மரணமடைவாள் தீமையைத்தரும், அல்லது தாளத்தின்ஓசைபோலும் யானையின் வோசைபோலும் சப்திக்குமாகில் உத்தமம், கரும்பாலையின் வோசைபோலும் சப்திக்குமாகில் புத்திரவிரோதம் பெண்பழி கொள்ளும் என்பதாம்.

## இதுவுமது

திறந்தகதவு தானேமூடிக்கொண்டால் அந்தவீட்டுக்குடையவனுக்கு பிராணபயமுண்டாம். அல்லது சப்தத்தோடு மூடிக்கொண்டால் வாசஞ்செய்ய மனிதரற்று மனைபாழாகும் திறந்தகதவு அசையாமல் நிலையில்நிற்கில் வீட்டிற்குடையவன் குடும்பத்துடன் வாழ்வான் என்பதாம்.

## வீட்டின்பக்கத்தில் நிற்கக்கூடியமரங்கள்

தெங்கு-பலா-வாழை-கமுகு-மாதளை-திராட்சி-வேம்பு-எலுமிச்சம்-முல்லை-மல்லிகை-தாதுமாதுளை-துளசி-கொன்றை-நாவல்-பவளமல்லிகை-மா-நாரத்தை-பன்னீர்ச்செடி இவைகள்முதலாகிய மரங்கள் வீட்டின்பக்கத்தில் நிற்பதுசுபம் என்பதாம்.

## வீட்டின்பக்கத்தில் நிற்கக்கூடாதமரங்கள்

புளியமரம்-அகத்திமரம்-நெல்லிமரம்-மிளகுமரம்-கூளாமரம்இலுப்பைமரம்-வில்வமரம்-அலரிமரம்-முருங்கைமரம்-வாகைமரம்ஏரண்டமரம்-மருதமரம்-பருத்திமரம்-பனைமரம்-எட்டிமரம்-காவல்மரம் எருக்குமரம் இவைகள்மனையில் இருக்குமாகில்,தாமரைமலரிலே

வீற்றிருக்கும்படியான இலட்சுமிதேவி வாசஞ்செய்யாமல் மூதேவி யானவள் வாசஞ்செய்து அந்தமனையைக் கெடுக்கும் என்பதாம்.

## மாடுமுதலானவைகொள்வல் அல்லதுகொடுத்தல்

திங்கள்-புதன்-வியாழன்-சனிவாரங்களும், துவிதியை-திருதியை-பஞ்சமி-சஷ்டி-சப்தமி-தசமி-எகாதசி-துவாதசி - திரயோதசி திதிகளும், அசுவினி-புனர்பூசம்-அஸ்தம்-சுவாதி-விசாகம்கேட்டை அவிட்டம் சதையம்-ரேவதி இந்தநக்ஷத்திரங்களும், மேஷம் - மிதுனம்-சிங்கம்-கன்னி-விருச்சிகம்-தனுசு-மகரம்-மீனங்களும், மாடு-ஆடு முதலானவைகள் கொள்ள கொடுக்க பட்டிகூட்ட இதுமுதலாகிய கருமங்களுக்கு உத்தமம்.

## இதுவுமது

இன்னும் அசுவினி உத்திரட்டாதிகளிற் குதிரையும், பூராடம் உத்திராடம்-சதையம் இதுகளில்யானையும், அஸ்தம் சுவாதியிற்பசுவும் எருமையும், திருவாதிரையில் உழவுமாடும், கார்த்திகை பூசத்தில் மேஷலக்கினத்தில் ஆடும் கொள்ளவும் கொடுக்கவும்உத்தமம்.

## சுவர்பிளப்பு அல்லது புத்துவிவரமறிய

கிழக்கில் சுவர்பிளக்கில் அவ்வீட்டில்வாழ்கின்றவர் நாசமடைவார், தேயுவில் அல்லல்உறுவர், தெற்கில் மரணமடைவார், நிருதியில் அழகுபெறுவர், மேற்கு அர்த்தஆனி, வடமேற்கில் சாவு, வடக்கில் அர்த்தலாபம், ஈசான்யம் ஸ்ரீமரணமென்றுஎட்டுதிக்குகளுக்கும் பலனறிவது.

இன்னம்புத்தெடுக்கில் அகத்தில்நடு, பிரமஸ்தானம்சாவு, கிழக்குசெல்வம், அக்கினிமனைபீடிக்கும், எமன்துக்கம், நிருதிஇலட்சுமிகரம், வருணன் புத்திரலாபம், வாயு சத்துருஉண்டாகும், குபேரன்நன்மை, ஈசானம் வியாதியென்று சொல்லப்படும்.

## ஜென்மநக்ஷத்திர மரங்களின்விவரமறிய

அசுவினி-காஞ்சிரம், பரணி-நெல்லி, கார்த்திகை-ஆத்தி, ரோகணி-நாவல், மிருகசிரம்-கருங்காலி, திருவாதிரை-சண்பகம், புனர்பூசம்-புன்னை, பூசம்-ஆல், ஆயில்யம்-பாகை, மகம்-அரசு, பூரம்-விளா, உத்திரம்-பலா, அஸ்தம்-எருக்கு, சித்திரை-மாதளை, சுவாதி-வில்வம், விசாகம்-மருது, அனுஷம்-தாழை-கேட்டை-மகிழ், மூலம்-

மூங்கில், பூராடம்-தேமா, உத்திராடம்-வஞ்சி, திருவோணம்-பலாசு அவிட்டம்-வன்னி, சதயம்-கடம்பு, பூரட்டாதி-புளி, உத்திரட்டாதி வேம்பு, ரேவதி-இலுப்பை, இந்த இருபத்தேழுநாளின் பேரானபடியால் தன்நக்ஷத்திரமரங்களை தான்வெட்டச் சொல்லக்கூடாது. அப்படி அல்லவென்றுவெட்டினால் தன்னைவெட்டினதுபோல ஆகும், தன்நக்ஷத்திரங்களைவெட்டாமல் பூசைபண்ணிக்கொண்டுவரவும் சுபம்.

## காலற்றநாள், தலையற்றநாள், இடையற்றநாள் முழுநாள், இவைகளின் பலனறிய

கார்த்திகை, உத்திரம், உத்திராடம், காலற்றநாள். மிருகசீரிஷம், சித்திரை, அவிட்டம், உடலற்றநாள். புனர்பூசம், விசாகம், பூரட்டாதி, தலையற்றநாள். இந்நாட்களில் மனைகோலினும், வழிநடக்கினும், மரணமாகும். விவாகஞ்செய்யில் அந்தப்பெண்விதவையாவாள். இந்தநாட்களைக்குறித்து கற்றுணர்ந்தபெரியோர்கள் இனி எந்தநூலிலாவது இதற்குச்சமாதானமாகச்சொல்லி இந்தவிதியைத் தவிழ்ந்து நடத்துவராயின் நலமில்லையென மூதோர்சொல்லுவர் ஆதலால் இந்தநாட்களை நீங்கி மற்ற பரணி, அசுவனி, ரோகணி, திருவாதிரை, பூசம், ஆயில்யம், மகம், அஸ்தம், சோதி, அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், திருவோணம், சதயம, உத்திரட்டாதி, ரேவதி, இப்பதினெட்டுநாளும் முழுநாளாதலால், இந்நாட்களில் அவரவர்களுக்குப் பொருந்தியநாட்களில் மனைகோலல் முதலியசுபகாரியஞ்செய்ய உத்தமம்.

## மேல்நோக்குநாள் விவரமறிய

மேல்நோக்குநாளென்னும் ஊர்த்தமுகநக்ஷத்திரங்களாகிய ரோகணி, திருவாதிரை, பூசம், உத்திரம், உத்திராடம், திருவோணம் அவிட்டம். சதயம், உத்திரட்டாதி, ஆகிய இவ்வொன்பது நக்ஷத்திரங்களிலும் பட்டாபிஷேகம் உத்தியோகம், இராஜதெரிசனம் வியாபாரம் கிரையவிக்கிரையம், ஆபரணம், வாசக்கால், தூண், துவசம், தோப்பு முதலியவைகள்செய்ய விர்த்தியாகும் உத்தமபலன்.

## பக்கநோக்குநாள் விவரமறிய

பக்கநோக்குநாளென்னும்திரியங்கமுகநக்ஷத்திரங்களாகியஅசுவனி, மிருகசீரிஷம், புனர்பூசம், அஸ்தம், சித்திரை, சுவாதி, அனு

ஷம், கேட்டை, ரேவதியாகிய இவ்வொன்பதுநக்ஷத்திரங்களிலும் பயிர்வைக்க பசு, எருது, எருமை, குதிரை, ஒட்டை, யானைமுதலி யதுகள் வாங்கவும், விதைவிதைக்கவும், யாத்திரைமுதலியவைகள் செய்யவிர்த்தியாகும் உத்தமபலன்.

## கீழ்நோக்குநாள் விவரமறிய

கீழ்நோக்குநாளென்னும் அதோமுகநக்ஷத்திரங்களாகிய பரணி கார்த்திகை, ஆயிலியம், மகம், பூரம், விசாகம், மூலம், பூராடம், பூரட்டாதியாகிய இவ்வொன்பது நக்ஷத்திரங்களிலும் கணக்கு அப்பியாசிக்கவும், கிணறு, குளம், அகழி, ஓடை, களஞ்சியம், செய்விக்கவும் புதையல்போடவும் கிழங்குமுதலானவைகள் நடவும் விர்த்தியாகும் உத்தமபலன்.

## குளிகன் அறியவிபரம்

எந்தக்கிழமையில் குளிககாலம்பார்க்கவேண்டுமோ அந்தக்கிழமைமுதலாக சனிக்கிழமைவரையிலும் கணக்கெண்ணிதொகையை வந்த மூன்றேமுக்காலிற் பெருக்கி கண்டதொகையை குளிககாலமாக்கிக்கொண்டு மனைகோல, ஊர்குடிஏற்ற முகூர்த்தக்கால்நாட்ட வாகனங்களேற, தானியங்கள் இருப்புகட்ட மெத்தவும் உத்தமமாகும் என்பதாம்.

ஒரமுகூர்த்தம்வைத்து சோமவாரத்திலுதையத்தில் கால் நாட்டி புதவாரமுதையத்தில் கைவளையல்கள் முதலானதுகளைப்பூட்டி வெள்ளிக்கிழமையுதயத்தில் ஓடியாத்திவியாழக்கிழமைஉதயத்தில் குடிபுகுந்தால் சத்துருக்களாலே நெருப்பிட்டுக் கொளுத்தினாலும் அந்தவீடுவெந்துபோகாது அந்தவீட்டில் குடியிருப்பவர்கள் இந்திரனைப்போல சகலபோக்கியங்களையும் அடைவார்கள் என்பதாம்,

## லக்கினத்தியாச்சிய விவரமறிய

மேஷம், ரிஷபம், கன்னி, தனுசு, முதலில் அரைநாழிகையும் கடகம், விருச்சிகம், மகரம், மீனம், அந்தத்தில் அரைநாழிகையும் மிதுனம், சிங்கம், துலாம், கும்பம், மத்தியில் அரைநாழிகையும் தியாச்சியமாம், அந்ததியாச்சியவேளைகளில் யாதொரு சுபகாரியமுஞ் செய்யலாகாது என்பதாம்.





உ

சிவமயம்.

# தேவாலயச் சிற்பம்.

## திவ்விய தளவிமானஞ்செய்கிறதற்கு

## கௌவடியங்கொள்ள விபரம்.

கிராமத்துக்கும் பிரபுவுக்கும் ஆயாதியில்பொருந்தினபிரஸ்தாரகக்காலப்பிரவாய் அகலத்தை ஆறுகூறுசெய்து கனக்கூடுபங்கு-க அகாரைப்பங்கு-௪, கர்னக்கூடு பங்கு-க, ஆகபங்கு ௬-ம் சரி.

அகலங்கண்ட நீளம் வானமுதல் பிரகாரமட்ட வுயரங்கொள்வது. கல்காரவுயரத்தைப் பனிரண்டு கூறுசெய்து அதிஷ்டானங்கூறு-௩. கால் உயரங்கூறு-௬, பிரஸ்தாரங்கூறு-௩, ஆககூறு ௧௨-ம் சரி.

அதிஷ்டானஉயரத்தை இருபத்துநான்குகூறுசெய்து செகதிகூறு-அ, குமுதகங்கூறு-அ. பட்டியல்கூறு-அ, ஆககூறு -உ௪ம்சரி

காலுயரத்தையெடுத்து எழுகூறுசெய்து ஒருபங்கு வேதியனுயரங்கொள்வது.

காலுயரத்தை மூன்றுகூறுசெய்து இருகூறுபெருங்கால்சமன்மட்டம். மேலொருகூறு தாடி குடம் பலகை வீரகண்ட போதியல்மட்டம். இந்தஒருகூறையும் இருபத்துநான்கு கூறுசெய்து தாடிகூறு-௨, வயிறங்கம்கூறு-க, குடம்கூறு-௪, வயிறங்கம்கூறு - க பலகைகூறு ௬, வீரகண்டம் கூறு ௫, போதியல்கூறு-௫, ஆககூறு உ௪-ம் சரி.

## சிறுகால்அகாரச்சாலை அந்திரைக்கால்கள்விபரம்.

காலுயரத்தை இருபங்குபண்ணி ஒருபங்கு சிறுகால் கால்சமன்மட்டம், மேலொருபங்கை இருபத்துமூன்று கூறுசெய்துதாடிகுடம்பலகை கூறு-எ, வீரகண்டம் கூறு-௪, சித்து உத்தரம் கூறு-க, கபோதகம் கூறு-௪, வியாளம் வேதியல் கழுத்துகூறு - எ, ஆககூறு உ௩ ம் சரி.

பிரஸ்தாரம் இருபத்தொரு கூறுசெய்து உத்திரம் எழுதகம் கூறு-அ, கபோதகம்கூறு-எ, வியாளம்கூறு-௬, ஆககூறு உக - ம் சரி.

செங்கல்வேலைக்கு கால்பிரவாய் அகலத்தையெடுத்து ஒன்று க்கு ஒன்றரையுயரங்கொள்வது. இந்தவுயரத்தை பதினாறுகூறு செய்து கர்னக்கூடுமட்டம் கூறு-௫, பிரஸ்தாரங்கூறு-உ, வேதியல் கூறு-க, கழுத்துக்கூறு-உ, பண்டிகைக்கூறு சாற ஸ்தூபி-கற, கஆ கூறு-க௬ ம் சரி.

கர்னக்கூடு உயரத்தை ஒன்பதுகூறுசெய்து வேதியல்கூறு-க காலுயரங்கூறு-கற, தாடி குடம் பலகை வீரகண்டம் கூறு-க, உத்திரம் கபோதகம் வியாளம்கூறு-கற வேதியல்கழுத்து சித்து உத்திரம்கூறு-கவ, தூக்கோடு பண்டிகை பலகை கூறு-உஅ, ஆக-கூறு கூ-ம் சரி.

பிரஸ்தா ரவுயரத்தை இருபதுதொரு கூறுசெய்து உத்திரங் கூறு-அ, கபோதகம்கூறு-எ, வியாளம்கூறு-௬ ஆக கூறு-உகம் சரி.

வேதியலுயரத்தை எழுகூறுசெய்து கண்டம்கூறு-௩, கம்பு கூறு-க, எழுதகம் கூறு -க, தலையிடை கூறு-க, மேற்கம்பு கூறு-க ஆககூறு எ-ம் சரி.

கழுத்துயரத்தையெடுதது இருகூறுசெய்து ஒருகூறு காலுயரம், ஒருகூறு உத்திரம் கம்பு தலைமேல்மட்டம் சரி.

பண்டிகையுயரத்தைப்பத்துகூறுசெய்துதூக்கோடுகூறு-க, கையுருவிக்கூறு-௨, கவுந்தபற்பம் கூறு-௨ பணடிகைகூறு-௫, மாலைக் கட்டு கூறு-வ பலகைகூறு-அ மகாபற்பம் கூறு-உ, ஆககூறு-க௦-ம் சரி,





உ

பரமபதி துணை.

# விக்கிரகச் சிற்பம்.

## பாலகணபதிக்கு

தேங்காய் ஒருகை, மாம்பழம் ஒருகை, வாழைப்பழம் ஒருகை பலாப்பழம் ஒருகை, கரும்பு ஒருகை, மோதகம் ஒருகை, ஆககை சு பாலசூரியனைப்போல் வர்னம்.

## தனுர் கணபதிக்கு

இடதுகைகளில் ஒருகைபாசம், ஒருகைவிளாம்பழம், ஒருகை நாவற்பழம், வலதுகைகளில் அங்குசம் ஒருகை, எள்ளுருண்டை ஒருகை, மோதகம் ஒருகை, ஆககை சு, இரத்தவர்னம்.

## பக்தி கணபதிக்கு

இடதுகை வாழைப்பழம்-பரமானம், வலதுகை தேங்காய்-வெல்லம், துதிக்கையில் மாம்பழம். வெள்ளைவர்னம்.

## வீர கணபதிக்கு

வலதுமேற்கை அங்குசம் கத்தி வேதாளம், ஸ்தூலகணபதிக்குமோதகமும், இடதுகையில் கமண்டலமும், வலதுமேற்கையில் ருத்திராக்கமாலையும் தண்டும் வெள்ளைவர்னம்.

## பிங்கள கணபதிக்கு

வலதுகை மேற்கையில் பரசு, கீழ்க்கையில் கொம்பு, இடதுகை மேற்கையில் கருப்பந்தடி, கீழ்க்கையில் மாம்பழம், துதிக்கையில் மோதகம், குங்குமவர்னம்.

## உச்சிட்ட கணபதிக்கு

வலதுகைமேற்கை யில் பானு, கீழ்க்கையில்ருத்திராக்கம்,இடதுகைமேற்கையில் வில்லும், கீழ்க்கையில் நெற்கதிரும், துதிக்கையை யோனிக்குள்வைத்து வல்லபையை மடியில்வைத்து இருப்பது வல்லபைக்கு வலதுகையில் தாமரைப்புஷ்பம் எடுத்துதொடையில் போட்டது, (விக்கினேஸ்பரனுக்கு) வலதுகையில் அங்குசம்தந்தம் இடதுகையில் பாசம் வாள் இரத்தவர்னம்.

## க்ஷிப்ர கணபதிக்கு

வலதுகைமேற்கை அங்குசம், கீழ்க்கை தந்தம், இடதுகைமேற்கை பாசம், கீழ்க்கைகட்கம், துதிக்கையில்கலசம்,குங்குமவர்ணம்.

## ஏரம்ப கணபதிக்கு

ஐந்துமுகம், வலதுகைகளில் அங்குசம்-அட்சமாலை- பாசம்-கொம்பு-அபயம், இடதுகைகளில் பாசம்-ரத்தினகலசம்- திரிசூலம் தாமரைப்பூ-வரதம்வந்தினது-சிங்கவாகனம் பத்துக்கைகள், வெள்ளைவர்னம்.

## லட்சுமிகணபதிக்கு

வலதுமேற்கையில் அங்குசம்-மாதுளம்பழம்-பாணம்-சூலம்அம்மனையணைத்தகையொன்று, இடதுமேற்கையில் பாசம்-இரத்தின கலசம்-தாமரைப்பூ-வில்-வல்லபையை மடியில்வைத்து அணைத்த கையொன்று, ஆககைகள் ௧0, வலதுபுரம் இலட்சுமி, ஒருகைதாமரைப்பூவும், ஒருகைவரதமும், இடதுபுரம்வல்லபை, ஒருகை அபயமேந்தினதும், இரத்தினவர்னம்.

## மகா கணபதிக்கு

வலதுமேற்கையில் அங்குசம்-அம்பு-தண்டு-சக்கரம்- மாதுளம் பழம்-கொம்பு, இடதுமேற்கையில் பாசம்-வில்-தாமரைப்பூ -இரத்தினகலசம்-நெற்கதிர்-வல்லபையை அணைத்தகையொன்று, துதிக்கையுடன் பதிமூன்றுகைகள், வெள்ளைவர்னம்.

## புவன கணபதிக்கு

வலதுமேற்கை சக்கரம்-புஷ்பபாணம்-அங்குசம்-கொம்பு,இடதுமேற்கை சங்கு-கரும்புவில்லு-பாசம்-கண்டகோடாலி, இரத்தின வர்னம்.

## நிர்த்தன கணபதிக்கு

வலதுகையில் அங்குசமும் தந்தமும், இடதுகையில் பாசமும் கோடாலியும், துதிக்கையில் பணியாரம்.

## ஞானசத்திதரருக்கு

வலதுகையில் சத்தி, இடதுகையில்வச்சிராயுதம்,முகம்ஒன்று இரத்தினவர்னம்.

## தண்டாயுதபாணிக்கு

வலதுகை தடியூன்றிநிற்றல், இடதுகை தொங்கவிட்டுத்தொடையைத்தொடப்பட்டது, உச்சிதமாய்நின்றவர் கோவணங்கட்டல், ருத்திராக்கமாலை இரத்தினவர்னம்.

## சேனாதிபதி ஆறுமுகத்துக்கு

விசித்திரமான ரத்தினவர்னம், வலதுமேற்கையில் சத்தி-கத்தி-அங்குசம்-பாணம்-தண்டு-அபயமும், இடதுமேற்கையில்வச்சிராயுதம், கேடகம், பாசம், சேவற்கொடி, தாமரைப்பூ வாதமும்ஏந்தினது.

## சுப்பிரமணியருக்கு

ஒருமுகம் நாலுகை தங்கவர்னமுடையவர், அதில்வாகனம்-உநேத்திரமும் வலதுமேற்கையில் சத்தி தனதுகையில் அபயம், இடதுமேற்கையில் சேவற்கொடி தனதுகையில் வாதமேந்தினது, குங்குமவர்னம்.

## சரவணேற்பவருக்கு

ஆறுமுகமும் பன்னிருகரமும் பன்னிருகண்ணுமுடையவர்வலதுமேற்கை, சத்தி, பாணம், சேவற்கொடி, தண்டு, கத்தி, அபயமேந்தினது. இடதுமேற்கை, வச்சிராயுதம், வில்லு, மணி, தாமரைப்பூ கேடயம் வாதமேந்தினது.

## குமாரருக்கு

வலதுமேற்கை கத்தி தாமரைப்பூ, இடதுமேற்கை கேடயம் சேவற்கொடி.

## சண்முகனுக்கு

வலதுமேற்கையில் சத்தி, பாணம், சேவற்கொடி, தண்டு கத்தி அபயம், இடதுமேற்கையில் வச்சிராயுதம், வில்லு, தாமரைப்பூ, சூலாயுதம், கேடயம், வரதம், வடக்குமுகமாக வாகனம், மயில்இரத்தவர்னம்.

## தாருகாரியானுக்கு

ஆறுமுகமும் பன்னிருகரமுமுடையவர் வலதுமேற்கையில், பாணம், அங்குசம், சேவற்கொடி, கத்தி, உலக்கை, அபயமும், இடதுமேற்கையில், வில்லு பாசம், தாமரைப்பூ, கேடயம், சத்திவாதமுமேந்தியது.

## பத்திரகாளிக்கு

நாலுகையும் மூன்றுநேத்திரமும் பாம்பினாலே ஆபரணமும் சிரசிலக்கினிச்சுவாலையும் மகிடாசூரனைக் காலிலேபோட்டு உதைத்துச் சூலத்தினாற் குத்தினபாவனையாகவும் வலதுகையிற் சூலமும பக்கக்கையிற் பாசமும், இடதுகையிற் கபாலமும் பக்கக்கையில் டமரகமுமேந்தியது.

## விக்கிரகஞ்செய்ய லக்ஷணம்.

சிலாவினாலும், தாம்பிரத்தினாலும், சுதையினாலும், சித்திரத்தினாலும், தந்தத்தினாலும், மரத்தினாலும், விக்கிரகஞ் செய்யப்பட்ட லட்சணத்தைச் சொல்லுகிறோம்.

பாதாதி யுச்சிபரியந்தம் பொருந்தியவுயரத்தை ௧௨௦-கூறுசெய்து அடியிற்கண்டவாறு பங்கிட்டுக்கொள்ளவும்.

| | | | |
|---|---|---|---|
| லாடங் கூறு | ௪ | மெட்டிரங்கூறு | ௧௩ |
| முகங் கூறு | ௧௩ | உள்ளல் கூறு | ௨௬ |
| கண்டங் கூறு | ௪ | சரணங் கூறு | ௪ |
| இருதயங் கூறு | ௧௩ | சங்கங் கூறு | ௨௬ |
| நாபிகூறு | ௧௩ | நாவிகை கூறு | ௪ |

ஆககூறு ௧௨௦ம் சரி

முகப்பரப்பு கூறு ௧௩, கழுத்துப்பரப்பு கூறு-௧௦, வாகுபரப்பு கூறு ௩[illegible], தேயப்பரப்பு கூறு-௨௦, வயிறுபரப்பு கூறு ௧௩, கடிகைபரப்பு கூறு ௨௬, உறப்பரப்பு கூறு ௧௩, சாலுபரப்புகூறு ௭, சங்கைபரப்பு கூறு ௬, கொண்டைபரப்பு கூறு ௪.

விக்கிரகத்தினுடைய அங்கமானங்கண்டதை ௧௨௪பங்குபண்ணி யதில் ஒருபங்கு அங்குலமென்றறியவும், அந்த அங்குலத்தை எட்டுப்பங்கு பண்ணில் ஒருபங்கு ஒருயவையென்றறியவும், இந்த அங்குலத்தினாலும், யவையினாலும், விக்கிரகத்தினுடைய உயரத்தையும், அகலத்தையும் சுற்றளவையுஞ் சொல்லுகிறோம்.

லாடம்பங்கு ௪, யவைபங்கு ௩, லாடத்தைப்பற்றி நெற்றிப்பிறையேந்தி மட்டாக்கி பங்கு ௪, யவைபங்கு ௩, நெற்றிப்பிறையந்தத்தைப்பற்றிப் புடாந்தனம் அளவுபங்கு ௪, யவைபங்கு ௩, புடாந்தத்தில் நின்று அனலாந்தம் மட்டாக்கி பங்கு ௪, யவை ௩, அனலாந்தத்தைப்பற்றிக் கீழ்ப்புடை பங்கு ௧, கழுத்துப்பங்கு ௩,

யவை பங்கு 7, இரக்காசூத்திரத்தில் நின்று இருதயம் மட்டாக்கி பங்கு 13, யவை 3, இருதயத்தில்நின்று நாமம் மட்டாக்கி பங்கு 13, யவை-3, மேஷ்டிரமூலத்தைப்பற்றித் தொடைநீளம் பங்கு-27, முழங்கால்பங்கு-4, முழங்காலைப்பற்றிக் கணைக்கால்வரை பங்கு 27, பாதம்பங்கு4, இது விக்கிரகத்தினுடைய அங்கமான வுயரத்துக்குச் சொன்னோம்.

அங்குஷ்டபாணிபரியந்தம்நீளம்பங்கு - 17, இரக்காசூஸ்திரத்தைப்பற்றி முழங்கைமட்டாக்கி பங்கு-27, முழங்கை பங்கு 2 முழங்கையில்நின்று மணிப்பந்தம் மட்டாக்கி பங்கு 21, மணிப்பந்தத்தில் நின்று மத்திபமங்குலி அங்குசமட்டாக்கி கைத்தலங்கீழ்ப் பங்கு கஙு, முகத்தில்விஸ்தாரம பங்கு 12. கழுத்துவிஸ்தாரம்பங்கு 9, இரண்டுவாகு நடுவிஸ்தாரம் பங்கு 41, இரண்டுஸ்தன்யத்துக்குக்கீழ் விஸ்தாரம் பங்கு 21, அதன்கீழ் மத்திய வுதரவிஸ்தாரம் பங்கு 16, நாபி அருகுக்குவிஸ்தாரம் பங்கு 21, அதன்கீழ் ரோணி விஸ்தாரம்பங்கு 13½, தொடைநடுவிஸ்தாரம் பங்கு 12, சிறுதொடைவிஸ்தாரம் பங்கு 8, முழங்காலுக்கீழ் விஸ்தாரம் பங்கு 6½ நடுக்கை விஸ்தாரம் பங்கு 4½, காட்டு விஸ்தாரம் பங்கு 5, பெருவிரல்நீளம் பங்கு 4. பாதம் பங்கு 4½, காட்டுவிஸ்தாரம் பங்கு 5 விசாலவிஸ்தாரப்பரப்பு பங்கு 6½, காட்டில் அருகுபொத்தவிஸ்தாரம் பங்கு 2, யவை 1, நகவிஸ்தாரம் பங்கு 1, நகத்தில் ஆயாமம் பங்கு 1 யவை 1, நீண்டவிருத்தமாகப் பண்ணுவான். காலிற் பாததற்சனி விரல் நீளம் பங்கு 4, யவை 3, மத்திப மங்குலி விரல் நீளம் கடிகை விஸ்தாரம் பங்கு 21, அடித்தொடாரம் பங்கு 3 யவை 8 அனுமிகைவிரல்நீளம் பங்கு 3, யவை 1, கனிஷ்டிகைவிரல் நீளம் பங்கு 2½, நகவிஸ்தாரம் பங்கு முன்சொன்னபடியே அந்த விரல் விஸ்தாரத்தைப்பற்றியது, வாகுமத்திபத்தில் விஸ்தாரம் பங்கு 8௦, முழங்கைவிஸ்தாரம் பங்கு 7, முழங்கைக்குக் கீழ், முழங்கைவிஸ்தாரம் பங்கு 6, மணிப்பந்தம் விஸ்தாரம் பங்கு 4½, மணிப்பந்தத்தின்மேல் உள்ளங்கைநீளம் பங்கு 7, நடுவிரல் நீளம் பங்கு 6½, தற்சனி விரல்நீளம் பங்கு 6, அனுமிகைவிரல் நீளம் பங்கு 6½, கனிஷ்டிகை விரலநீளம் பங்கு 4, அங்குஷ்டவிரல்நீளம் பங்கு-4.

கையில் பெருவிரல் விஸ்தாரம் பங்கு-1, யவை-2, தற்சனி விரல்விஸ்தாரம் பங்கு-1, யவை-1, அனுமிகை விரல்விஸ்தாரம்-பங்கு-1, கனிஷ்டிகைவிரல்விஸ்தாரம், யவை6, விரல்உயரத்தை ஆறு

கூறுசெய்து அதில் ஒருகூறு நகஞ்செய்வான், இந்தக்கைவிரல் உயரம் 4-செய்யவும், மொழிக்குப்பங்கு-2, யவை-5, கனிஷ்டிகை விரல்மொழிக்கு மேல்பங்கு-உ, யவை-கூ, முதல்மொழிக்கும் மணி பந்தத்துக்கும் நடுவாக மொழிசெய்யவும்

உள்ளங்கை அடிவிஸ்தாரம் பங்கு-6½, அங்குஷ்டவிரலுக்கும் தர்சனிவிரலுக்கும் நடுவெளிநீளம் பங்கு-3½, அங்குஷ்ட அடிவிரலுக்கும் மணிப்பந்தத்துக்கும் நடுவெளிக் குளிமாறுபோலே பங்கு-4 மணிப்பந்தத்துக்கும் அஸ்ததலம் பங்கு-2½, கனிஷ்டிகை நீளம் பங்கு-1, விரலடியிலே மாங்கிஷம் பூராவாய் 2-பங்கு காணச்செய்வான், பெருவிரல் குளிமாறுபோலே இருக்கிறயிடம் பங்கு-2,(உள்ளங்கையிலே சங்குபோலவும், சக்கரம்போலவும், திரிசூலம்போலவும், பதுமம்போலவும், குசலத்தொடர்போலவும் கையிலே சூடரேகையாய் அஸ்தம் செய்வான்.) காதுக்குப்பங்கு முப்பத்திரண்டுஇரண்டுகோதுக்குமுன் விருத்தம் முன்பங்கு-22, ரெண்டுகாதுக்குபின் விருத்தம் பங்கு-கஉ, காதுக்கு விஸ்தாரம் பங்கு-2.

நேத்திராந்தத்தில் காணந்தம் பங்கு-க, நடுநெற்றியிலிருந்துகாதுக்குப் பங்கு-கூ, கேசாந்தத்துக்கும் நேத்திராந்தத்துக்கும் புருவஞ்செய்யவும், புருவமட்டத்திற் காதுசெய்யவும், புருவமட்டத்துக்கும் காது அரைப்பங்குஎத்தியும் குறைச்தும் செய்யலாம். புருவணிவிஸ்தாரம் அளவு-க. புருவம் சிங்காரம்போலவும் இளம்பிறைபோலவும் செய்யலாம். அடிப்புருவம் விஸ்தாரம் பங்கு-½ கண்புருவநீளம்-ரு கண்ணுக்குள்ளே சுவேதமண்டலம் பாரிசம்பங்கு-க, யவை-க கிருஷ்ணமண்டலம் யவை-கூ. சோதிமண்டலம் யவை-க, ஒருயவையைப் பங்குபண்ணி யதிலொருபங்கு சூட மண்டலஞ் செய்யலாம் கண்ணின்நீளம் பங்கு-ரு. கண்விஸ்தாரம் யவை-சு. கண்ணுக்குள் ரெத்தமண்டலம் யவை-க½, கண்ணுக்கு மேல்நீளம் யவை-உ¾ கண்ணிமைக்கும் புருவத்துக்கும் பங்கு யவை-சு, மூக்கு யவைபாரிசம் கழுத்துப்பங்கு-உ. யவை பங்கு-உ, முகபடாந்தத்தைப்பற்றி நடுமூக்கு விஸ்தாரஞ்செய்யவும், நடுமூக்கைப்பற்றி யடிமுக்குச்செய்யவும். கோசுமூலத்திலிருந்து மூக்குசாரம் பங்கு-உ, மூக்குரந்திரம் விஸ்தாரம் யவை-எ½, ரந்திரத்தின் இரண்டுவிஸ்தாரம் யவை-ரு மூக்கின்அகலம் எள்ளுப்பூப்போலே செய்யலாம் மூக்குப்படாந்தம் எள்ளுப்பூவில் மாச்சக்கொட்டையைப் பிளந்து ஒட்டினதுப்போலேயிருக்கவும். மூக்குப்பிடைஉயரம் பங்கு-க, மூக்கு நுனிவிஸ்தாரம் யவை-உ, மூக்குநுனியவை-க, தலம்பிதமாகச் செய்வான்.

ரோசிகீளம் யவை-௪½, ரோசியுபரத்தில் பாதிரோசிவிஸ்தார மேல் வாயுதடுகீளம் பங்கு-௪, யவை-௨, மேலுதடுவிஸ்தாரம் யவை ௧0 நுனியவை-௯, நுனிவாயாய்ப்பண்ணுவான்,

உதடு வுயரம் யவை-௧0, உதடுக்குள்ளே யவை-௨, உதடுக்குள்ளே தாழ்த்திய யவை-௩, முன்மேல்வாய்ப்பரப்புபங்கு-௩, விஸ்தாரம்செய்யலாம். விஸ்தாரம் பங்கு-௧, யவை-௨, கேளம்பிற்பாடு பங்கு ௨-செய்வான். கடைக்கண்ணிலிருந்து காதுக்கு நடுவணி பங்கு-எ, காதுகீளம் பங்கு எ-யென்பது.



## விமானஞ்செய்கிறதற்குவிபரம்

கிராமத்துக்கும் சுவாமிக்கும் பிரபுவுக்கும் ஆயாதியில்பொருந்தின பிரஸ்தாரத்தை யிரட்டித்து இருபத்தெட்டுப் பாகஞ்செய்து அதிஷ்டானங் கூறு-௩, பாதவர்க்கங்கூறு-௯, பிரஸ்தாரங்கூறு-௩ கர்னக்கூறு-௫, பிரஸ்தாரங் கூறு-௨, கழுத்துக்கூறு-௩, பண்டிகை கூறு-௪½, ஸ்தூபி கூறு ௧½, ஆக பாகம் ௨அ-ம் சரி.

அதிஷ்டான முயரமெடுத்து இருபது கூறுசெய்து பாதவர்க்கக்கூறு-௫, செகதி கூறு-௫, குமுதகம் கூறு-௫, பட்டியல்கூறு-௫, ஆக கூறு-௨0ம் சரி.

பாதவர்க்கம் உன்னிதமெடுத்து எழுகூறு செய்து கனதைக் கூறு-௨, கம்பிக்கூறு-½. மூனேக்கூறு-௧½ மாரக்கூறு-௨, மேற்கம்பிக் கூறு-௧, ஆக கூறு எ-ம் சரி.

செகதியுன்னித மெடுத்து எழுகூறுசெய்து செகதி கூறு-௫, பிள்ளைபற்பம் கூறு-௧, மேல் கம்புக்கூறு-௧, ஆக கூறு எ-ம் சரி.

குமுதகம் உன்னிதமெடுத்து பதினொருகூறுசெய்து கீழ்க்கம்பு கூறு-௧, பற்பம் கூறு-௧. குமுதகம் கூறு-எ, மேல்பற்பம் கூறு ௧, கம்பு கூறு-௧, ஆக கூறு ௧௧-ம் சரி.

பட்டியல் உன்னிதமெடுத்து ஒன்பது கூறுசெய்து கண்டங் கூறு-௪, கம்பு கூறு-௧, மழை கூறு-௩, கம்பு கூறு-௧, ஆக கூறு ௯-ம் சரி.

பாதவர்க்கம் உன்னிதமெடுத்து எழுகூறுசெய்து வேதியல் கூறு-௧, வேதியல் உன்னிதமெடுத்து ஒன்பது கூறுசெய்து கண்டங் கூறு-௪, கீழ்க்கம்பு கூறு-௧, மார் கூறு-௧½, தலைபிடை கூறு-௧½, மேற்கம்பு கூறு-௧, ஆக கூறு ௯-ம் சரி,

பாதவர்க்கம் உன்னிதமெடுத்து மூன்று கூறுசெய்து காலுயரங் கூறு-௨, அடுக்குசரங் கூறு-௧, ஆக கூறு ௩-ம் சரி.

அடுக்கு உன்னிதமெடுத்துப் பத்தொன்பது கூறுசெய்துதாடி கூறு-2, குடங் கூறு-4, பலகை கூறு-5, வீரகண்டங்கூறு-3, போதியல் கூறு-5, ஆக கூறு 19-ம் சரி.

தாடியுன்னிதமெடுத்து ஐந்துகூறுசெய்து கீழ்கம்பு கூறு-1, மார் கூறு-2, தலையிடைக் கூறு-2, ஆக கூறு 5-ம் சரி.

குடம் உன்னிதமெடுத்து ஏழுகூறுசெய்து கீழ்க்கம்பு கூறு-1, குடம் கூறு-சு, ஆக கூறு 7-ம் சரி.

பலகை யுன்னிதமெடுத்து நான்குகூறுசெய்து மார்கூறு-1½, மழை கூறு-½, தலையிடைக் கூறு-உ, ஆக கூறு ச-ம் சரி.

விரற்கண்டம் போதியல் உன்னிதமெடுத்து எட்டுக்கூறுசெய்து போதியல் கூறு-ரு, வீரகண்டம் கூறு-௩, ஆக கூறு அ-ம் சரி

பிரஸ்தானம் உன்னிதமெடுத்து இருபத்துமூன்றுகூறுசெய்து உத்தரங் கூறு-ச, எழுதகம் கூறு-ரு, கபோதகம் கூறு-க0, யாளம் கூறு-ச, ஆக கூறு உ௩-ம் சரி,

உத்தரம் எழுதகம் உன்னிதமெடுத்து ஐந்துகூறுசெய்து கம்பு கூறு-க, மார் கூறு-உ, தலையிடைக் கூறு-உ, ஆக கூறு ரு-ம் சரி.

கபோதகம் உன்னிதமெடுத்துப் பதினொருகூறு செய்து அடித்தொங்கல் கூறு உ, அனுக்கம்பிக்கூறு க, கபோதகம்கூறு-அ, ஆக கூறு கக-ம் சரி.

யாளம் உன்னிதமெடுத்து ஒன்பது கூறுசெய்துவேதியல்கால் சரங்கூறு-ச, பிரஸ்தாரம் கூறு-க, கழுத்துக் கூறு-½, பண்டிகை கூறு-உ, பற்பம் கூறு-க, ஸ்தூபி கூறு-½, ஆக கூறு கூ-ம் சரி.

---

## கெற்பகிரகத்தின்விபரம்.

ஒருமுழம் முதல் ஐந்துமுழம்வரையில் ஏகதளவிமான கெற்பகிரகம், கிராமத்துக்கும்-சுவாமிக்கும்- பிரபுவுக்கும்-ராஜாவுக்கும்-கர்த்தாவுக்கும் பொருந்தின ஆயாதிப்பிரமாணஞ்செய்யவும்,

நேமுகமான முழம் மூலப்பிரசாதமென்று பேராம். ஆயாதிப் பொருத்தம் வானப்பிரவாய்க் சுற்றுமுழுத்தைக் குழிமாறிக் கண்டதுகையை ஆயாதி பொருந்தும்படியாய் ஒரு நிதானமாக இத்தனை முழமென்றறிந்து அதற்கு வானப்பிரவாய்க்குக் கால்பிரவாய் பாரிசத்துக்குக் கால்முழம் சாண்கழிவுபோட்டு கால்பிரவாய்க் கலத்தை யிரட்டித்து முழத்தை யெட்டுப்பங்காக்கி யதிலொருபங்கு குறடாம் இரண்டுபங்கு காலுயரம், ஒருபங்கு பிரஸ்தானம், உத்தரம்முதல் யாளமட்டக்கூறு-க, அதன்மேல் ஏகதளவிமான வேதியல்கூறு-க, அதன்மேல் உத்தரம்முதல் தூக்கோடு பண்டிகை பலிகை பற்ப மட்டம்வரைக்கும் கூறு-உ, அதன்மேல் அடுக்குச்சரங் கூறு-க, இது பெரும்பங்கு சரி.

கழுத்து உன்னிதமெடுத்து ஐந்துபாகஞ்செய்து அதை யேழு பாகஞ்செய்து வேதியல் பங்கு-ஒன்று, மேல்நின்ற வுன்னிதமெடுத்துமேல்நின்ற கழுத்துக் கூறுசெய்கிறது.

வேதியலுன்னிதமெடுத்து ஒன்பது கூறுசெய்து கண்டங் கூறு-௪, கீழ்க்கம்பு கூறு-௧, பற்பம் கூறு-ஒன்றரை தலையிடைக்கூறு-ஒன்றரைமேற்கம்பு கூறு-௧, ஆக கூறு கூ-ம் சரி.

பண்டிகை யுன்னிதமெடுத்து ஐந்துகூறுசெய்து பிரஸ்தாரம் கூறு-௧, பண்டிகை கூறு-ரு, மேல்மார்க்கட்டு சந்திரனில் பலிகை பற்பம் கூறு-௧, ஆக கூறு ரு-ம் சரி.

பிரஸ்தாரம் உன்னிதமெடுத்து இருபத்தொரு கூறுசெய்து உத்தரம் கூறு-௪, எழுதகம் கூறு-ரு, நாக்கோடு கூறு-அ, கவுந்தபற்பம் கூறு-௪, ஆக கூறு உ௧-ம சரி.

பண்டிகைக்குமேல மாலைமுதல் பலிகைமட்டம்வரைக்கும்உன்னிதமெடுத்து பதினைந்து கூறுசெய்து மாலைக்கட்டுக் கூறு-உ, சந்திரனிலைக் கூறு-உ, பலிகைபற்பம் கூறு-௧௧, ஆக கூறு ௧ரு-ம் சரி.

விமானத்தின் உன்னிதமெடுத்து இருபத்தொன்பதுபாகம்செய்து மனைக்கூறு-உ௫, முனைக்கூறு-௧, மார்க்கூறு-உ, மேல்க்கம்புக்கூறு-௧, கீழ்க்கூறு-௧, ஆருடாங்கூறு-ரு, கீழ்க்கம்புக்கூறு-௫, புடங்கூறு-௧0வ, ஆடேகூறு-இரண்டரை, கீழ்கூறு-½, ஸ்தூபிகூறு ௭, ஆககூறு உகூ-ம் சரி.

அனுஷ்டானம் உன்னிதமெடுத்து மூன்று கூறுசெய்து காலப்பிரவாயைத்தொட்டு பஸ்துமமானவரைக்கும் கூறு-௧, இந்த ஒருகூறையும் ஆறுகூறுசெய்து செகதிமுன்வாய்க்கூறு-ரு, காலபற்பம் கூறு-ரு, செகதியொழுங்கில் எழுதகஞ்செய்கிறது, பலகையொழுங்கில்பலகைசெய்கிறது, பற்பவொழுக்கில் எழுதகஞ்செய்கிறது, பஸ்துமம் பூமம் பூமுனையொழுங்கில் கபோதகஞ்செய்கிறது,

உத்தரவொழுங்கில் சொருதசாலைக் கூறு-½, அகாரைகூறு-௧ கர்னக்கூறு ௧-ம் சரி.

---

## கெற்பகிரகம்

அர்த்தமண்டபம். அந்திராள்மண்டபம். மகாமண்டபம், சேர பனமண்டபம், ருத்திரகோபுர மண்டபம். அனுமணி மண்டபம் அனுமணியென்றுபெயர்.

## மட்டவேலைக்குசரண்களத்தி விபரம்.

ஒருகால் பரப்புவைத்துக்கொள்கிறது.

கெற்பகிரகம் எவ்வளவோ! - அதை ஒருதிண்டாகவைத்து கோண அர்த்தமண்டபம் ¼ ¾ சாண்வைத்துக்கொள்கிறது.

மகாமண்டபம் க-க⅛-உ வைத்துச் செய்யவும்.

யாளி மகாமண்டபம் க-க⅛-உ வைத்துச் செய்யவும்.

மகாமண்டபம் அகலம்போல் சரிசெய்யவும், அல்லது ஒருகால் இரண்டுகோல்நீளங் கூட்டியுள்ளகாலும் விட்டுச்செய்யவும்.

கெற்பகிரகத்தை மூன்றுபத்திஆறுபத்தியாவது செய்யலாம் அத்ர்தமண்டப மப்படிச்செய்யலாம், மகாமண்டபத்தை மூன்று பத்தி ஆறுபத்தி பனிரண்டுபெத்தியாகவும் செய்யலாம், சாலை மஞ் சம்விட்டுச்செய்யலாம், விமானம்-கெற்பகிரகம் எவ்வளவோ! அந்த வுயரத்துக்கு ஒன்றுக்கொன்று ஏகதளஞ்செய்யவும்,

இவ்வியதளம்-ஒன்றுக்கொன்றரைசெய்யவும் நிராடிமண்டபம் திண்டு க-க½ செய்யவும் கெற்பகிரகம் - அகலங்கண்டதைப்போல வே உயரஞ் சரிசெய்யவும், அல்லது ஒருகாலுயரங்கூட்டிச் செய்ய வும். அர்த்தமண்டபம் அந்திராள்மண்டபம் கெற்பகிரகம்போலவே சரிமண்டபம் மட்டாகச்செய்கிறது, மகாமண்டபம் குமுதகமட்டந் தளவரிசைசெய்யவும், மகாமண்டபம்முதல் தளவரிசைமட்டமாகச் சோபனமணிமண்டபம் தளவரிசைக் குறடுவிட்டுச்செய்யவும், அது முன்னாலே மண்டபஞ்செய்தால் கெற்பகிரகவானமட்டம் தளவரி சைசெய்யவும் கெற்பகிரக படதானவொழுங்கில் வானம்மகாமண் டபம் இரண்டு கால்பரப்புச் செய்யவும்.

## பஞ்சவர்ணவேலை மட்டவேலை விபரம்

குமுதகம் சூஸ்திரம் மூன்றுகால், மூன்றரைக்கால் பரப்புவை த்துச் செய்யவும் உள்படக்கனத்தைக் கால்முழம் அரைமுழங் கூட் டிச் செய்யவும், படக்கன நீளம் உள்படக் கூட்டிச்செய்யவும்.

## துய்யசமயம் உயரங்கொள்ளவிபரம்.

கெற்பகிரகம் ஒருதிண்டாகவைத்து திண்டு க-க½-உ-ரு சரி யாகவைத்துச் செய்யவும், திவியகுறடு அகலம் சுவாமிலாடஞ்செய் யவும், சபைக்குறடு கெற்பகிரக அகலத்தை ரு-ல் க-ல் ச-ல் க-ல் வைத்துச்செய்யவும், வாசல்கெற்பகிரகத்தை ஒருதிண்டாகவைத்து ரிஷபக்குறடு திண்டு-ரு, திண்டு-எ, திண்டு-கூ, திண்டு-கக, இந்தப் படி செய்யவும், அகலத்துக்குஉள்ளு ¾-க-க¼ அப்பாய்ச்செய்யவும் ருத்திரகோபுரஞ்செய்யத் திண்டு ச-சு-அ-கச-கசு-கஅ-உ0-உஉ- உச-உசு-உஅ-ரு0-ருஉ இந்தப் படிக்குச்செய்யவும்.

# சர்வார்த்த சிற்பசிந்தாமணி

முற்றிற்று.

மகாமகோபாத்தியாய, டாக்டர்

[illegible]

# ரிஜிஸ்டர் அறிவிப்பு

இதனால் சகலமான புஸ்தகவியாபாரிகளுக்கும் அச்சுக்கூடத்தலைவர்களுக்கும், மற்றும் எனையோர்களுக்கும் அடியிற் கையொப்பமிட்ட யான் அறிவிப்பது யாதெனில்.

1915ம் ஞு ஜூன் மீ 1வ தேதி சென்னை இராயபுரம் வடவண்டை மாதாகோவிலைச்சார்ந்த பிள்ளையார் கோவில் சந்து 3 வது நெம்பர் வீட்டில் யிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ சோதிடம் சுப்பிரமண்ணியமுதலியார் தமையனார் ம-ா-ா-ஸ்ரீ சடையப்பமுதலியார் குமாரர் ம-ா-ா-ஸ்ரீ சோதிடம் வீராசாமிமுதலியாரவர்கள் சொந்தத்தில் வசனரூபமாக இயற்றி அச்சிட்டு வெளியிட்டிருந்த சிற்ப சிந்தாமணி யென்னும் புத்தகத்தின் சகல பாத்திதைகளையும் மேற்படியாரிடமிருந்து நான் சுத்த கிரையம் செய்து பெற்றுக்கொண்டபடியால் மேற்படி சிற்ப சிந்தாமணியுடன் இன்னும் அனேக விஷயங்களை வசனரூபமாய் நூதனமாக சேர்த்து சற்வார்த்த சிற்பசிந்தாமணி யென்னும் பெயருடன் அடியில் கையொப்ப மிட்டிருக்கிற என்னால், அச்சிட்டு வெளியிட்டிருக்கிறபடியால் மேற்படிபுத்தகத்தை என்னுடைய அனுமதி யின்றி யாவராயினும் அச்சிட்டாலும், அல்லது மேற்படி புத்தகத்திலிருக்கிற எந்த அமிசங்களையாவது எடுத்து அச்சிட்டாலும் 1867ம் ஞுத்திய 25 வது ஆக்டின் உட்பிரிவுகளின்படி சகல நஷ்டத்திற்கும் ஜவாப்தாரியாவதுடன் கிருமினலுக்கும் பாத்திய மாவார்களென்பதை இதன் மூலமாய் அறிவித்திருக்கிறேன்.

இப்படிக்கு,

கோ. செல்லப்பமுதலியார்

நெ. 55, நம்மாழ்வார் தெரு,

சௌகார்பேட்டை போஸ்டு, சென்னை.

# விளம்பரம்.

இதனால் சகல கனதனவான்களுக்கும் வியாபாரகடுக்கும் தெரிவிப்பது யாதெனில் அடியிற்கண்ட புத்தகங்களும் இன்னும் இதரமான பலவித தமிழ் நாவலஸ்களும் தெலுங்கு சமஸ்கிருதம் நூலுக்கு புத்தகங்களும் விலை சகாயமாய் பெற்றுக்கொள்ளலாம்.

| | | | |
|---|---|---|---|
| திருவாசகவுரை | 2 | 0 | 0 |
| தெலுங்கில் அனுபோகவைத்தியம் 4 காண்டம் | 2 | 0 | 0 |
| சர்வார்த்த சிற்பசிந்தாமணி நயம் பதிப்பு | 2 | 0 | 0 |
| மேற்படி 40 ராத்தல் ரப்புதிக்குகடிதம் | 1 | 8 | 0 |
| யாப்பருங்கலக்காரிகை புதியபதிப்பு | 1 | 0 | 0 |
| சங்கீதஸ்வரபூஷணிபுதியபதிப்பு | 0 | 12 | 0 |
| ௸ 2-ம் பாகம் | 1 | 0 | 0 |
| மாட்டுவாகடம் தனி | 0 | 12 | 0 |
| அசுவசாஸ்திரம் | 0 | 12 | 0 |
| இரண்டு ஒருகட்டடம் காலிகோபயிண்டு | 1 | 4 | 0 |
| பிரதாபமுதலியார் சரித்திரம் | 1 | 0 | 0 |
| பஞ்சதசப்பிரகரணம் | 1 | 0 | 0 |
| திருவள்ளுவர் நவரத்தின சிந்தாமணி 800-பாட்டு | 1 | 0 | 0 |
| சோதிடசில்லரைகோர்வை நயம்பதிப்பு | 2 | 0 | 0 |
| சோதிட நவகிரகமாலை | 0 | 8 | 0 |
| சோதிட பாலபாடம் | 0 | 8 | 0 |
| சாதகரகசியம் | 0 | 12 | 0 |
| நூதன கலியாணபாட்டு | 0 | 4 | 0 |
| 20-கட்டளை ஒன்றாய் சேர்ந்த கட்டளைதிரட்டு | 0 | 12 | 0 |
| தி-அப்பாவுபிள்ளைநன்னெறி அரிசந்திரவிலாசம் | 2 | 0 | 0 |
| முகியித்தீன் மாலை 126-சயிட்டுள்ள புத்தகம் | 0 | 12 | 0 |

இப்படிக்கு
கோ. செல்லப்பமுதலியார்
நெ, 55, நம்மாழ்வார்தெருவு,
சௌகார்பேட்டை போஸ்டு, சென்னை.